ஸ்ரீ:

ஸ்ரீமதே நிகமாந்தமஹாதேஶிகாய நம: ॥

[illegible]

## அனுமானாத்யாயம்—முதல் ஆஹ்நிக விவரணம்.

1. (ச்லோ.) ப்ரத்யக்ஷாத்யாயத்திலே ப்ரத்யக்ஷத்தைப்பற்றிய நிரூபணம் நடந்தது. மேலே சப்தாத்யாயத்திலே சப்தமானது நிரூபிக்கப்படும், மத்தியில் அனுமானத்தைப் பற்றிய நிரூபணமானது நடைபெறுகிறது. ப்ரத்யக்ஷத்திற்கும் சப்தத்திற்கும் மத்தியில் அனுமானத்தை நிரூபணம் செய்வதற்குக் காரணம்—அனுமானமானது ப்ரத்யக்ஷத்தை தனக்குக் காரணமாகக் கொண்டிருப்பதும், சப்தத்திற்குத்தான் காரணமாயிருப்பது மாகும். ஒரு ஹேதுவைக் கொண்டு மற்றொன்றை அனுமானம் செய்வதற்கு முன்பே அந்த ஹேதுவிற்கு ஸாத்யத்தோடு நியதஸம்பந்தத்தை (வ்யாப்தியை) யும் அந்த ஹேதுவையும் ஸாக்ஷாத்காரம் செய்திருக்கவேண்டும். ஆகவே ப்ரத்யக்ஷமானது அனுமானத்திற்குக் காரணமாகிறது.

சப்தத்தினால் போதம் உண்டாவதற்கு அனுமானம் அபேக்ஷிதமாகிறது. ஒருவனுடைய வார்த்தையைக் கேட்டு மற்றொருவன் அவ்வார்த்தையின்படி செய்யுமிடத்திலே இதைக் கண்டிருந்த பாலனுக்கு இவ்வாறு அனுமானம் ஏற்படுகிறது. அதாவது—இந்த சப்தத்தினால் போதம் உண்டாகி அதன்பேரில் இந்த காரியத்தை இவன் செய்திருக்கிறான் என்பதாகும் அவ்வனுமானம். பிறகு இன்ன பத

மானது இன்ன அர்த்தத்தை போதிக்கும் சக்தியுடையது என்பதாக சக்தியை அறிகிறான். பிறகு சப்தத்தினால் போதம் (சாப்தபோதம்) உண்டாகிறது. ஆகையாலே சப்தத்திற்கு அனுமானத்தின் அபேக்ஷை உண்டு. இந்த க்ரமத்தை அனுஸரித்துப் ப்ரத்யக்ஷத்திற்குப் பிறகும் சப்தத்திற்கு முன்புமாக அனுமானத்தை நிரூபிக்கிறது.

வ்யாப்தி முதலியவை அனுமானத்திற்கு உபகாரங்களாகும். அவற்றுடன் கூட அனுமான நிரூபணம் செய்யப்படுகிறது.

அனுமானமாவது—ஒரு வஸ்துவோடு நியத ஸம்பந்தம்பெற்ற மற்றொரு வஸ்துவை அவ்வாறு நியதஸம்பந்தம் பெற்றிருப்பதாக அறிந்து அதைக்கொண்டு அந்த நியதஸம்பந்தமானது எந்த வஸ்துவோடு ஏற்பட்டிருக்கிறதோ அந்த வஸ்துவை நிச்சயம் செய்கை. (அக்னியோடு நியதஸம்பந்தம்பெற்ற தூமத்தைக்கொண்டு அக்னியை நிச்சயிக்கை என்கை.)

அவ்வனுமானமானது யதார்த்தமே. ஏனெனில்—தூமஜ்ஞானம் முதலிய காரணத்திற்கு யாதொரு தோஷமும் இல்லை. பர்வதத்தில் அக்னியை அனுமானம் செய்தபிறகு அங்கு அக்னி இல்லை என்பதாக நிஷேத புத்தியும் உண்டாகவில்லை. ஆகவே அனுமானம் ப்ரமாணமாகிறது. மேலும்—

2. (ச்லோ.) அனுமானம் ப்ரமாணமன்று என்பதைக் கண் முதலிய இந்த்ரியத்தினால் அறிய முடியாது. அவ்விந்த்ரியமானது ஞானத்தை க்ரஹிக்கும் சக்தியில்லாதது. அனுமானம் அப்ரமாணம் என்பதை அனுமானத்தினாலேயே அறிவதாகில் அப்பொழுது அனுமானத்தை அப்ரமாணம் என்பதாகக் காட்டும் அனுமானமானது ப்ரமாணமாக வேண்டும். ஆகவே அனுமானமெல்லாம் அப்ரமாணமென்பது விருத்தமாகும்.

3. அனுமானமானது ஸம்சயரூபமே யன்றி ப்ரமாணமன்று என்பதுவும் கூடாது. இப்படியாகில் இந்த ஹேதுவினால் இந்த அர்த்தத்தைத் தீர்மானித்தேன் என்பதான அனுபவமும் அவ்வனுபவத்தினால் அதில் ப்ரவ்ருத்தியும் எல்லோருக்கும் உண்டாகின்றதே. இது விருத்தமாகுமே. அக்னியை அனுமானம் செய்யும்பொழுது அக்னி என்பதாகவே நிச்சயம் உண்டாகிறது. ஆகவே 'இன்ன தர்மம் உடையது என்பதாக ஒரு தர்மத்தை இட்டும் நிச்சயம் உண்டாவதில்லை எனக்கூடாது.

4. அனுமிக்கப்படும் வஸ்துவைப்பற்றிய நிச்சயமானது அனுமானத்தினுல் ஏற்படாவிட்டாலும் ஸந்தேஹத்தினுலும் ப்ரவ்ருத்தி முதலியதுகூடுமே என்று சொல்லுகின்றவன் இவன். ப்ரத்யக்ஷ ஸ்தலத்திலும் ஸம்சயமே அல்லது நிச்சயம் இல்லை. ஸம்சயத்தினுலேயே ப்ரவ்ருத்தி முதலியது ஏற்படுகிறது என்பதாகக் கொள்ளலாமே. அனுமானத்தை நிச்சயரூபமாகக் கொள்ளுவதில் கௌரவம் பாதகம் என்றுல் அந்த கௌரவம் ப்ரத்யக்ஷத்தை நிச்சயரூபமென்று கொண்டாலும் துல்யம். ப்ரத்யக்ஷ ஸ்தலத்தில் நிச்சயமே ஏற்படுவதாக அனுபவம் இருப்பதினுல் ப்ரத்யக்ஷஸ்தலத்தில் யாதொரு பாதகமும் இல்லை என்றில் அனுமான ஸ்தலத்திலும் நிச்சயம் ஏற்படுவதாகவே அனுபவம் ஆகையால இங்கும் பாதகம் ஒன்றும் சொல்லுவதற்கில்லை. ஆகவே பாதகம் உண்டு என்பதும் இல்லை என்பதும் ப்ரத்யக்ஷத்தை நிச்சயரூபமாகக் கொள்ளுவதிலும் துல்யமானதே.

(பூ.) சார்வாகன் சொல்லுவதாவது—

(ச்லோ.) பர்வதத்திலே உள்ள அக்னியோடு ஹேதுவிற்கு நியத ஸம்பந்தத்தை (வ்யாப்தி) அறியவில்லை ஆகையால் பர்வதத்திலுள்ள அக்னியைப் பர்வதத்திலே அனுமானம் செய்யமுடியாது. பொதுவாக அக்னி ஸாமான்யத்தை' அனுமானம் செய்வதாகில் நியதஸம்பந்தத்தை (வ்யாப்தி) அறியும்பொழுதே அக்னி ஸாமான்யத்தைப் பற்றிய நிர்ணயமானது பொதுவாக ஏற்பட்டுவிட்டதால் மறுபடி அக்னி ஸாமான்யத்தை அனுமானம் செய்வதானது தீர்மானிக்கப்பட்ட வஸ்துவையே ஸாதிப்பதாகிய (ஸித்தஸாதனம்) தோஷம் உடையது இப்படி இரண்டு விதமாகவும் பர்வதத்திலே பொதுவாகவோ விசேஷித்தோ அக்னியைப் பற்றிய அனுமானம் கூடாது. இவ்வாறுகவே மற்ற அனுமானங்களிலும் தோஷம் ஏற்படுவதினுல் அனுமானம் என்கிற ப்ரஸ்தாபமே ஏது ? என்பதே அது.

மற்ெருரு ஸ்தலத்திலும் அவன் சொல்லியிருப்பதாவது—

(ச்லோ.) பர்வதத்திலுள்ள அக்னியோடு நியதஸம்பந்தத்தை அறியாமையாலும் அக்னி ஸாமான்யத்தைப் பற்றி அனுமானத்திற்கு முன்பே நிச்சயம் ஏற்பட்டிருப்பதினுலே ஸித்தஸாதனம் என்கிற தோஷம் ஏற்படுவதினுலும் இரண்டு விதமாகவும் அனுமானத்திற்கு பாதகம் ஏற்படுகிறது. இந்த தோஷமாகிற சேற்றிலே வாதிகளாகிற யானைகள் மூழ்கின்றார்கள் என்று.

(வி.) இப்படி அவன் சொல்லுவது தன்வார்த்தைக்கே முரண் படுகிறது. அனுமானம் இல்லை என்பதை ஹேதுவைக் கொண்டன்றோ அவன் ஸாதிக்கிறான்? அந்த ஹேதுவிற்குத் தன்னுடைய ஸாதயத்துடன் நியதஸம்பந்தம் (வ்யாப்தி) உண்டு என்பதாக இசையவில்லையானல் அந்த ஹேதுவினால் அனுமானத்தை நிஷேதம் செய்யமுடியாதே. ஸாத்யத்தோடு நியதஸம்பந்தத்தை ஹேதுவிற்கு இசைவதானால் அனுமானம் செய்வதற்குமுன் ஸாத்யவிசேஷத்தோடு வ்யாப்தி ஞானம் இல்லையே—என்றாற்போல் அவன் சொல்லும் தூஷணமானது அவனுக்கே ஏற்படுகின்றதே.

5. (ச்லோ.) ஹேதுவிற்கு ஸாத்யத்தோடு நியத ஸம்பந்தம் (வ்யாப்தி) என்பது கூடாது. ஒரு வஸ்துவானது மற்றொரு வஸ்துவோடு பல விடங்களில் சேர்ந்திருந்தும் ஓர் இடத்தில மாறுபட்டிருக்கிறது. ஆகவே நியதி இல்லாமையால் வ்யாப்தி என்பது கூடாது என்கிறான்.

(வி.) இங்கு நியதி இல்லாமையை ஹேதுவாகக்கொண்டு வ்யாப்தி இல்லாமையை இவன் ஸாதிக்கிறானே இந்த ஹேதுவிற்குத் தன்னுடைய ஸாத்யத்தோடு வ்யாப்தி உண்டா இல்லையா? உண்டாகில் வ்யாப்தியை இசைந்தாச்சுது. வ்யாப்தியே இல்லை என்று ஸாதிக்க முடியாது. வ்யாப்தி இல்லையாகில் இந்த ஹேதுவைக்கொண்டு வ்யாப்தி இல்லாமையை ஸாதிக்க முடியாது. ஆகையால் இவன் யுக்தியானது பாதகமாகமாட்டாது.

6. (ச்லோ.) தூமத்தைவிட்டு அக்னியானது அயோகோளகத்திலே (இரும்பு உருண்டை) இருக்கிறது. அதைப்போலவே மற்ற ஹேதுவும் தன் ஸாத்யத்தைவிட்டு இருக்கும் (வ்யபிசாரம் உள்ளது) நியத ஸம்பந்தம் என்பது கிடையாது என்கிறான்.

(வி.) இப்படி சொல்லக்கூடாது, சுல்லா ஹேதுவிற்கும் ஸாத்யத்துடன் நியதஸம்பந்தம் இல்லையாகில் இவன் சொல்லுகிற ஹேதுவிற்கும் தன் ஸாத்யத்துடன் நியதஸம்பந்தம் (வ்யாப்தி) இல்லையே, ஆகவே அப்படிப்பட்ட ஹேதுவைக்கொண்டு வ்யாப்தி இல்லாமையை (வ்யபிசாரம்) இவன் ஸாதிக்க முடியாது. இவன் சொல்லும் ஹேதுவிற்கு மாத்திரம் ஸாத்யத்தோடு வ்யாப்தி இருக்குமானால் ஒரு ஹேதுவிற்கும் வ்யாப்தி என்பது கிடையாது என்பதாகச் சொல்லமுடியாதே.

ஆகவே பொதுவாக ஸாத்யத்தோடு ஹேதுவிற்கு நியதஸம்பந்தத்தைப் (வ்யாப்தி) பற்றிய ஞானத்தினாலேயே ஸாத்யத்தை விசேஷித்து அனுமானம் செய்வதாகக் கொள்ளவேண்டும். எந்த ஆச்ரயத்திலே ஸாத்யத்தைப் பற்றிய அனுமானம் ஏற்படுகின்றதோ அந்த ஆச்ரயத்திலே (பக்ஷம்) ஹேதுவானது இருக்கிறது என்கிற ஞானமும் வேண்டும். இந்த ஹேதுவைப் பற்றிய ஞானமானது முன்கூறிய வ்யாப்தி ஞானத்துக்கு உதவியாகிறது. ஆகவே ஹேதுவை எந்த ஆச்ரயத்திலே அறிகின்றோமோ அந்த ஆச்ரயத்தில் (பக்ஷம்) உள்ள ஸாத்யத்திற்கே அனுமானம்.

(உதா.) தூமத்தைப் பர்வதத்திலே பார்க்கிறோம். அக்னியோடு தூமத்திற்கு வ்யாப்தியையும் பொதுவாக அறிந்திருக்கிறோம். பொதுவாக ஏற்பட்டுள்ள வ்யாப்தி ஞானத்தினாலே தூமம் இருக்குமிடமாகிய பர்வதத்திலே உள்ள அக்னியை அனுமானம் செய்கிறோம் என்பது லோகத்தில் இப்படி கண்டிருப்பதால் இதை இசையவேண்டும்.

அனுமானம் எல்லாம் ஸம்சயரூபமே என்கிற சார்வாக பக்ஷத்திலும் ஹேதுவிற்குப் பக்ஷத்திலே ஸம்பந்தத்தைப் பற்றியும், ஸாத்யத்தோடு நியத ஸம்பந்தத்தைப் பற்றியும் இரண்டு ஞானங்கள் இருந்தால் ஸம்சயம் உண்டாவதாகவும் இல்லாவிடில் ஸம்சயமும் இல்லை என்பதாகவும் கொள்ளவேண்டும். இவ்விரண்டு ஞானங்களும் ஸம்சயத்திற்கு ஸாமக்ரீ (காரண ஸமுதாயம்) என்று தேறுகிறது. இவற்றை ஸம்சய காரணங்களாக இசையாவிடில் அனுமானத்தினால் ஸாத்யத்தைப் பற்றிய ஸம்சயமும் உண்டாகாதொழியும் (ஆகவே நாம்சொல்லும் அனுமான ஸாமக்ரியை அவனும் இசைகிறான்). பொதுவாக ஏற்பட்டவ்யாப்தி ஞானத்தினாலே விசேஷித்துப் பர்வதத்தில் உள்ள அக்னியைப் பற்றிய ஞானம் ஏற்படுகிறது என்பதுவும் அவனுக்கு அபிமதமே. அந்த ஞானம் ஸம்சயரூபம் என்கிறான் அவன், நாமோ நிச்சயரூபம் (அநுமிதி) என்கிறோம். பொதுவான வ்யாப்தி ஞானத்தினால் விசேஷித்து ஞானம் ஏற்படுகிறது என்பதில அவனுக்கும் விவாதிக்க வழியில்லை என்கை.

பொதுவாக ஒரு வஸ்துவைப் பற்றிய ஞானம் ஏற்படுகிறது. பிறகு அந்த வஸ்துவை விசேஷித்து அறியவேண்டும் என்பதாக இ

ச்சையானது உண்டாகிறது இந்த இச்சைக்குக் காரணங்கள் பல வற்றுள் அவ்வஸ்துவைப் பற்றிப் பொதுவாக ஏற்பட்டுள்ள ஞான மும் ஒன்று. அந்த பொதுவான ஞானத்தினாலேயே விசேஷித்து அறி யவேண்டும் என்பதாக இச்சையானது உண்டாகிறதன்றோ. அதைப் போலவே பொதுவாக ஸாத்யத்தோடு வ்யாப்தியைப் பற்றிய ஞானம் ஏற்படுகிறது. அந்த பொதுவான ஞானமானது எல்லா ஸாத்யத்தை யும் பற்றியதுதானே. அதனால் விசேஷித்து பக்ஷத்திலுள்ள ஸாத்ய த்தைப்பற்றி அனுமானம் ஏற்படலாமன்றோ என்பதாக அனுபவத் தை அனுஸரித்து நீ இசையவேண்டும்.

இந்த்ரியத்தினால் அறியக்கூடிய அக்னி முதலியவற்றையே பர்வ தம் முதலிய இடத்திலே இருப்பதாக அனுமானம் செய்யலாம் என்ப தாக வேதாந்திகள் எண்ணுகிறார்கள். இந்த்ரியத்தினால் அறியக்கூ டாத ஈச்வரன் முதலியவற்றைப்பற்றி அனுமானம் செய்வதாகில் சார் வாகன் சொல்லிய தூஷணங்கள் அவ்வனுமானத்திற்கு ஏற்படும். அவையாவன—விசேஷித்து வ்யாப்தியைப் பற்றிய நிச்சயமில்லாமை யும் விரோதமும் இவ்வாறானவை.

இவ்வாறான தோஷங்கள் ஏற்படுவதினாலேயே இந்த்ரியங்களுக்கு விஷயமாகக் கூடாததாகவேயுள்ள பதார்த்தத்தை அனுமானம் செய்வ தை நாம் விரும்பவில்லை.

ஜகத்காரணமான ஈச்வரனை சாஸ்த்ரங்களைக் கொண்டே அறிய வேணும் என்பதாக 'சாஸ்த்ரயோநித்வாத்' (ப்ர.ஸூ. ௩) என்கிற ஸூத்ரத்திலே ஏற்பட்டிருக்கிறது. இதனால் இந்த்ரியங்களுக்கு வி ஷயமாகக் கூடாதவற்றைப் பற்றிய அனுமானம் ஸரியன்று என்பது ஸூத்ரகாரருக்கும் அபிமதமானது என்று ஏற்படுகிறது.

## அநுமானம் வேறுப்ரமாணம் என்பதை ஸமர்த்திப்பது.

(பூ.) அனுமானம் ப்ரமாணமேயாகிலும் அது ப்ரத்யக்ஷத்திலே அடக்கக்கூடுமே. (ஸி.) என்பது கூடாது. இந்த்ரியத்திற்கு வஸ்து வோடு ஸம்பந்தம் ஏற்பட்ட உடனே ப்ரத்யக்ஷமானது உண்டாகி றது. அனுமானம் அப்படி இந்த்ரிய ஸம்பந்தத்திற்கு அடுத்த க்ஷ ணத்திலே உண்டாகவில்லையே.

(பூ.) ஆகிலும் இந்த்ரியத்திற்கு ஹேதுவோடு ஸம்பந்தம் ஏற்பட்டபிறகு ஹேதுவைப் பற்றிய ஞானம் உண்டாகிறது. பிறகு அனுமானம் உண்டாகிறது. இங்கு ஹேதுவைப் பற்றிய ஞானத்தை த்வாரமாகக் கொண்டு இந்த்ரியமானது அனுமிதியை உண்டுபண்ணுகிறது.

(ஸி.) என்பதுவும் கூடாது. இந்த்ரியத்துடன் ஹேதுவிற்கு ஸம்பந்தமானது இல்லாமலே ஹேதுவைப்பற்றிய ஸ்மரணம் ஏற்பட்டு அதனால் வ்யாபகமான ஸாத்யத்தைப் பற்றிய ஞானம் உண்டாகின்றதே. ஸ்மரணமானது இந்த்ரியத்தினால் உண்டுபண்ணப்பட்டதன்று, ஆகவே ஸ்மரணம் இந்த்ரியத்துக்கு த்வாரமாகாது.

(பூ.) ஆகிலும் ஹேதுவிற்கு ஸாத்யத்தோடு நியதஸம்பந்தத்தை கண்டவுடன் மனதினால் ஆத்மாவிலே வ்யாப்தியைப்பற்றிய ஸம்ஸ்காரம் (வாஸனை) உண்டாகிறது. பிறகு அதைப்பற்றிய ஸ்மரணம். ஆகவே ஸம்ஸ்காரத்தையும் ஸ்மரணத்தையும் த்வாரமாகக்கொண்டு மனஸ்ஸானது அனுமிதியை உண்டுபண்ணுகிறது. மனஸ்ஸிற்கு இவையே ஸம்பந்தம். எனில்? (ஸி) அதுவும் கூடாது.

இப்படியாகில் ப்ரத்யக்ஷமும் மனஸ்ஸினால் உண்டாகிறது என்று கொள்ளவேண்டிவரும். மனஸ்ஸோடு இந்த்ரியங்கள் சேருகின்றன இந்த்ரியங்கள் வஸ்துவோடு சேருகின்றன. பிறகு ப்ரத்யக்ஷம் உண்டாகிறது. என்பதாகவன்றோ கொண்டிருக்கிறோம். இங்கு மனஸ்ஸோடு சேர்ந்துள்ள புறவிந்த்ரியங்களுக்கும் வஸ்துக்களுக்குமுள்ள ஸம்பந்தத்தையே மனஸ்ஸுக்கும் வஸ்துவுக்கும் உள்ள ஸம்பந்தமாகக் கொள்ளலாமே. ஆகவே அந்த ப்ரத்யக்ஷமும் மனஸ்ஸினாலே ஏற்படுகிறது என்பதாகும். இது இஷ்டம்தான் என்பதுகூடாது. பாஹ்யேந்த்ரியத்தினால் உண்டாகுமது என்றும், மனஸ்ஸினால் உண்டாகுமது என்றும், ப்ரத்யக்ஷத்திலே பிறிவுகள் இருக்கின்றனவே. எல்லா ப்ரத்யக்ஷமும் மனஸ்ஸினாலேயே உண்டாவதனால் இந்த விபாகம் கூடாதே.

குடம் முதலிய வெளிப்பட்ட வஸ்துக்களோடு ஆந்தரமாயுள்ள மனஸ்ஸானது நேராக ஸம்பந்தம் பெறாது. ஆகையால் அவற்றைப் பற்றிய ஞானத்தை நேராக மனஸ்ஸானது உண்டுபண்ணுவதில்லை,

கண் முதலிய பாஹ்யேந்த்ரியங்களே அவற்றோடு ஸம்பந்தம்பெற்று அவற்றைப்பற்றிய ப்ரத்யக்ஷத்தை உண்டுபண்ணக்கூடியவை. அவ்விந்த்ரியங்களே பாஹ்யவஸ்துவைப்பற்றிய ப்ரத்யக்ஷத்திற்கு முக்கிய காரணங்களாகின்றன. பாஹ்யேந்த்ரியங்களுக்குப் பராதீனமாக இருந்து மனஸ்ஸானது பாஹ்ய வஸ்துவின் ப்ரத்யக்ஷத்திற்குக் காரணமாகின்றது. இந்த்ரியங்கள் ஸ்வதந்த்ர காரணம். மனஸ்ஸிற்கு ஸஹகாரிகள். ஆகவே அவை தனி ப்ரமாணங்கள் என்கிறீர்கள். அப்படியே வ்யாப்தியைப்பற்றிய ஞானத்திற்கு பராதீனமாக் இருந்து மனஸ்ஸானது அநுமிதியை உண்டுபண்ணுவதினுல் மனஸ்ஸிற்கு ஸஹகாரியாய் ஸ்வதந்த்ரமாயுமுள்ள வ்யாப்தி ஞானமும் தனிப்ரமாணமாகிறது.

மேலும் தூமத்தினுல் அக்னியை அநுமானம் செய்கிறேன், என்பதாக நமக்கு ஞானம் உண்டாகின்றதே இதனுல் ஞானத்தில் விஷயமாயுள்ள அக்னியைப் பற்றிய ஞானமானது ப்ரத்யக்ஷரூபமன்று. அநுமிதி ரூபம் என்று ஸித்திக்கிறது. அநுமிதியானது இந்த்ரியத்தினுல் உண்டாகின்றது என்பதற்கு இந்த ஞானம் பாதகமாகிறது.

(பூ.) முதலில் இந்த்ரியத்தினுல் வ்யாப்தி, தூமம் இவற்றைப் பற்றிய ப்ரத்யக்ஷம் ஏற்படுகிறது. பிறகு வ்யாப்தியைப்பற்றிய ஸ்மரணம் உண்டாகிறது. பிறகு அநுமிதி உண்டாகிறது. ஆகவே அநுமிதிக்குப் ப்ரத்யக்ஷமானது பரம்பரையாக (காரணத்துக்குக் காரணமாக) ஸாதனமாகிறது. அவ்வளவைக்கொண்டு அநுமிதியை ப்ரத்யக்ஷமாகக் கொள்ளில்?

(ஸி.) இது கௌணமேயன்றி முக்யமன்று. கௌணமாக ப்ரத்யக்ஷம் எனக்கொள்வதை நாம் தடுக்கவில்லை.

(பூ.) ஆகிலும் மஹானஸம் முதலியவற்றில் அக்னியைப் பார்த்திருப்பதால் அக்னியைப் பற்றிய ஸம்ஸ்காரம் (வாஸனை) ஆத்மாவில் உண்டாகிறது. ஆகவே ஸம்ஸ்காரத்தினுல் உண்டாவதினுல் இது ஸ்மரணமே அன்றி தனி ப்ரமாணமன்று. (ஸி.) என்று சொல்லக் கூடாது. ஸம்ஸ்காரத்திற்கு விஷயமாகாத பர்வதமானது அநுமிதியில் தோன்றுகிறது. ஸம்ஸ்காரத்துக்கு விஷயமாகாத பதார்த்தமானது ஸ்மரணத்தில் தோன்ருது. ஆகவே இது ஸ்மரணமன்று.

(பூ.) ஆகிலும் பர்வதம் அக்னி இவ்விரண்டையும் பற்றிய ஸம்ஸ்காரங்கள் சேர்ந்து இவ்விரண்டுகளைப் பற்றிய ஸ்மரணத்தை உண்டுபண்ணுகின்றன. ஆகவே அனுமிதியானது ஸ்மரணமாகலாமே. (ஸி.) எனவும் கூடாது. ஏனெனில்—ஏற்கெனவே கண்டுள்ள பல வஸ்துக்களைப் பற்றி ஸ்மரணமானது ஒருகாலத்திலே உண்டாகலாம். ஆகிலும் அனுபவத்திற்கு விஷயமாகாத வஸ்துவிற்கு ஸ்மரணமானது கூடாது. இங்கு பர்வதத்திற்கும் அக்னிக்கும் உள்ள ஸம்பந்தமானது விஷயமாகிறது. இந்த ஸம்பந்தமானது அனுபூதமன்றே.

(பூ.) ஆகிலும் பிறருக்கு அனுமானம் உண்டாவதற்காக ப்ரதிஜ்ஞை முதலிய சப்தத்தை வாதிகள் ப்ரயோகிக்க வேண்டுமென்று ஆகவே அனுமிதியானது சப்தத்தினால் ஏற்படுகிறது (சாப்தபோதம்). (ஸி.) என்பதாக உத்ப்ரேக்ஷை செய்யக்கூடாது. ஏனெனில்—ப்ரதிஜ்ஞை முதலிய சப்தத்தினால் போதம் உண்டானபிறகு வ்யாப்தி முதலியவற்றைப் பற்றிய ஜ்ஞானம் உண்டாகி பிறகு அனுமிதியானது ஏற்படுகிறது. சப்தத்தினால் ஸாக்ஷாத்தாக அனுமிதி உண்டாகவில்லை. ஆகவே அனுமானமானது தனிப்ரமாணமே என்று நிர்ணயம்

## வ்யாப்தியை நிரூபித்தல்.

தான் இருக்குமிடம் காலம் இவற்றுள் ஏதேனும் ஒன்றால் மற்றொன்றுக்கு மேற்படாத வஸ்துவை அதற்கு வ்யாப்யம் என்றும், குறைவுபடாத வஸ்துவை வ்யாபகம் என்றும் சொல்லுகிறது.

அதைப் பற்றிப் பெரியோர்களும் சொல்லியிருக்கிறார்கள்—

(ச்லோ) இடத்தினாலோ காலத்தினாலோ எந்தப் பொருளானது மற்றொன்றுக்குத் துல்யமாகவோ குறைவுபட்டதாகவோ இருக்கிறதோ அப்பொருளானது அதற்கு வ்யாப்யமாகும். இடத்தினாலோ காலத்தினாலோ துல்யமாகவோ மேற்பட்டதாகவோ இருக்குமது அதற்கு வ்யாபகமாகும் என்று.

இடம் காலம் இவற்றால் வ்யாப்ய வ்யாபகங்களுக்குச் சொல்லிய நியத ஸம்பந்தமானது பல உட்பிரிவுகள் உள்ளது. (1) சிலவற்றில் இடமும் ஒன்றாய் காலமும் ஒன்றாகி இருக்கும். மதுர ரஸமும் வெல்லத்தன்மையும் (குடத்வம்) இதற்கு உதாஹரணம். இவ்விரண்டும் வெல்லத்திலே ஒரே காலத்திலேயே சேர்ந்து இருப்பதால் இவற்றுக்கு இடமும் காலமும் ஒன்றாகிறது.

(2) சிலவற்றில் காலம் மாத்திரம் ஒன்றாக இருக்கும், இடம் வேறு. உதாஹரணம்—சென்றுகொண்டிருக்கும் மனிதன் தன்னுடைய நிழலை இவ்வளவு என்பதாக அளந்து அந்த நிழலைக்கொண்டு ஆகாசத்தில் சூரியனுடைய இறப்பு இவ்வாறானது என்பதாக அனுமானம் செய்கிறான். இங்கு நிழல் இருக்குமிடம் பூமி, சூர்யன் இருக்குமிடம் ஆகாசம் என்பதாக இவற்றுக்கு இடம் வேறுபட்டிருக்கிறது, காலம் மாத்திரம் ஒன்று.

(3) சிலவற்றில் இடம் மாத்திரம் ஒன்றாகும், காலம் வேறுபட்டிருக்கும் உதாஹரணம்—குடத்தைச் சூளையில் வைக்கவே அதற்கும் தேஜஸ்ஸுக்கும் ஸம்பந்தம் ஏற்பட்டு கருப்பு நிறம் மாறி சிவந்த நிறம் உண்டாகிறது. இங்கு தேஜஸ்ஸின் ஸம்பந்தமும் அதனால் உண்டாகும் ரூபமும் ஒரேகுடத்தில் இருப்பதால் இடம் ஒன்று. இவை முன்னும் பின்னுமாக ஏற்படுவதினால் இவற்றிற்குக் காலம் மாத்திரம் வேறுபட்டிருக்கிறது.

(4) சிலவற்றில் இடமும் வேறுபட்டுக் காலமும் வேறுபட்டிருக்கும். உதாஹரணம்—சந்திரன் உதயமாகில் ஸமுத்திரமானது கொந்தளிக்கும் என்பதாக ப்ரஸித்தமானது. ஆகவே பகலில் சந்திரனுடைய அஸ்த்தமனத்தைக் கொண்டு முந்திய தினத்து ராத்ரியில் ஸமுத்ரத்திற்குக் கொந்தளிப்பு ஏற்பட்டிருப்பதாக அனுமானம் செய்கிறான். சந்திராஸ்தமானது மேரு பர்வதத்தைச் சேர்ந்த இடத்திலே உண்டாகிறது. கொந்தளிப்பானது ஸமுத்ரத்திலே ஏற்படுகின்றது. ஆகவே அஸ்தமனத்திற்கும் கொந்தளிப்புக்கும் உள்ள இடம் வேறு. சந்திராஸ்தமனம் பகலில், கொந்திளிப்பு இரவில், இவற்றுக்குக் காலமும் வேறு. இவ்வாறு உதாஹரணம் கொள்வது.

(இங்கு சந்திராஸ்தமனம் ஸமுத்ர க்ஷோபம் இவைகளுக்கு அஹோராத்ரத்திற்கு உள்பட்ட காலம் வேறாக இருப்பினும் அஹோராத்ர ரூபமான காலம் ஒன்றே. அந்த அஹோராத்ர ரூபமான காலத்திலே இவற்றிற்கு நியத ஸம்பந்தம் (வ்யாப்தி) உபபன்னமாகிறது.

அப்படியே பர்வதத்திலுள்ள தூமத்திற்கு மஹானஸத்தில் உள்ள அக்நியோடு நியத ஸம்பந்தம் இல்லையாகிலும் அக்னி ஜாதியைச் சேர்ந்த வஸ்துவோடு தூமஜாதியைச் சேர்ந்த வஸ்துவிற்கு நியதஸம்பந்தம் கூடும்.)

ஆகவே வ்யாப்யம் வ்யாபகம் இவற்றைப் பற்றிய நிர்ணயமாவது—எந்த ஜாதியைச் சேர்ந்த வஸ்துவானது எந்த ஜாதியைச்சேர்ந்த

வஸ்துவோடு எந்த இடத்திலோ காலத்திலோ நியத ஸம்பந்தம்பெற்று இருக்குமோ, நியத ஸம்பந்தமுள்ள அவ் வஸ்துவை வ்யாப்யம் என்றும், எதோடு நியத ஸம்பந்தம் ஏற்பட்டிருக்கிறதோ அதை வ்யாபகம் என்றும் தீர்மானிக்கவேண்டும் என்பதே. அந்த வ்யாப்யத்தோடு இயற்கையாக உள்ள நியத ஸம்பந்தமே வ்யாப்தி என்றதாகிறது.

## வ்யாப்தி ஞ்ஞானத்திற்கு உபாய நிரூபணம்.

(ச்லோ.) பலதடவைகளில் பார்த்து அந்த வ்யாப்தியை அறிய வேண்டும். அவ்வாறே லோகாநுபவம் கண்டிருக்கிறோம். வ்யாப்ய வ்யாபகங்களுக்கு இயற்கையாக உள்ள நியத ஸம்பந்தத்தை ஒருதடவை பார்ப்பதிலே அறியமுடியாதே.

ஆகையால் அநுமானத்திற்குத் தேவையான வ்யாப்தியைப் பலதடவைகளில் பார்த்தே தெளியவேண்டும் என்பதாக வரதவிஷ்ணு மிச்ரரும் சொன்னார்.

(பட்டர் செய்தருளிய) தத்வரத்நாகரம் எனும் க்ரந்தத்திலோ வெனில் ஒருதடவைப் பார்ப்பதினாலேயே வ்யாப்தியானது அறியப்படுவதாகச் சொல்லியிருக்கிறது. அவ்வசனமாவது—(ச்லோ.) 'இந்த நியத ஸம்பந்தமானது ஒருமுறை பார்ப்பதினாலேயே அறியப்படுகிறது. அப்படியே ஸ்வரஸமான அநுபவமும். ஆச்ரயத்தையும் அதிலுள்ள தர்மத்தையும். இவற்றுக்கு பரஸ்பர ஸம்பந்தத்தையும் ஸ்வரஸமாகவே ப்ரத்யக்ஷங்கள் க்ரஹிக்கின்றனவே' இவ்வாறனதே அது.

எல்லா தூமங்களிலும் தூமத்வம் என்கிற ஸாமான்ய தர்மம் ஒன்றே ஆகையால் ஒரு தடவை தூமத்தைப் பார்ப்பதினாலேயே எல்லா தூமங்களுக்கும் ஜ்ஞானம் ஏற்படுகிறது. என்பதாகவும் அந்த க்ரந்தத்திலே உபபாதனம் செய்யப்பட்டிருக்கிறது. தூமத்திலே உள்ள வஸ்துக்களோடு இந்த்ரிய ஸம்பந்தம் உண்டு. அதாவது—'அவை இந்த்ரியத்தோடு ஸம்பந்தமுள்ள வஸ்துவில் சேர்ந்திருக்கும் தர்மத்திற்கு ஆச்ரயங்களாக இருப்பதே அந்த ஸம்பந்தமாகும்' என்றும் சொல்லியிருக்கிறது அந்த க்ரந்தத்திலே.

இந்த்ரியமானது ஸமீபத்திலுள்ள தூமம் முதலியவற்றோடு ஸம்பந்தம் பெறுகிறது அந்த தூமம் முதலியவற்றைச் சேர்ந்திருப்பதால் தூமத்வம் முதலிய ஸாமான்ய தர்மமானது ஸம்யுக்தாச்ரிதமாகிறது.

தூரத்திலுள்ள தூம வ்யக்திகளிலே அந்த தூமத்வமாகிற ஸாமான்ய தர்மம் இருக்கிறது. ஆகையால் அவை ஸம்யுக்தாச்ரிதாச்ரயங்களாக இருப்பதே இந்த்ரியத்தோடு அவற்றுக்கு உள்ள ஸம்பந்தமாகும். இவ்வாறாக அவ்வசனம் துடங்குகிறது.

(ச்லோ.) இந்த்ரியங்களுக்கு உள்ள ஸம்பந்தங்களைப் பற்றி ஏற்கெனவே நிரூபணம் செய்த விடத்திலே இரண்டு ஸம்பந்தங்களையே சொன்னோம். ஸம்யுக்தாச்ரிதாச்ரயங்களாகை என்கிற மூன்றாவது ஸம்பந்தத்தைப்பற்றி அங்கே நாம் சொல்லவில்லை. ஏனெனில்— அந்த ஸம்பந்தத்தை அறிவதற்குப் ப்ரயோஜனம் வ்யாப்தியைப் பற்றிய ஜ்ஞானமாகும். வ்யாப்தியை இங்கேயே நிரூபணம் செய்வதால் இதை அறிவதற்கு வேண்டிய மூன்றாவது இந்த்ரிய ஸம்பந்தத்தை இங்கேயே சொன்னோம் என்பதாக அந்த க்ரந்தம் முடிவுபெறுகிறது. (இவ்வாறான ஆத்யந்த க்ரந்தத்திலே முன்கூறிய மூன்றாவது இந்த்ரிய ஸம்பந்தத்தைப்பற்றிச் சொல்லியிருக்கிறது.)

தூமத்வம் முதலிய ஸாமான்ய தர்மத்தை இந்திரிய ஸம்பந்தமாகவும் ஒருதடவை பார்ப்பதினாலேயே வ்யாப்தியைத் தெளியலாம் என்பதாகவும் சொல்லியிருப்பதில் பட்டருக்குத் தாத்பர்ய மில்லை. உபபத்தியானது வெகுவாக இருக்கிறது என்பதிலேயே நோக்கம் அவருக்கு என்பதாக பலர் எண்ணுகிறார்கள். ஏனெனில், தூமத்வம் முதலிய ஸாமான்ய தர்மமே ஸம்பந்தமாகில் பதார்த்தத்வம் என்கிற ஸாமான்ய தர்மமானது எல்லா பதார்த்தங்களிலும் இருப்பதால் எல்லா பதார்த்தங்களும் எலலோருக்கும் ப்ரத்யக்ஷமாக வேண்டுமே— என்கிற பயத்தினாலேயே அவர்கள் அப்படி எண்ணுகிறார்கள்.

ஆனால் முன்கூறிய தத்வரத்னாகர வசனத்திற்கு இவ்வாறு தாத்பர்யம்கொள்ளலாம். அதாவது—பலதடவைகளில், வ்யாப்ய வ்யாபகங்களுக்குள்ள ஸம்பந்தத்தை ஸாக்ஷாத்காரம் செய்தபிறகே வ்யாப்தியை அறியவேண்டும். ஆகிலும் பலதடவைகளில் பார்க்குமிடத்தில் முந்திய ஸாக்ஷாத்காரங்களாலே ஆத்மாவிலே ஸம்ஸ்காரம் (வாஸனை) வ்ருத்தியாகிறது. இப்படி வ்ருத்தியடைந்த ஸம்ஸ்காரத்தைத் தனக்கு உதவியாகக்கொண்டு கடைசியில் ஏற்படும் ப்ரத்யக்ஷமானது ஒருதடவை ஏற்பட்டதும் உடனேயே வ்யாப்தியைப் பற்றிய ஞானம் உண்டாகிறது. ஒருதடவை ஏற்படும் சரம ப்ரத்யக்ஷமே வ்யாப்தியை அறிவதற்குக் காரணமானது. எந்த ஜாதியைச் சேர்ந்த வஸ்துவைப்பற்றி அந்த சரம ப்ரத்யக்ஷம் ஏற்படுகிறதோ அந்த ஜா

தியைச் சேர்ந்த எல்லாவற்றைபும் பற்றிய ஞானமானது பொதுவாக உண்டாகிறது. இதற்குக் காரணம்—அந்த ஜாதியைச் சேர்ந்த எல்லாவற்றையும் சாம ப்ரத்யக்ஷமானது க்ரஹித்திருப்பதே. என்பதாகத் தாத்பர்யம்.

இப்படி தாத்பர்யம் கொண்டாலும் ஏற்கெனவே இந்திரிய ஸம்பந்தம் பெற்ற எல்லாவற்றையும் சாம ப்ரத்யக்ஷமானது விஷயீகரிப்பதாகச் சொல்லலாமேயன்றி இந்திரிய ஸம்பந்தம் பெறாத தூரத்திலுள்ள வஸ்துவிற்கும் ஸாக்ஷாத்காரம் உண்டு என்பது கூடாது.

எவற்றில் இந்த்ரியஸம்பந்தமானது ஏற்பட்டிருக்கிறதோ அவற்றையே சாம ப்ரத்யக்ஷமானது ப்ரகாசம் செய்கிறது. என்று கொள்ளுவதானால் இந்திரிய ஸம்பந்தம் பெறாத வஸ்துவிற்கு ப்ரத்யக்ஷம் ஏற்படாது. ஆகையால் எல்லோருக்கும் எல்லாவற்றையும் பற்றிய ப்ரத்யக்ஷமானது உண்டாக ப்ரஸங்கிக்குமே என்பதாக முன்கூறிய தோஷம் ஏற்படமாட்டாது. இவ்வாறாக ஹேது ஸாத்யங்களுக்கு உள்ள ஸம்பந்தத்தை ஒரு முறை ஸாக்ஷாத்காரம் செய்வதினாலோ அல்லது பலதடவைகள் ஸாக்ஷாத்காரம் செய்வதினாலோ வ்யாப்தியைப் (நியத ஸம்பந்தம்) பற்றிய ஞானம் உண்டாகலாம். அதிலும் கடைசியாக ஏற்பட்டுள்ளதொரு ஸாக்ஷாத்காரமே வ்யாப்தி ஞானத்தை உண்டுபண்ணுகிறது என்றோ அல்லது அதற்குமுன் பலதடவைகளில் ஏற்பட்டுள்ள ப்ரத்யக்ஷமும் அந்த சரம ப்ரத்யக்ஷத்தோடு சேர்ந்து வ்யாப்தி ஞானத்தை உண்டுபண்ணுகிறது என்றோ கொள்ளலாம். வ்யாப்தி ஞானத்தை உண்டுபண்ணும் ப்ரத்யக்ஷமானது புற இந்திரியங்களால் ஏற்படலாம் அல்லது மனதினாலேயே உண்டாகலாம். இவை எப்படியானாலும் வ்யாப்தி ஞானத்திற்குப் பூயோதர்சனம் (பல தடவைகளில் பார்ப்பது) அவச்யமானது என்பதை எல்லோரும் விலக்க முடியாது.

அதிலும் பலதடவைகளில் அக்னிக்கும் தூமத்திற்கும் உள்ள ஸம்பந்தத்தைப் பார்ப்பதினால் ஆத்மாவிலே அதைப்பற்றிய ஸம்ஸ்காரங்கள் பல உண்டாகின்றன. பிறகு அக்னி யில்லாவிடில் தூமமும் இருக்கமாட்டாது என்றுப்போலுள்ள விமர்சம் (தர்க்கம்) ஏற்படுகின்றது. இந்த விமர்சத்திற்குப் பிறகு வஹ்னியோடு தூமத்திற்கு உள்ள ஸம்பந்தமானது இயற்கையாக ஏற்பட்டதா அல்லது காரணாந்தரத்தினால் உண்டானதா? என்கிற ஸந்தேஹமானது நிவ்ருத்தமாகிறது. அக்னி யில்லாமலும் தூமம் இருக்கலாமோ என்கிற வ்யபி

சார ஸந்தேஹமும் போய்விடுகிறது. பிறகு யாதொரு ஸந்தேஹமும் அன்றியில் வஹ்னி தூமங்களுக்கு உள்ள நியத ஸம்பந்தத்தைப் பற்றிய நிச்சயமானது ஏற்படுகிறது என்பதாக நிர்ணயம்.

இப்படிக்கு பல தடவைகளில் பார்ப்பதே பூயோதர்சனம் என்பதாக நிர்ணயமாகையால் இதற்கு மேலும் பூயோதர்சனத்தைப்பற்றி இப்படிப்பட்டதா அப்படிப்பட்டதா என்பதாகச் செய்யும் விகல்பங்களால் ச்ரமமே அன்றி யாதொரு ப்ரயோஜனமும் இல்லை, ஆகவே அப்படி விகல்பம் செய்யவில்லை

ஹேதுவானது ஸாதயத்தோடு அபின்னமாய் இருப்பதைக் கொண்டும் ஸாத்யத்திலிருந்து உண்டாயிருப்பதைக் கொண்டும் வ்யாப்தியை (நியதஸம்பந்தம்) அறியவேண்டும் அதனால் இது, சிம்சுபையாகையால் விருக்ஷம் என்றும், இது தூமமுடையதாகையால் அக்னியை உடையது என்றும் முறையே அனுமானம ஏற்படுகிறது என்பதாக பௌத்தர் சொல்லுகிறார்கள். அவ்வசனமாவது— (ச்லோ.) ஒன்று கார்யமாகவும் மற்றொன்று காரணமாகவும் இருப்பது. அல்லது ஸாத்யமும் ஹேதுவும் வெவ்வேறு வஸ்துக்களன்றியில் அபின்னமாய் இருப்பது. இவ்விரண்டிலொன்றானது வ்யாப்தி (நியத ஸம்பந்தம்) க்குக் காரணம். இந்த காரணத்தினாலேயே வ்யாப்தியை அறியவேண்டும். ஹேது இருக்குமிடம் எல்லாவற்றிலும் ஸாத்யம் இருப்பதாகிய அந்வயத்தினாலும் ஸாத்யம் இல்லாவிடில் ஹேதுவும் இல்லை என்பதாகிய வ்யதிரேகத்தினாலும் வ்யாப்தியை அறிய முடியாது என்பதே.

அது ஸரி அன்று—க்ருத்திகா நக்ஷத்திரம் உதயமானதைக் கொண்டு ரோஹிணீ நக்ஷத்திரம் உதயமாகப் போவதைப்பற்றி அனுமானம் ஏற்படுகிறதன்றோ. இங்கு க்ருத்திகையின் உதயமாகிய ஹேதுவானது ரோஹிணியின் உதயமாகிய ஸாத்யத்திற்குக் கார்யபூதமன்றே ஸாத்யத்தோடு அபின்னமுமன்றே, இவ்வாறாகவே ரஸ விசேஷத்தை ஹேதுவாகக்கொண்டு ரூப விசேஷத்தை அனுமானம் செய்வதும் கூடாததாகும். மேலும் ஸாத்யத்தோடு ஹேதுவிற்கு நியதஸம்பந்தம் வேண்டும், ஸம்பந்தம் என்பது வெவ்வேறு வஸ்துக்களுக்கே உளது, தனக்குத் தன்னோடே ஸம்பந்தம் கூடாது. ஆகவே ஸாத்யமும் ஹேதுவும் அபின்னமாக இருக்கமுடியாது.

(பூ) ஆகிலும் வ்ருக்ஷம் எல்லாவற்றிற்கும் வ்ருக்ஷத்தன்மையானது பொதுவான தர்மமாகும். சிம்சுபாத்வம் என்கிற தன்மை

யானது சிம்சுபை என்கிற வ்ருக்ஷமொன்றுக்கே உறியது. ஆகவே ஸாமான்யமும் விசேஷமுமாகிய இவ்விரண்டு தர்மங்களும் வெவ்வேறானவை. இவ்விரண்டு தர்மங்களை இட்டு வ்ருக்ஷமாகிற ஸாத்யத்திற்கும் சிம்சுபையாகிற ஹேதுவிற்கும் பேதம் உண்டு என்னில்?

(வஸி) இப்படி பேதம் உண்டாகில் ஹேதுவிற்கும் ஸாத்யத்திற்கும் அபேதம் என்பது எப்படி? பேதமே அன்றோ வஸித்தித்தது.

வ்ருக்ஷத்வமும் (வ்ருக்ஷத் தன்மை) சிம்சுபாத்வமும் (சிம்சுபையின் தன்மை) வெவ்வேறு அன்று இரண்டும் ஒன்றே எனில், இப்படியாகில் வ்ருக்ஷத்தன்மை இருக்குமிட மெல்லாம் சிம்சுபையின் தன்மையும் இருக்கவேண்டு மாகையால் வ்ருக்ஷத் தன்மையை உடையதான பலாமரம் முதலியதையும் சிம்சுவை என வழங்கவேண்டுமே, பலாமரம் முதலியவற்றில் விருக்ஷத்தன்மை இருந்தும் சிம்சுபையின் தன்மை இல்லையாகில் அதே ந்யாயத்தினால் சிம்சுபையிலும் விருக்ஷத் தன்மை இருந்தும் சிம்சுபையின் தன்மை இல்லை என்னலாம். ஒரு விருக்ஷமும் சிம்சுபை யாகமாட்டாது.

மேலும் ஒன்றுக்கு மற்றொன்று கார்யமானதுபற்றி வ்யாப்தியை நிர்ணயம் செய்வதும் கூடாது. ஏனெனில்—(ச்லோ.) ஒரு வஸ்துவானது இருக்கும் பொழுது மற்றொரு வஸ்துவானது உண்டாகிறது என்று இவ்வளவைக் கொண்டு அவ்வஸ்துவுக்கு மற்றொரு அவ்வஸ்துவை கார்யம் எனக்கூடாது. இப்படியாகில் குடமானது தற்செயலாக ராஸபம் இருக்கும் பொழுது உண்டாவதைக் கொண்டு ராஸபத்தினுடைய கார்யம் என்று சொல்லவேண்டுமே. ஆகையால் எந்த வஸ்துவானது நியதமாய் இருப்பதினாலேயே எந்த மற்றொரு வஸ்துவானது உண்டாகிறதோ அந்த நியத வஸ்துவிற்கு மற்றொரு உண்டாகுமதான வஸ்துவானது கார்யம் எனக் கொள்ளவேண்டும். இங்கு கார்ய ஸ்வரூபத்திலே நியத ஸம்பந்தம் சேர்ந்திருக்கிறது. ஆகவே கார்யத்தன்மையைக் கொண்டு நியதஸம்பந்தத்தை (வ்யாப்தி) அறியவேண்டும் என்கிற பௌத்த மதத்திலே தன்னைக்கொண்டே தன்னை அறிவதாகிய ஆத்மாச்ரயம் என்கிற தோஷம் நிச்சயமாய் ஏற்படுகின்றது.

## வ்யாப்தியின் பிறிவு.

அன்வய வ்யாப்தி என்றும் வ்யதிரேக வ்யாப்தி என்றும் வ்யாப்தியானது இரண்டுவிதமானது. ஹேது இருப்பதால் ஸாதயம் இருக்கிறது என்பதாக ஏற்படும் வ்யாப்தியை அன்வய வ்யாப்தி என்கிறது. உதாஹரணம்—எந்த வஸ்துவானது புகையுடையதோ அது அக்னியை உடையது என்பது ஸாத்யம் இல்லாமையால் ஹேதுவானது இல்லை என்பதாக ஏற்படுமது வ்யதிரேக வ்யாப்தியாகும். உதாஹரணம்—எது அக்னி இல்லாததோ அது தூமமில்லாதது என்பது.

### உபாதியை நிரூபித்தல்.

இவ்விரண்டு விதமான வ்யாப்தியும் உபாதி ஏற்பட்டால் தோஷமுள்ளதாகிறது. உபாதியாவது — ஹேதுவிற்கு வ்யாபகமல்லாததாய், ஸாத்யமும் தானும் ஒன்றுக்கொன்று துல்யமாக நியதஸம்பந்தம் பெற்றிருப்பதாய், ஹேதுவிற் காட்டில் வேறுபட்டதாயுமிருக்கும் (உதாஹரணம்—அக்னியைக் கொண்டு தூமத்தை ஸாதிக்குமிடத்தில் ஈரவிரகு ஸம்பந்தமுள்ள அக்னியானது உபாதியாகிறது. இது அக்னி எனும் ஹேது இருக்குமிடமாகிய அயோகோளகத்திலே (இரும்பு உருண்டை) இல்லை. தூமமாகிய ஸாத்யத்தோடு ஸமமாக நியத ஸம்பந்தம் பெற்றிருக்கிறது. ஹேதுவாகிய கேவல அக்னியில் வேறுபட்டு மிருக்கிறது. ஆகவே உபாதி லக்ஷணத்திலுள்ள மூன்று விசேஷணங்களும் இவ்வுபாதியில் பொருந்துகிறது.) இப்படி உபாதிக்குச் சொல்லிய லக்ஷணத்திலே முதல் விசேஷணத்திற்குப் ப்ரயோஜனமாவது—அவயவத்தோடு கூடியதாகையால் அநித்யம் என்பதாக ஸாதிக்குமிடத்திலே கார்யத்வமானது (உத்பன்னமாகை) உபாதி அன்று என்பதைத் தெளிவிக்கையே ப்ரயோஜனம். கார்யத்வமானது ஸாத்யமாகிய அநித்யத்வத்தோடு ஸமஸம்பந்தம் பெற்றும் ஹேதுவிற் காட்டில் வேறுபட்டு மிருக்கிறது. ஆகிலும் அவயவத்தோடு சேர்ந்த வஸ்துக்கள் எல்லாவற்றிலும் கார்யத்வம் இருப்பதால் இதுஹேதுவிற்கு வ்யாபகமாகிறது. ஆகவே இதில் உபாதி லக்ஷணத்திலுள்ள முதல் விசேஷனம் கிடையாது. இது உபாதியன்று.

உத்பன்னமாகையால் அநித்யம் என்பதாக ஸாதிக்குமிடத்தில் அவயவத்தோடு கூடியிருக்கையானது உபாதியாகமாட்டாது என்பதைத் தெளிவிப்பதற்காக இரண்டாவது விசேஷணம். ரூபம் முதலிய கார்யவஸ்துவிலே இல்லாமையால் முதல் விசேஷணமும் ஹேதுவிற்காட்டில் வேறுபட்டிருப்பதால் மூன்றாவது விசேஷணமும் இதிலே இருந்தாலும் இதில் இரண்டாவது விசேஷணம் இல்லை. ரூபம் முதலியவற்றிலே அநித்யத்வமாகிய ஸாத்யமானது இருக்கிறது. ஆகிலும் அவயவத்தோடு கூடியிருக்கை அவற்றுக்குக்கிடையாது. ஆகையால் ஸாத்யத்தோடு இவ்வுபாதியானது ஸம ஸம்பந்தம் பெறவில்லை.

இதில் இரண்டாவது விசேஷணம் இல்லை. மூன்றாவது விசேஷணத்திற்குப் ப்ரயோஜனமாவது—கார்யமாகையால் அநித்யம் (நாசம் உடையது) என்பதாக ஸாதிக்குமிடத்திலே கார்யத்வமாகிய ஹேதுவானது ஸாத்யமாகிய அநித்யத்வத்தோடு ஸம ஸம்பந்தம்பெற்றது. இங்கு அந்த ஹேதுவே உபாதியாக மாட்டாது. தனக்குத்தானே வ்யாபகமாகமாட்டாமையால் முதல் விசேஷணமும் ஸாத்யத்தோடு ஸம ஸம்பந்தம் பெற்றிருப்பதால் இரண்டாவது விசேஷணமும் இதிலே இருந்தாலும் கார்யத்வமே ஹேதுவாகையால் ஹேதுவிற்காட்டில் வேறுபட்டிருக்கையாகிற மூன்றாவது விசேஷணமானது கார்யத்வத்திற்குச்சேராது. இப்படி கார்யத்வத்தை விலக்குவதே ப்ரயோஜனம். இவ்வாறு உபாதிலக்ஷணத்திலுள்ள விசேஷணங்கள் மூன்றுக்கும் ப்ரயோஜனம்.

(உபாதியானது) ஸாத்யத்தோடு ஸமமாக நியதஸம்பந்தம் பெற்றிருக்கவேண்டும். அதாவது—ஸாத்யம் இருக்கும் இடம் எங்கும் உபாதியும் உபாதியுள்ள இடம் எங்கும் ஸாத்யமும் இருக்க வேண்டும் என்பதாக உபாதி லக்ஷணத்திலுள்ள இரண்டாவது விசேஷணமாகும்.

இவ்விசேஷணத்தில் ஸாத்யம் இருக்குமிடம் எல்லாவற்றிலும் இருக்கையாகிற ஸாத்யவ்யாபகத்வமாத்திரம் அமையாது. இப்படியாகில் தூமம் இருப்பதால் பர்வதமானது அக்னி

யுள்ளது என்று ஸாதிக்குமிடத்தில் பக்ஷமாகிய "பர்வதத்தைக் காட்டில் வேறுபட்டிருப்பது" என்பது உபாதியாகும். ஸாத்யம் (அக்னி) இருக்குமிடமாகிய மஹானஸம் முதலிய எல்லாவற்றி லும் பர்வதபேதம் இருப்பதால் இது ஸாத்யவ்யாபகமாகிறது. இப்படியே உபாதிலக்ஷணத்தில் சேர்ந்துள்ள மற்ற இரண்டு விசேஷணங்களும் இதிலே இருக்கின்றன.

ஆகவே இது உபாதியாகாமைக்காக ஸாத்யத்தோடு ஸம வ்யாப்தியுடையதாயுமிருக்கவேண்டும் என்பதாக உபாதிலக்ஷ ணத்திலே இரண்டாவது விசேஷணம். உபாதியுள்ள இடம் எங்கும் ஸாத்யம் இருப்பதே உபாதிக்கு ஸாத்யவ்யாப்தியாகும். பர்வதபேதம்உள்ள ஜலம் முதலியவற்றில் ஸாத்யம் (அக்னி) இல்லாமையால் பர்வதபேதமானது ஸாத்யவ்யாப்யமன்று. ஆகவே இது உபாதியாகமாட்டாது.

உத்பத்தியாவதைக் கொண்டு அநித்யம் என்பதாக ஸாதிக்குமிடத்தில் 'அவயவத்தோடு கூடியிருக்கை' என்பது உபாதியாகாமைக்காக உபாதிலக்ஷணத்தில் இரண்டாவது விசே ஷணம். அதாவது ஸாத்யத்தோடு ஸமமாக நியதஸம்பந்தம் (வ்யாப்தி) பெற்றிருப்பது என்பதாக முன்னே ப்ரயோஜனம் சொல்லியுள்ளோம்.

ஸாத்யத்திற்கு வ்யாபகமாயிருக்கவேண்டும் என்பதினு லேயே இது உபாதியன்று என்று விலக்கமுடியும். ஸாத்யத் திற்கு வ்யாப்யமாயுமிருக்கவேண்டும் என்பதற்கு அது ப்ரயோ ஜனமாகாது. பர்வதபேதம் உபாதியாகாமைக்காக என்று காட்டியுள்ள பிரயோஜனமே கொள்ளவேண்டும்.

உபாதிலக்ஷணத்தில் முதல் இரண்டு விசேஷணங்களுக்கு ஏற்கனவே நாம் காட்டியுள்ள உதாஹரணமானது நையாயிகர் முதலிய மதாந்தரஸ்த்தரின் பக்ஷத்தை அனுஸரித்ததாகும்.

அவர்கள், வேதம் முதலியவற்றில் நித்யமாய் அவயவத் தோடு கூடியதாக ஈச்வரனுக்குத் திருமேனி முதலியது உண்டு என்பதாக ஏற்பட்டிருப்பதை இசைவதில்லை.

அவயவம் இருப்பதைக்கொண்டு அநித்யத்தன்மையை ஸாதிக்குமிடத்தில் கார்யத்வமும் (உத்பத்தி) கார்யத்வத்தைக் கொண்டு அநித்யத் தன்மையை ஸாதிக்குமிடத்தில் அவயவத்தோடு கூடியிருப்பதும் அவர்கள் பக்ஷத்தின்படி உபாதியாகக்கூடும். அதைவிலக்குவதற்காக உபாதிலக்ஷணத்தில் முறையே முதல் இரண்டு விசேஷணங்களைச்சேர்த்தது.

கார்யத்வமானது அவயவத்தோடு கூடிய எல்லா வஸ்துக்களிலும் இருப்பதால் இது ஹேதுவிற்கு வ்யாபகமாகிறது. ஹேதுவிற்கு வ்யாபகமாகாமையாகிற முதல் விசேஷணம் இதற்குக் கிடையாது. இப்படியே அவயவத்தொடு கூடியிருக்கும் எல்லா வஸ்துக்களிலும் கார்யத்வமிருந்தாலும் கார்யத்வம் உள்ள ரூபம் முதலியவற்றில் அவயவத்தோடு சேர்ந்திருப்பதாகிய உபாதியானது இல்லாமையால் இது ஸாத்யத்திற்கு வ்யாபகமன்று. இதில் இரண்டாவது விசேஷணம்சேராது. இப்படி அவர் பக்ஷத்தின்படி முன்காட்டிய பிரயோஜனம்.

வேதாந்திகளோவெனில் வேதம் முதலியவற்றில் சொல்லியபடி "ஈச்வரனுக்கு நித்யமாய் அவயவத்தோடு கூடியதாய் திருமேனி முதலியது உண்டு" என்பதாக இசைகிறார்கள். இவர்கள் பக்ஷத்தில் அந்த உதாஹரணங்கள் சேரமாட்டா.

ஏனெனில் அவயவத்தோடு கூடியிருப்பதைக்கொண்டு அநித்யத்தன்மையை ஸாதிக்குமிடத்தில் ஸாத்யமாகிய அநித்யத் தன்மை, இல்லாத ஈச்வர விக்ரஹம் முதலியதில் அவயவத்தோடு கூடியிருப்பதாகிய ஹேதுவானது இருக்கிறது. ஆகவே இந்த ஹேதுவானது வ்யபிசாரம் என்கிற தோஷம் உள்ளது. இங்கு கார்யத்வம் உபாதியானால் நமக்கு இஷ்டமே. இதை விலக்குவதற்காக முதல் விசேஷணம் என்றது தவறு. அப்படியே உத்பன்னமாவதினால் அநித்யத்தன்மையை ஸாதிக்குமிடத்தில் அவயவத்தோடு கூடியிருப்பது உபாதியாகாமைக்காக; ஸாத்யத்திற்கு வ்யாபகமாயிருப்பதாகிய இரண்டாவது விசேஷணம் என்றதுவும் தவறு. அவயவத்தோடு கூடிய ஈச்வர விக்ரஹத்திலே அநித்யத்வமாகிய ஸாத்தியம் இல்லாமையினால் இது ஸாத்யத்திற்கு வ்யாப்யமன்றோ ஸாத்தியதிற்கு வ்யாப்யமா

யிருப்பதாகிய விசேஷண மில்லாமையினாலேயே இதற்கு விலக்கு ஏற்படுகிறது.

ஆகையினால் வேதாந்திகள் பக்ஷத்தை அநுஸரித்து இவ்விரண்டு விசேஷணங்களுக்கும் ப்ரயோஜனம் வேறு உதாஹரணத்தில் காட்டவேண்டும். அதாவது—

த்ரவ்யமாய் இருப்பதைக் கொண்டு, ஏதேனும் ஒரு சப்தத்திற்குப் பொருளாயிருப்பதை ஸாதிக்குமிடத்தில், பதார்த்தமாய் இருப்பது, உபாதியன்று. இதை விலக்குவதற்காக முதல் விசேஷணம். இதில் மற்ற விசேஷணங்கள் இருந்தாலும் த்ரவ்யத்தன்மை உள்ள இடம் எங்கும் பதார்த்தத்தன்மை இருப்பதினால் இது ஹேதுவிற்கு வ்யாபகமாகிறது. ஹேதுவிற்கு வ்யாபகமல்லாமை, என்கிற முதல் விசேஷணம் இதில் இல்லை.

அப்படியே ஏதேனும் ஒரு பதார்த்தமாயிருப்பதை ஹேதுவாகக்கொண்டு இது சப்தத்திற்குப் பொருள் என்பதாக ஸாதிக்குமிடத்திலே த்ரவ்யத்தன்மையானது உபாதி அன்று. இதை விலக்குவதற்காக இரண்டாவது விசேஷணம். இதில் மற்ற விசேஷணங்கள் இருந்த போதிலும் ஸாத்தியம் உள்ள ரூபம் முதலியவற்றில் த்ரவ்யத்தன்மை இராமையால் இது ஸாத்யத்திற்கு வ்யாபகமன்று. இப்படிக்கு இவ்வுதாஹரணங்களிலே இரண்டு விசேஷணங்களுக்கும் ப்ரயோஜனம்.

(பூ) ஸாத்யத்தோடு ஹேதுவிற்கு நிருபாதிகமான (இயற்கையாக உள்ள) ஸம்பந்தமே, வ்யாப்தியாகையால் வ்யாப்தியை அறிவதற்கு உபாதியைப்பற்றிய ஜ்ஞானம் வேண்டும். ஸாத்யத்தோடு ஸமமாக வ்யாப்தியை உடையது உபாதியாகையால் உபாதியை அறிவதற்கு வ்யாப்தியைப் பற்றிய ஞானம் வேண்டும். இப்படி வ்யாப்திஜ்ஞானத்தினால் உபாதி ஞானமும் உபாதிஞானத்தினால் வ்யாப்திஞானமும் ஏற்படுவதினால் அந்யோந்யாச்ரயம் என்கிற தோஷம் ஏற்படுகிறது. (தன்னுடைய ஜ்ஞானத்தினால் மற்றொன்றினுடையவும் மற்றொன்றின் ஜ்ஞானத்தினால் தன்னுடையவும் ஜ்ஞானமானது ஏற்படுமிடத்தில் அந்யோந்யாச்ரயம்.)

(ஸி) எனக்கூடாது. உபாதிலக்ஷணத்திலே வ்யாப்தியைச்சேர்க்காமலே ஹேது இருக்குமிடம் எல்லாவற்றிலும் இராததாய் ஸாத்யம் இருக்குமிடம் எல்லாவற்றிலும் இருக்குமது என்பதாக உபாதிலக்ஷணமன்றோ.

நிச்சயிக்கப்பட்டது என்றும் ஸந்தேஹிக்கப்பட்டது என்றும் அந்த உபாதியானது இரண்டு விதம். ஸாத்யத்தோடு நியதஸம்பந்தம் (வ்யாப்தி) பெற்றதான உபாதியானது பக்ஷத்தில் (ஸாத்யத்தை ஸாதிக்குமிடம்) இல்லை என்பதாகத் தீர்மானம் செய்யப்பட்டிருந்தால் அதை நிச்சயிக்கபட்ட உபாதி என்கிறது உதாஹரணம்—உலகத்திலே ராஜாக்களுக்குச்செய்யும் அடிமையானது துக்கத்தை உண்டுபண்ணுவதாகக்கண்டிருப்பதால் அதைப்போலே ஈச்வரனுக்குச்செய்யும் அடிமையும் துக்கத்திற்குக்காரணமானது என்பதாக அநுமானம் செய்யுமிடத்திலே "பாபத்தினால் ஏற்பட்டிருக்கை" என்பது உபாதியாகிறது. இவ்வுபாதியானது பக்ஷத்திலே (ஈச்வனுக்குச்செய்யும் அடிமை) இல்லை என்பதாக சாஸ்த்ரத்தினால் நிர்ணயம் ஏற்பட்டிருக்கிறது. பாபத்தினால் ஏற்பட்டவை எல்லாம் துக்கத்திற்குக் காரணமாயிருப்பதால் இது ஸாத்யத்திற்கு வ்யாப்யமும் ஆகிறது. ஆகவே இதை நிச்சயிக்கப்பட்ட உபாதி என்கிறது.

உபாதியானது பக்ஷத்திலே இராமையைப்பற்றியோ, ஸாத்யத்திற்கு வ்யாப்யமாயிருப்பதைப்பற்றியோ, இரண்டிலொன்றுக்கு ஸம்சயம் இருக்குமிடத்தில் ஸந்தேஹிக்கப்பட்ட உபாதி என்கிறது.

அவற்றில் பக்ஷத்தில் இராமையைப்பற்றி ஸந்தேஹிக்கப்பட்ட முதல் உபாதிக்கு உதாஹரணம்—பக்தனை இந்த ஜீவாத்மாவானவன், சுகர் முதலிய மஹர்ஷிகளைப்போலே பக்தி நிஷ்பத்தி உடையவனாகையால், இந்தசரீரம் முடிந்த உடனேயே மோக்ஷம் பெறுகிறவன் என்பதாக அநுமானம் செய்யுமிடத்திலே "புண்யபாப ரூபங்களான கர்மங்கள் எல்லாம் நாசம் அடைந்திருக்கை" என்பது உபாதியாகிறது.

பக்தி நிஷ்பத்தியுள்ள இந்த ஜீவாத்மாவினிடத்திலே இந்த உபாதியானது இருக்கிறதா, இல்லையா, என்பதாக ஸந்தேஹமே

அன்றி நிச்சயமில்லை. ஆகவே இதை ஸந்தேஹிக்கப்பட்ட உபாதி என்கிறது.

யோகிகளுக்கு யோகத்திற்குப்பிறகு ஏற்பட்டுள்ளபாபங்கள் ஸம்பந்தப்படுவதில்லை, முன் ஏற்பட்டுள்ளவை, நாசம் அடைகின்றன, ஆகிலும் பலன் கொடுக்க ஆரம்பித்துள்ள புண்ய பாபகர்மங்களுக்கு அதே சரீரத்திலே முடிவு ஏற்படுகிறது என்கிற நியதியானது இல்லை. உபாயம் நிஷ்பன்னமாகியும் மோக்ஷ ப்ரதிபந்தகமான கர்மவிசேஷத்தினால் அனேக தினங்கள் இந்த சரீரம் இருக்கிறாப்போலவே பலசரீரங்களும் அவனுக்கு ஏற்படக்கூடுமன்றோ?

அப்படியே ப்ரஹ்ம ஸூத்திரங்களிலும் சொல்லியிருக்கிரது—"பலன்கொடுக்க ஆரம்பித்துள்ள புண்ய பாபங்களைப் போதுமான சரீரங்களைக்கொண்டு அனுபவிப்பதினால் போக்கி பிறகு ப்ரஹ்மத்தை அடைகிறான்" என்றும் அதிகாரத்திலே நியமிக்கப்பட்ட வஸிஷ்டர் முதலியவர்களுக்கு அவ்வதிகாரம் முடியும் வரையில் அவ்வதிகாரத்திலேயே இருக்கவேண்டும் மோக்ஷத்திற்கு ஏற்பட்டுள்ள அர்ச்சிராதி கதியானது கிடையாது என்றும் ஸூத்ரங்களிலே சொல்லியிருக்கிறது.

பக்தி நிஷ்பத்தியுள்ளவனுக்கு அதே ஜன்மத்திலே மோக்ஷம் என்றாப்போலே உள்ள ஸ்ம்ருதியோவெனில், பக்தி நிஷ்பத்தி இல்லாதவனுக்கு மற்றொரு ஜன்மம் நியதம் என்று காட்டுவதில் தாத்பர்யம் உள்ளது. ஆகவே பக்தி நிஷ்பத்தியுள்ளவனுக்குப் பெரும்பாலும் இஜ்ஜன்மத்தின் முடிவிலே மோக்ஷம் என்கிறது.

ஆகவே பக்தி நிஷ்பத்தியுள்ளவனுக்கு புண்ய பாப கர்மங்கள் எல்லாம் அவச்யம் நாசம் அடைகின்றன என்பதாகக் கொண்டு "இந்த உபாதியானது ஹேதுவிற்கு வ்யாபகம், இதில் உபாதிலக்ஷணத்திலுள்ள முதல் விசேஷணம் இல்லை," என்பது கூடாது.

பக்ஷத்திலே இராமையைப்பற்றி நிச்சயம் ஏற்பட்டிருந்தும் ஸாத்யத்தோடு வ்யாப்தியைப்பற்றி ஸந்தேஹிக்கப்பட்டிருக்குமது இரண்டாவது உபாதி. அதற்கு உதாஹரணம்.

ஹிம்ஸையைத்தவிர மற்ற நிஷித்தகர்மங்கள் எல்லா வற்றையும் பக்ஷமாக்கி, (ஸாத்யத்தை ஸாதிக்குமிடம்) ப்ராஹ்மண ஹிம்ஸையைப்போல், இது நிஷித்தமாகையால், அதர்மம், என்பதாக ஸாதிக்குமிடத்தில் "ஹிம்ஸாரூபமாகை, என்பது உபாதி" என்று ஒருவன் சொல்லுவனேயாகில் அப்பொழுது இவ்வுபாதியானது உதாஹரணம்.

எப்படி எனில்—அக்னி சந்திரன் இவர்களை தேவதையாகக் கொண்டதொரு யாகம் அக்னீஷோமீயம் என்பதாக உண்டு. இது முதலிய யாகங்களில் சாஸ்த்திரப்படி ப்ராணிவதங்கள் அதர்மமன்று. அதர்மத்வம் என்கிற ஸாத்யமானது இவற்றி லில்லை. இவற்றில் ஹிம்ஸைக்குச்சொல்லிய லக்ஷணம் உண்டு என்பதாக ஸாங்க்யர்மதம், இல்லை என்பதாக வேதாந்திகளின் மதம். இவர்கள் விவாதப்படுவதிலிருந்து "அக்னீ ஷோமீயம் முதலிய யாகங்களில் செய்யும் வதங்களுக்கு ஹிம்ஸைக்குச் சொல்லிய லக்ஷணமானது உண்டா, இல்லையா, என்பதாக ஒருவனுக்கு ஸந்தேஹம் ஏற்படுகிறது. அதன்பேரில் ஹிம்ஸா ரூபம் எல்லாம், அதர்மமாகுமா, என்பதாக இவ்வுபாதிக்கு ஸாத்யத்தோடு வ்யாப்தியைப்பற்றிய ஸந்தேஹம் உண்டா கிறது. அந்த புருஷனுக்கு இவ்வுபாதியானது வ்யாப்திஸந்தேஹம் பெற்ற உபாதியாகிறது.

இவ்வுபாதியானது பக்ஷத்திலே இல்லை என்பதாக நிச்சயம் ஏற்பட்டிருக்கிறது. எப்படி எனில்—தாமாக விழுந்த ஜந்துக்களை சாப்பிடுவது முதலியது பக்ஷம், இது நிஷித்தகர்மமாகும். ஆகி னும் ஹிம்ஸையன்று. ஆகவே இவ்வுபாதியானது பக்ஷத்திலே இல்லை என்பதாக நிச்சயிக்கப்பட்டதாகிறது.

உபாதி உள்ள இடத்தில் ஸாத்யத்தோடு வ்யாப்தியானது உபாதிக்கே உண்டு. ஹேதுவிற்குக்கிடையாது. உபாதியானது தன்னிடமிருக்கும் வ்யாப்தியை ஹேதுவில் ஆரோபணம் செய்வ தற்குக் காரணமாயிருப்பதால் இதை உபாதி என்கிற சப்தத்தி னல் சொல்லுகிறோம்.

ஆக இவ்வாறாக ஹேதுவிற்கு உபாதி உண்டாகில் ஸாத்யத் தோடு வ்யாப்தி இல்லை. ஹேதுவானது உபாதியன்றிக்கே

இயற்கையாக ஸாத்யத்தோடு ஸம்பந்தம் பெற்றிருக்கில் வ்யாப்தி உண்டு என்பதாக ஹேதுவிற்கு ஸாத்யத்தோடு வ்யாப்தி இல்லாமையைத்தெரிவித்து உபாதியானது தூஷணமாகிறது.

சிலர் சொல்லுவதாவது—உபாதியானது ஸாத்யத்திற்கு வ்யாபகம், வ்யாபகமான உபாதியானது பக்ஷத்திலே இல்லாமையை ஹேதுவாகக்கொண்டு வ்யாப்யமான ஸாத்தியமும் பக்ஷத்திலே இல்லை என்பதாக அநுமானம் ஏற்படுவதனால் உபாதியானது தூஷணமாகிறது என்பது.

அப்பொழுது இந்த பக்ஷீதியில் "ஹேது இருக்குமிடம் எல்லாவற்றிலும் இராததாய், ஸாத்யமுள்ள விடமெங்கும் இருப்பது உபாதி என்பதாக இவ்வளவே உபாதி லக்ஷணம் சொல்ல வேண்டும்."

ஸாத்தியத்திற்கு வ்யாபகமாயுள்ள உபாதியானது பக்ஷத்திலே இல்லாமையால் ஸாத்யமும் இல்லை என்று தூஷிப்பதற்கு உபாதியானது ஸாத்யத்திற்கு வ்யாப்யமாயும் இருக்கவேண்டும் என்கிற விசேஷணம் வேண்டியதில்லையன்றோ.

பர்வதத்திலே, தூமத்தைக்கொண்டு, அக்னியை, அநுமானம் செய்யுமிடத்திலே "பர்வதத்தில்காட்டிலும் வேறுபட்டிருக்கை" என்பது உபாதியாகாமைக்காக "ஸாத்யத்திற்கு வ்யாப்யமாகை" என்கிற விசேஷணம் உபாதிலக்ஷணத்திலே சேர்ந்தது என்பதாக முன்பு ப்ரயோஜனம் சொன்னோம்.

இவ்விசேஷணமானது உபாதிலக்ஷணத்திலே சேராதொழிந்தாலும் "பக்ஷத்தில் வேறுபட்டிருக்கை" என்பதெல்லாம் உபாதியாகமாட்டாது. எப்படிஎனில்

இவ்வுபாதியானது ஸாத்யத்திற்கு வ்யாபகம் (ஸாத்யமுள்ள இடம் எங்கும் இருக்கிறது) என்பதாகத் தீர்மானிக்க முடியாது. பக்ஷத்திலே ஸாத்யமானது இல்லை என்பதாக நிர்ணயம் இருந்தாலன்றோ "பக்ஷமானது ஸாத்யம் உடையதன்று ஸாத்யம் உள்ள மற்ற இடங்களில் இவ்வுபாதியானது இருக்கிறது ஆகவே, இது, ஸாத்யத்திற்கு வ்யாபகம்" என்றலாம்! பக்ஷத்திலே ஸாத்யத்தை அநுமானம் செய்யும்பொழுது ஸாத்யமானது

பக்ஷத்திலே இல்லை என்பதாக நிச்சயமில்லையே. ஆகவே "பக்ஷத்தில் வேறுபட்டிருக்கை" என்கிற இவ்வுபாதியானது ஸாத்யம் உள்ள இடம் எங்கும் இருப்பதாக நிச்சயம்செய்ய முடியாது.

(பூ) உபாதியைப்பற்றிய நிச்சயம் இல்லாத விடத்திலும் இந்திரியங்களுக்குப் புலப்படாததொரு உபாதி யிருக்கலாம் என்பதாக சந்தேஹம் உண்டாகலாம். இதனால் ஸாத்யம் இல்லாத இடத்திலும் ஹேதுவானது இருக்கலாம் என்பதாக வ்யபிசார ஸந்தேஹம் ஏற்படலாமே. இந்த ஸந்தேஹத்தினால் ஹேதுவிற்கு ஸாத்யத்தோடு வ்யாப்தி நிச்சயம் தடைப்படும். ஆகவே எந்த ஹேதுவைக்கொண்டும் ஸாத்யத்தை அநுமானம் செய்ய முடியாததனால் அநுமானமென்பதே போய்விடுமே,

(ஸி) எனக்கூடாது. அநுமானம் என்கிற ப்ரமாணமே கிடையாது என்பவர்களன்றோ இவ்வாறு பூர்வபக்ஷம் செய்பவர்கள். இவர்கள், இந்திரியங்களுக்குப் புலப்படாததொன்று உண்டு என்பதை இசைவதில்லையே. அப்படிப்பட்ட உபாதி ஒன்று இருக்கலாம் என்பதாக எப்படி ஸந்தேஹம் கொள்ளக் கூடும்? ஏதேனும்ஒரு ஹேதுவைக்கொண்டு அப்படிப்பட்ட உபாதியை அநுமானம் செய்வதாகில் அந்த அநுமானம் ப்ரமாணமே என்பதாக இசையவேண்டுமே. அப்படி ஒப்புக் கொள்வதாகில் உபாதியை ஸாதிக்கும் ஹேதுவிற்கு ஸாத்யத்தோடு இயற்கையான ஸம்பந்தம் (வ்யாப்தி) ஸித்தித்து விடுகிறது. அதே ந்யாயத்தினால் மற்ற இடத்திலும் ஹேதுவிற்கு ஸாத்யத்தோடு வ்யாப்தியானது ஸித்திக்கலாம். உபாதியை ஸாதிக்கும் ஹேதுவைக்காட்டில் மற்ற ஹேதுவிற்கு யாதொரு வ்யத்யாஸமும் இல்லையே.

மேலும் ஸந்தேஹிக்கப்படும் இந்த அதீந்த்ரியமான (இந்திரியங்களுக்குப் புலப்படாத) உபாதியானது எல்லா விடங்களிலும் இருக்கின்றதா? இல்லையா? முதல் பக்ஷத்தில் (வ்யாப்யம் உள்ள இடம் எங்கும் வ்யாபகமும் இருக்குமாகையால்) உபாதிக்கு வ்யாபகமாயுள்ள அக்னி முதலிய ஸாத்யமும் எல்லா விடத்திலும் இருக்கவேண்டும், இரண்டாவது பக்ஷத்திலும் அவ்வுபாதியானது நித்யமானதா, அல்லது அநித்யமா? நித்யமாகில் வ்யாப்ய

யான உபாதியானது நித்யமாயிருப்பதால் வ்யாபகமான, அக்னி முதலிய ஸாத்யமும் நித்யமாகவேண்டும். அநித்யம் என்பதாக இரண்டாவது பக்ஷத்தை இசைந்தால் இப்பக்ஷத்தில் அந்த உபாதியானது ஹேது ஸாத்யம் இரண்டுக்கும் வ்யாபகமா? அதாவது ஹேது ஸாத்யங்களுள்ள இடம் எங்கும் இருக்கின்றதா இரண்டுக்கும் வ்யாபகமல்லாததா? இரண்டில் ஒன்றுக்கு மாத்திரம் வ்யாபகமானதா? முதல் பக்ஷத்திலே ஹேதுவிற்கு வ்யாபகமல்லாதது" என்பதாக உபாதிக்கு முன் கூறிய லக்ஷணம் சேராது. உபாதியானது ஹேதுவிற்கு வ்யாபகம் என்று இப்பக்ஷபாகையால் "ஹேதுவிற்கு வ்யாபகமாகாதிருக்கை" என்கிற விசேஷணம் அதற்கு இல்லையன்றோ.

ஹேதுஸாத்யங்கள் இரண்டுக்கும் வ்யாபகமன்று உபாதி, என்கிற இரண்டாவது பக்ஷத்திலும் உபாதியானது ஸாத்யம் ஹேது இவ்விரண்டோடும் ஸம்பந்தபடாதது என்றோ அல்லது இவ்விரண்டுக்கும் வ்யாப்யமே என்றோ தேறுகிறது. ஆகவே ஸாத்யத்தோடு ஸமமாக நியதஸம்பந்தம் பெற்றது உபாதி என்று லக்ஷணத்தில் சொல்லிய அம்சம் இல்லை.

ஹேது ஸாத்யங்களிரண்டிலொன்றுக்கு மாத்திரம் வ்யாபகம் என்கிற மூன்றாவது பக்ஷத்தில் ஹேதுவிற்குமாத்திரம் வ்யாபகம் என்றால் "ஸாத்யத்திற்கு வ்யாபகமும் ஹேதுவிற்கு வ்யாபகமல்லாததுமானது" உபாதி என்பதாகச்சொல்லிய இரண்டு விசேஷணங்களும் இவ்வுபாதிக்கு இல்லை.

அதற்காக ஸாத்யத்திற்கு மாத்திரம் வ்யாபாகம் என்பதாக இசைந்தால் இவ்வுபாதியானது ஹேதுவிற்கு வ்யாபகமாகாமைக்குக் காரணம் இவ்விரண்டிலொன்றாக வேண்டும், அதாவது - (ஸாத்யத்தை அநுமானம் செய்யுமிடப்) பக்ஷத்தைக்காட்டில் வேறுபட்டுள்ள இடத்திலேயோ, அல்லது பக்ஷத்திலேயோ, ஹேதுவானது உபாதியில்லாமல் இருப்பதேயாகும்.

அதில் பக்ஷத்திற்காட்டில் வேறுபட்ட ஸ்தலங்களிலே உபாதியோடு சேராமல் ஹேதுவானது இருக்கிறது என்கிற முதல் பக்ஷம் கூடாது. அப்படியாகில் ஸாத்யத்திற்கு வ்யாபகமா

யுள்ள உபாதியானது ஹேதுவோடு சேராமலே இருக்கிறதாகில் ஹேதுவானது ஸாத்யமில்லாத இடத்தில் இருப்பதாகிய வ்யபி சாரம் என்கிற தோஷத்தை மற்ற இடத்தில் கண்டிருப்பதாகச் சொல்லியதாகிறது. ஆகவே அந்த வ்யபிசாரமே தூஷண மாகிறது.

ஸாத்யம் இல்லாத இடத்தில் ஹேதுவானது இல்லையாகில் ஸாத்யத்திற்கு வ்யாபகமும் ஹேதுவிற்கு வ்யாபகமல்லாதது மான உபாதி என்கிற வஸ்துவே இருக்கமுடியாது.

(உபாதியானது ஸாத்யத்திற்கு வ்யாபகமானது அப்படிப் பட்ட உபாதியானது ஹேதுவிற்கு வ்யாபகமன்று என்கிறத ஞல் ஹேதுவானது இருக்குமிடம் சிலவற்றில் உபாதி இல்லை என்றதாகிறது. இப்போழுது உபாதி இல்லாத இடத்திலும் ஹேதுவானது இருக்கிறது என்பதாக ஸித்திக்கிறது ஸாத்யத் திற்கு வ்யாபகமாயுள்ள உபாதியானது எங்கு இல்லையோ அந்த இடத்திலேயே ஹேதுவானது இருக்குமாகில் வ்யாப்யமான ஸாத்யம் எங்கு இல்லையோ அந்த இடத்திலே இருக்கிறது என் பது நிச்சயம். இதுவே ஹேதுவிற்கு வ்யபிசாரம் என்கிற தோஷம் ஆகவே வ்யபிசாரமே தூஷணமாகையால் உபாதியி ஞல் ஹேதுவிற்கு தோஷம் கொள்ளவேண்டியதில்லை என்றபடி.)

பக்ஷத்திலேயே உபாதியன்றிக்கே ஹேதுவானது இருப் பதஞல் உபாதியானது ஹேதுவிற்கு வ்யாபகமன்று என்கிற இரண்டாவது பக்ஷத்திலும் உபாதியானது ஹேதுவிற்கு வ்யா பகமன்று என்பது ஸித்தியாது. எப்படி எனில் - ஸாத்யத்தைப் பற்றிய நிச்சயம் ஏற்பட்டுள்ளஸ்தலம் எல்லாவற்றிலும் ஸாத் யத்தைப்போலவே உபாதியும் இருக்கிறது அப்படிப்பட்ட உபா தியானது, ஸாத்யத்தைப்பற்றிய ஸந்தேஹம் ஏற்பட்டுள்ள இட மாகிய பக்ஷத்திலும் இருக்கிறது என்பதை இந்த ஹேதுவைக் கொண்டே அனுமானம் செய்யவேண்டும். ஹேது இல்லாத விடத்தில் உபாதியான்து இருக்குமாகில் உபாதி இல்லாத இடத் திலும் ஹேது இருக்கின்றது என்றதாகிறதே. இப்படிப்பட்ட ஹேதுவைக்கொண்டு உபாதியை எப்படிப் பக்ஷத்திலே அனுமா னம் செய்யலாம்? அப்படி அனுமானம் செய்வதாகில் உபாதி

இல்லாத இடத்திலே ஹேதுவானது இருக்கமுடியாதன்றோ ஆகவே ஹேதுவிற்கு வ்யாபகமல்லாதது உபாதி என்பது இப்பக்ஷத்திலே சேராது.

பக்ஷத்திலே உபாதி இல்லை என்பதை ப்ரத்யக்ஷத்தாலே அறியமுடியாது. இந்திரியங்களுக்குப் புலப்படாதது (அதீந்த்ரியம்) என்பதாகவன்றோ உபாதியை இசைகிறாய். ஆகவே உபாதியானது ப்ரத்யக்ஷமன்றாகையால் அது இல்லை என்பதும் ப்ரத்யக்ஷமன்றே. ஆகவே பாதகமான ப்ரத்யக்ஷம் இல்லாமையால் பக்ஷத்திலே ஹேதுவைக்கொண்டு ஸந்தேஹிக்கப்படுமதாய் அதீந்த்ரியமுமாகிய உபாதியை அநுமானம் செய்யவேண்டும். அந்த ஹேதுவிற்கு ஸாத்யமாகிய உபாதியானது வ்யாபகமாக இருக்கவேண்டும். (ஆகையால் ஹேதுவிற்கு வ்யாபகமல்லாதது உபாதி என்பது இப்பக்ஷத்திலே சேராது.)

அநுமானத்தினாலே அதீந்த்ரியமாயுள்ள உபாதியொன்று இருக்கலாம் என்பதை ஸாதிப்பதாகில் அந்த உபாதியாகிய ஸாத்யத்தோடு ஹேதுவிற்கு உள்ள (வ்யாப்தி) நியதஸம்பந்தமானது ஸ்வாபாவிகமேயாக வேணும். ஹேதுவானது ஸாத்யத்தோடு நியதஸம்பதம் பெற்று பக்ஷத்திலே இருப்பதனால் அந்த ஹேதுவினால் பக்ஷத்திலே ஸாத்யமும், ஸாத்யத்தை உண்டுபண்ணுகிற காரணங்களும் ஸித்திக்கின்றனவே. அதைப் போல்வே உபாதியும் பக்ஷத்திலே ஸமீசீனமான ஹேதுவினால் ஸித்திக்கின்றதாகில் அது உபாதியே ஆகமாட்டாது. பக்ஷத்திலே உபாதியில்லாமையால் ஸாத்யமுமில்லை என்று அநுமானம் ஏற்படவேணும். உபாதியானது பக்ஷத்திலே ஸித்திப்பதாகில் தான் இல்லாமையால் ஸாத்யமில்லாமையை இந்த உபாதியானது போதிக்கமாட்டாது. அப்படி ஸாத்யமில்லாமையை அறிவிக்கமாட்டாதது எப்படி உபாதியாகும்?

(பூ) ஹேதுவைக்கொண்டு எந்த உபாதியை அநுமானம் செய்கின்றோமோ அந்த அதீந்திரியமாயுள்ள உபாதியோடு ஹேதுவிற்கு உள்ள வ்யாப்தி (நியதஸம்பந்தம்) யானது ஸ்வபாவிகம் என்பதற்கில்லை. மற்றொரு உபாதியினால் ஏற்பட்டிருக்

கலாம். ஆகவே அப்படிப்பட்ட ஹேதுவைக்கொண்டு ஸாதிக்கப்படும் உபாதியானது அந்த ஹேதுவிற்கு வ்யாபகமல்லாததாகலாமே எனில்.

(ஸி) அப்படியாகில் அந்த அதீந்த்ரியமான உபாதியையும் ஹேதுவைக்கொண்டு பக்ஷத்திலே அனுமானம் செய்யவேண்டுமாகையால் அந்த உபாதியானது ஹேதுவிற்கு வ்யாபகமல்லாமல் இருக்கமுடியாது என்பதாக முன்கூறிய தூஷணம் ஏற்படுகிறது. அதற்காக மேன்மேலும் மற்றொரு உபாதியைக் கொண்டே நிர்வாஹம் செய்யப்பார்க்கில் அனவஸ்த்தை (முடிவில்லாமை) என்கிற தோஷம் ஏற்படும்.

மேலும் (ச்லோ) ஸந்தேஹிக்கப்படும் உபாதியானது ஸாத்யத்தோடு வ்யாப்தியாகிய ஸம்பந்தம் பெற்றிருக்கவேண்டும். அந்த ஸம்பந்தமானது அதற்கு ஸ்வாபாவிகமேயாக வேண்டும். அது இயற்கையாக அதற்கு இல்லாமற்போனால் உண்மையில் ஸாத்யத்தோடு ஸம்பந்தம் பெறுமையாலே அது உபாதியாக மாட்டாது. ஆகவே உபாதிக்கு ஸாத்யத்தோடு வ்யாப்தி என்கிற ஸம்பந்தமானது ஸ்வபாவிகமாகிறாப் போலே ஹேதுவிற்கும் ஸாத்யத்தோடு வ்யாப்தியாகிய ஸம்பந்தமானது ஸ்வபாவிகமே என்று அறியவும்.

பட்டர் அருளிச்செய்த தத்வத்ர ரத்நாகரம் என்கிற க்ரந்தத்திலேயோவெனில் உபாதியின் ஸ்வரூபமும் அதற்கு ப்ரமாணமும், அதன் உள் பிரிவும், அது தூஷணமாகும் வழியும் இவ்வாறாக சொல்லியிருக்கிறது—

எப்படி எனில்— (ச்லோ) (1) "ஒரு வஸ்துவோடு மற்றொரு வஸ்துவிற்கு ஸம்பந்தம் ஏற்படுவதற்கு எந்தவஸ்துவானது காரணமாகின்றதோ அது அதற்கு உபாதியாகும் - உதாஹரணம்— அக்னிக்கு தூமத்தோடுஸம்பந்தம் ஏற்படுவதற்கு ஈரக்கட்டையானது காரணம் ஆகவே அது உபாதியாகின்றது.

(2) வைசேஷிகருடைய ஸித்தாந்தத்தின்படி ஆகாசமானது ச்ரவணேந்த்ரியமாகைக்கு காது என்கிற இடமானது உபாதியா

கிறது. ஜீவன் ஸம்ஸாரஸம்பந்தம் பெறுவதற்கு புண்ய பாபகர்மம் அஜ்ஞானம் இவை முதலியது உபாதியாகிறது. இவை எல்லாம் உதாஹரணங்களாகும்.

ஸாத்யத்திற்கு வ்யாபகமாய் (ஸாத்யம் உள்ள இடம் எங்கும் இருப்பதாய்) ஹேதுவிற்கு வ்யாபகமல்லாதுமானது உபாதி என்பதாக உபாதிக்கு லக்ஷணம் சொல்லுகிறார்கள் சிலர்.

ஹேதுவிற்கு வ்யாப்கமல்லாததாய் ஸாத்யத்தோடு ஸமமாக நியதஸம்பந்தம் (வ்யாப்தி) பெற்றதாயும் இருக்குமது உபாதி என்றும் சொல்லுகிறார்கள்'' என்று இவ்வாறாக உபாதியின் ஸ்வரூபத்தை நிரூபணம் செய்திருக்கிறார். எந்த ப்ரமாணத்தைக்கொண்டு உபாதியை அறிவது? எனில். ஹேதுவானது சிலவிடத்தில் ஸாத்யத்தோடு ஸம்பந்தப்படாமலிருப்பதை அறிவிக்குமதாகியப்ரமாணமோ, அல்லது த்ருஷ்டாந்தஸ்தலங்களில் ஹேதுவானது எவ்வளவு தர்மங்களோடுகூடி, ஸாத்யத்தோடு ஸம்பந்தம் பெற்றிருப்பதாய் காணப்பட்டதோ. அந்த தர்மங்களில் சில தர்மங்கள் இல்லாமல் பக்ஷத்திலே காணப்படுவதோ உபாதியை அறிவிக்கும் ப்ரமாணமாகும்.

அவற்றில் ஹேதுவிற்குஸாத்யத்தோடு ஸம்பந்தம் சிலவிடத்தில் இல்லாமையை அறிவிக்கும் ப்ரமாணம் யாது? எனில். ஹேதுவிற்குஸாத்யத்தோடு வ்யபிசாரத்தை (ஸாத்யமில்லாத இடத்தில் இருப்பைப்) பார்ப்பது அதாவது—ஸாத்யத்திற்கு விரோதியான தர்மம் இருப்பதாக நிச்சயம் செய்யப்பட்டதாய் உண்மையில் சாஸ்திரம் முதலிய ப்ரமாணத்தினால் ஸாத்யம் இல்லை என்று பாதிக்கப்பட்டு மிருக்குமதான பக்ஷத்திலே ஹேதுவைக்காண்பதோ அல்லது ஸாத்யமில்லை என்பதாக நிச்சயம் செய்யப்பட்ட, மற்ற இடங்களில் ஹேதுவைக்காண்பதோ, முன்கூறிய வ்யபிசார நிச்சயமாகும் உதாஹரணம்—அக்னீ ஷோமீயம் என்கிற யாகத்தில் செய்யப்படும் ப்ராணி ஹிம்ஸையானது, அதர்மம். ஏனெனில் அதுவும் ஹிம்ஸையாகையால். என்பதாக ஸாதிக்குமிடத்தில் பக்ஷமாகிய அக்னீஷோமீய ஹிம்ஸையானது அதர்மம் அன்று என்பதாக சாஸ்திரம் சொல்லுவதால் ப்ருக்ருத ஹிம்ஸை

யில் ஸாத்யமானது இல்லை என்பதாக நிச்சயம் இருக்கிறது. இப்படிப்பட்ட அக்னீ ஷோமீய ஹிம்ஸையில் ஹிம்ஸாத்வம் (ஹிம்ஸைத்தன்மை) என்கிற ஹேதுவானது நிச்சயிக்கப்பட்டிருக்கிறது. இந்த அநுமானத்தில் "சாஸ்த்ரத்தினால் விலக்கப்பட்டிருக்கை" என்பது உபாதியாகிறது இது உபாதி என்பதற்கு ப்ரமாணம் ப்ரக்ருத பக்ஷமாகிய அக்னீ ஷோமீய ஹிம்ஸையில் ஹிம்ஸாத்வமாகிய ஹேதுவைக்காண்பதேயாகும்! அநியபமதாகையால், அநித்யம், என்பதாக ஸாதிக்குமிடத்தில், இந்த ஹேதுவானது, ஸாத்யமில்லை என்பதாக நிச்சயிக்கப்பட்டுள்ள ஆத்மா முதலியவற்றில் காணப்படுவதைக்கொண்டு இங்கு "உண்டாகுகை" என்பது உபாதி என்பதாகக்கல்பனம் செய்கிறோம். இப்படிக்கல்பனம் செய்வதற்குப் ப்ரமாணம், ஸாத்யமானது இல்லை என்பதாக நிச்சயம் செய்யப்பட்டுள்ள ஆத்மா முதலியவற்றில் ஹேதுவைக்காண்பதேயாகும். இவ்வாறாக உபாதியை ஞாபிக்கும் முதல் ப்ரமாணத்திற்கு உதாஹரணம்.

இனி இரண்டாவது ப்ரமாணமாவது—ஸாத்ய நிச்சயம் உள்ளத்ருஷ்டாந்தத்திலே ஹேதுவானது எவ்வளவு தர்மங்களோடு கூடியதாய் ஸாத்யத்துடன் ஸம்பந்தம் பெற்றிருப்பதாகக் காணப்பட்டிருக்கிறதோ அவ்வளவு தர்மங்களிலே ஏதேனுமொன்று இராததாக பக்ஷத்திலே காணப்படுமாகில் அப்பொழுது எல்லா தர்மங்களோடும் ஹேதுவைப்பற்றி பக்ஷத்திலே நிச்சயமில்லை யாகையால் எல்லாதர்மங்களோடு கூடிய மற்றொன்று இங்கு உபாதி என்பதற்கு இது ப்ரமாணமாகிறது.

உதாஹரணம்—இனி உண்டாகப்போகும் பிள்ளையானவன், மித்ரையின் பிள்ளையாகையால், கருப்பு, என்பதாக அநுமானம் செய்யுமிடத்தில் "மித்ரையின் பிள்ளையானவன் காய்கிழங்கு முதலிய ஆஹாரத்தின் பரிணாமத்தினால் உண்டாயிருப்பது" என்பது உபாதியாகிறது. மித்ரை என்பவள் சாகம் முதலிய வற்றை ஆஹாரம் செய்ததினால் அவளுக்கு உண்டான மற்ற பிள்ளைகள் கருப்பு என்பதாக நிச்சயமிருக்கிறது. இங்கு கருப்பு என்கிற ஸாத்யத்தோடு ஸம்பந்தமானது சாகத்தினால் உண்டான மித்ராபுத்ரரிடமே காணப்பட்டிருக்கிறது. ஆகவே

மித்ரையின் மற்ற பிள்ளைகளிடம் கறுப்புநிறம் இல்லாமையால் மித்ரையின் புத்ரனயிருப்பது மாத்திரத்திற்கு ஸாத்யத்தோடு வ்யாப்தி நிச்சயிக்கப்படவில்லை. பக்ஷமாகிய பிள்ளையினிடமோ வெனில் மித்ரையின் பிள்ளை என்பது மாத்திரமே நிச்சிதம். ஆகவே இங்கு "சாகத்திறுண்டான மித்ரா புத்ரனயிருக்கை" என்பது உபாதி என்று ஏற்படுகிறது. இப்படி உபாதிக்குப் ப்ரமாணம் சொல்லப்பட்டது.

இவ்வாறாக ஹேதுவிற்கு சில ஆகாரங்களில்லாமல் பக்ஷத்திலே நிச்சயமிருப்பதைக்கொண்டு உபாதியை கல்பனம் செய்யுமிடத்தில் அந்தஹேதுவை அப்ரயோஜகம் (ஸாத்யத்தை ஸாதிப்பதற்கு உபயோகியன்று) என்பதாக நிரூபகர்கள் சொல்லுகிறார்கள். ஹேதுவானது ஸாத்யமில்லாத இடத்தில் இருப்பதைக் கண்டிருப்பதைக்கொண்டு உபாதியைக்கல்பனம் செய்யுமிடத்தில் முன்கூறியபடி பக்ஷத்திலும் மற்றவிடத்திலுமாக ஹேதுக்களுக்கு வ்யபிசாரம் நிச்சயிக்கப்படுகையால் அந்த ஹேதுக்களைப் பலவாறாக வ்யபதேசம் செய்கிறார்கள். பாதம் எனும் தோஷமுடையது விரோதம் என்கிற தோஷமுடையது. வ்யபிசார தோஷம் உடையது என்று இவ்வாறாக அந்தவ்யபதேசம்" இப்படிஉபாதிக்குப் ப்ரமாணம் உட்பிறவு முதலியவற்றை விஸ்தாரமாக தத்வரத்னாகரமெனும் க்ரந்தத்தில் நிரூபணம் செய்தருளியிருக்கிறார்.

அந்த உபாதி எந்த விதத்தில் தூஷணமாகிறது என்பதை அந்தக்ரந்தத்திலே இவ்வாறு முடிவுசெய்கிறார். அதாவது:—
ஆகவே உபாதியானது பலிதமானது. ஹேதுவிற்கு ஸாத்யத்தோடு வ்யாப்தி (நியதஸம்பந்தம்) இல்லாமையை வ்யபிசாரம் என்கிறது வ்யபிசாரத்திற்கு உபாதியே காரணம். ஏதேனும் ஒரு ப்ரமாணத்தினுல் நிச்சயிக்கப்பட்டதையே உபாதி என்பதாக ஸந்தேஹிக்கவேண்டுமேயன்றி ஒரு ப்ரமாணத்தினுலும் நிச்சயிக்கப்படாதது உபாதியாகமாட்டாது ஸாத்யத்தோடு இயற்கையாக நியதஸம்பந்தம் பெற்றதாய் ஹேதுவோடு அப்படி ஸ்வாபாவிகமான ஸம்பந்தம் பெருததுமானதையே உபாதி என்பதாக நிச்சயம் செய்யவேண்டும்.

உபாதியைப்பற்றிய ஸந்தேஹங்கள் எல்லாவற்றையும் போக்குவதில் ஸமர்த்தமானது தர்க்கம் என்பதாக தத்வரத்நாகரத்திலுள்ள முடிவு.

ஆக இவ்வாறாக ஸாத்யத்தோடு இயற்கையாக நியதஸம்பந்தம் பெற்றது வ்யாப்யம் என்பதாக நிர்ணயம்! வ்யாப்யம், ஸாதனம், லிங்கம், என்கிற சப்தங்கள் ஒரே அர்த்தத்தையே போதிக்கின்றன.

ஹேதுவை நிரூபித்தல்.

வ்யாப்தி (ஸாத்யத்தோடு நியதஸம்பந்தம்) என்றும், பக்ஷதர்மத்வம் (பக்ஷத்திலே இருக்கை) என்றும் ஹேதுவிற்கு இரண்டு ஆகாரங்கள், இவை அனுமானம் செய்வதற்கு உபகாரகங்களானவை. அந்த வ்யாப்தி, பக்ஷஸம்பந்தங்களை விவரணம் செய்ததினால் ஹேதுவிற்கு ஐந்து ஆகாரங்கள் ஏற்படுகின்றன.

அவையாவன:— (1) பக்ஷவ்யாபகத்வம் (பக்ஷம் எல்லாவற்றிலும் இருப்பு) (2) ஸபக்ஷஸத்வம் (ஸபக்ஷத்திலே இருப்பு) (3) விபக்ஷாஸத்வம் (விபக்ஷத்திலே இல்லாமை) (4) அபாதிதத்வம் (பக்ஷத்திலே ஸாத்யமானது பாதிக்கப்படாமை) (5) அஸத்ப்ரதிபக்ஷிதத்வம் (துல்யபலமாகத்தோன்றும் மற்றொரு ப்ரமாணத்தினால் உபரோதம் இல்லாமை.) இவையே அந்த ஐந்து ஆகாரங்கள். (இவற்றில் 2-வது 3-வது ஆகாரங்கள் வ்யாப்தியின் விஸ்தாரமாகும். 1-வது 4-வது ஆகாரங்கள் பக்ஷதர்மதையின் விஸ்தாரம். 5-வது ஆகாரம் வ்யாப்திபக்ஷதர்மத்வம் இரண்டினுடையவும் விஸ்தாரமாகும்.)

(1) பக்ஷவ்யாபகத்வம் என்றவிடத்தில் பக்ஷமாவது:—

எந்த அதிகரணத்திலே ஸாதிக்கப்படவேண்டிய மற்றொரு வஸ்துவைப்பற்றிய நிச்சயமோ. பாதகமோ இல்லாமையால் அந்த வஸ்துவானது ஸாதிக்கப்படவேண்டிய நிலையில் இருக்கிறதோ அப்படிப்பட்ட தர்மத்தோடு கூடிய அந்த அதிகரணமேயாகும். உதாஹரணம்:—அக்னி முதலியதை ஸாதிக்கும்போது பர்

வதம் முதலியதை பக்ஷம் என்கிறது. அந்த பக்ஷத்திலே எல்லா வற்றிலும் ஹேதுவானது இருக்கவேண்டும். இருக்குமிடத்தில் பக்ஷத்திலே ஏதேனும் ஒரு தேசத்திலே ஸாத்யம் எந்த தேசத்தில் உள்ளதோ அந்த தேசத்திலேயே ஹேதுவானது இருக்கவேண்டும். இப்படி பக்ஷம் ஒவ்வொன்றிலும், ஸாத்யம் இருக்குமிடமாகிய ஏதேனும் ஒரு பாகத்திலே ஹேதுவானது இருப்பதையே பக்ஷவ்யாபகத்வம் என்கிறது.

(2) ஸபக்ஷஸத்வம் என்கிறவிடத்தில் ஸபக்ஷமாவது:— பக்ஷத்திலே எந்தவஸ்துவை ஸாதிக்கின்றோமோ அந்த வஸ்துஜாதியைச் சேர்ந்த மற்றொரு வஸ்துவோடு கூடிய அதிகரணம். உதாஹரணம் மஹானஸம் முதலியது. (பர்வதத்திலே ஸாதிக்கவேண்டிய நிலையில் இருப்பது அக்னி, அந்த அக்னி ஜாதியைச்சேர்ந்த மற்றொரு அக்னியானது மடப்பள்ளியில் இருக்கிறது. ஆகவே அதுஸபக்ஷம்) அந்த ஸபக்ஷம் எனப்படுமதில் எல்லாவற்றிலோ அல்லது சிலவற்றிலோ ஹேதுவானது இருப்பதை ஸபக்ஷஸத்வம் என்கிறது. எல்லா ஸபக்ஷங்களிலும் ஹேதுவானது இல்லை என்பதில்லை என்பதையே ஸபக்ஷஸத்வம் என்றபடி!

அநித்யம் என்பதாக ஸாதிக்குமிடத்தில் “ உண்டாகுகை ” என்கிற ஹேறவானது ஸாத்யநிச்சயம் உள்ள இடம் எங்கும் இருக்கின்றது. ஆகவே இம்மாதிரியான ஹேதுக்கள் ஸபக்ஷம் எல்லா வற்றிலும் இருக்குமவையாகும். அக்னி முதலியவற்றை ஸாதிக்கும்பொழுது தூமம் முதலிய ஹேதுக்கள் ஸபக்ஷமான சிலவற்றிலேயே இருக்கின்றனவாகும்.

ஸபக்ஷமே ஹேதுவோடும் கூடியிருந்தால் ஹேதுவிற்கும் ஸாத்யத்தோடு நியதஸம்பந்தத்திற்கு த்ருஷ்டாந்தமாகிறது. ஹேது எங்கு இருக்கிறதோ அங்கு ஸாத்யமும் இருக்கிறது என்பதாக வ்யாப்தியை அறிவதற்கு அந்த ஸபக்ஷமானது இடமாகிறது. ஆகவே அந்த த்ருஷ்டாந்தத்தில் ஹேது ஸாத்யம் இரண்டும் இருக்கவேண்டும்.

(3) விபக்ஷாஸத்வம் என்றவிடத்தில் விபக்ஷமாவது ஸாத்யமும் ஸாத்யத்தின் ஜாதியைச்சேர்ந்த மற்றொன்றும் எங்கு இல்லை

யோ அப்படிப்பட்ட ஸ்தலம். உதாஹரணம் அக்னியை ஸாதிக்குமிடத்தில் ஜலம் முதலியதை விபக்ஷம் என்கிறது. அந்த விபக்ஷம் ஒன்றிலும்கூட ஹேது இல்லாமையை விபக்ஷாஸத்வம் என்கிறது. சில இடங்களில் விபக்ஷம் என்பதே கிடையாது. சிலஇடங்களில் விபக்ஷம் இருந்தும் அதில்ஹேது இல்லை. ஆகவே இப்படி விபக்ஷாஸத்வமானது இரண்டுவிதமானது. (மேல் சொல்லப்போகிற)கேவலான்வயி என்றும் ஹேதுவில் விபக்ஷம் என்பது இல்லாமையால் முதலில் சொல்லிய விபக்ஷாஸத்வம்! அன்வயவ்யதிரேகி என்பதாக நிரூபிக்கப்போகும் ஹேதுவிலே விபக்ஷம் இருந்தும் அதில் ஹேதுவிற்கு ஸம்பந்தம் இல்லாமையால் இரண்டாவது சொல்லிய விபக்ஷாஸத்வம்! என்பதாகக்கண்டு கொள்வது. விபக்ஷாஸத்வம் என்கிற ஆகாரமானது கேவலான்வயி என்கிற ஹேதுவிற்கு இல்லை. ஆகையால் அந்த ஹேதுவிற்கு மற்ற நான்கு ஆகாரங்களே உண்டு என்பதாக பிறர் (வைசேஷிகர்) சொல்லுகிறார்கள்.

அது ஸரியன்று—ஸாத்யம் இல்லாதவிடத்தில் ஹேதுவானது இருக்குமாகில் வ்யபிசாரம் என்கிறதோஷம் ஏற்படுகிறது. இந்த தோஷத்திற்கே விபக்ஷாஸத்வம் என்று பெயர். இந்த தோஷமானது கேவலான்வயி ஹேதுவிற்கும் இல்லை என்பதை வைசேஷிகரும் இசையவேண்டுமன்றோ ? விபக்ஷத்திலில்லை யென்பதையே நாமும் ஹேதுவிற்கு ஆகாரம் என்கிறோம். அன்வயவ்யதிரேகி என்கிற ஹேதுவிற்கும் விபக்ஷத்தில் இல்லாமையே ஆகாரமாகிறது. அந்த ஆகாரமானது கேவலான்வயிக்கும் துல்யமானது ஆகவே அவர்கள் சொல்லுவது ஸரியன்று.

அப்படியாகில் கேவலான்வயி ஸ்தலத்திலும் விபக்ஷம் என்பதாக ஒன்று ப்ரஸித்தமாக வேண்டாமா என்று எண்ணக்கூடாது. ஸாத்யம் இல்லாதஇடத்தில் ஹேது இல்லாமையாகிற வ்யதிரேகவ்யாப்திக்கும், ஸாத்யமில்லாத இடத்தில் ஹேது இருப்பதாகிற வ்யாபிசாரதோஷத்திற்குமே விபக்ஷம் (ஸாத்யம் இல்லாத இடம்) என்பது வேண்டும். ஹேதுவானது விபக்ஷத்தில் இல்லை என்பதற்கும், விபக்ஷம் ஒன்று இருக்கவேண்டும் என்பதற்கில்லை. ஹேது இல்லாத இடமாகியவிபக்ஷத்தையே வ்யதிரேக

த்ருஷ்டாந்தம் என்கிறது. ஹேதுவோடுகூடியவிபக்ஷமும் உண்டு. ஆகையாலேயே ஸாத்யம் இல்லாதவிடத்தில் ஹேது இருப்பதாகிய வ்யபிசார தோஷமும், மற்றும் வ்யாப்யத்வாஸித்தி, முதலிய தோஷமும் மேலே ஹேதுவிற்கு சொல்லப்போகிறோம். ஆகவே ஸாத்யமில்லாத இடத்தில் ஹேது இருப்பதாகிய வ்யபிசாரமும் வ்யாப்தி காண்பிக்கப்படாமை முதலிய தோஷமும் ஹேதுவிற்கு வாராமைக்காக வ்யதிரேக த்ருஷ்டாந்த ஸ்தலத்தில் ஸாத்யம், ஹேது, இவ்விரண்டும் இருக்கக்கூடாது என்கிறோம். வ்யாப்தி (நியதஸம்பந்தம்) யைத் தெளியும் ஸ்தலத்தையன்றோ த்ருஷ்டாந்தம் என்கிறார்கள்.

(4) ப்ரபலமானதொரு ப்ரத்யக்ஷம் முதலிய ப்ரமாணத்தினால் பக்ஷத்திலே ஸாத்யம் இல்லை என்பதாக நிச்சயம் ஏற்பட்டிருந்தால் அப்படிப்பட்ட ஸாத்யத்தை ஸாதிப்பதற்கான ஹேதுவை பாதிதவிஷயம் என்கிறது. உதாஹரணம்:— ஜலமானது, அக்னியுள்ளது, என்றுப்போல் ஸாதிக்குமிடத்தில் ஹேதுவானது பாதிதவிஷயம். அப்படி ஸாத்யமில்லாமையைப்பற்றிய நிச்சயமில்லாவிடில் ஹேதுவை அபாதிதவிஷயம் என்கிறது. உதாஹரணம்:— பர்வதமானது பின்பக்கத்திலே அக்னியை உடையது என்று ஸாதிக்குமிடத்தில் முன்பக்கத்திலே அக்னியானது இல்லை என்பதாக ப்ரத்யக்ஷத்தினால் நிச்சயிக்கப்பட்டபோதிலும் பின்புறத்தில் இல்லை என்பதாக நிச்சயம் இல்லை. ஆகவே பின்பக்கத்தில் அக்னியை ஸாதிக்குமிடத்தில் ஹேதுவை அபாதிதவிஷயம் என்கிறது துல்யமான (ப) பலம் உடையதாகத்தோன்றும் ப்ரமாணத்தினால் ஸாத்யஸித்திக்குத்தடை ஏற்படாமையை.

(5) அஸத்ப்ரதிபக்ஷிதத்வம் என்கிறது உதாஹரணம்:— அக்னியை தூமத்தினால் அநுமானம் செய்யுமிடத்தில் தூமமானது அஸத்ப்ரதிபக்ஷமாகிறது இவ்வாறாக உதாஹரணம்.

## ஹேதுவின் பிரிவு.

ஸாத்யத்தோடு நியதஸம்பந்தம் பெற்ற ஹேதுவானது அன்வயவ்யதிரேகி. என்றும் கேவலான்வயி, என்றும் இரண்டு விதம். அவற்றில், முன்கூறிய பக்ஷஸம்பந்தம் முதலிய ஐந்து

ஆகாரங்களோடு கூடியதாய், ஸாத்யமில்லாதஸ்தலமுடையது மான ஹேதுவை அன்வயவ்யதிரேகி என்கிறது. உதாஹரணம்—பர்வதமானது, அக்னியோடுகூடியது ஏனெனில்? தூமம் இருப்பதால் மஹானஸம் உதாஹரணம் என்பதாக அன்வயவ்யாப்தியும், எது அக்னியோடு கூடியதன்றோ, அது தூமத்தோடுகூடியதன்று, ஜலம் உதாஹரணம், என்பதாக வ்யதிரேகவ்யாப்தியும் இந்த ஹேதுவிற்கு இருப்பதால் இதை அன்வயவ்யதிரேகி என்கிறது.

(பூ) ஹேதுவைக்கொண்டு ஸாத்யத்தை அநுமானம் செய்வதற்கு அன்வயவ்யாப்தியோ. வ்யதிரேகவ்யாப்தியோ இரண்டிலொன்று ஹேதுவிற்குப் போதுமானது. ஆகையால் அந்த ஹேதுவை அன்வயி என்பதாகவோ வ்யதிரேகி என்பதாகவோ சொல்லலாமே.

(ஸி) ஆகிலும் அன்வயம், வ்யதிரேகம், என்கிற இரண்டு வ்யாப்திகளையுமிட்டு அன்வயவ்யதிரேகி என்பதாகச்சொல்வதற்குக்காரணம் என்னவெனில்? இந்த ஹேதுவிற்கு இரண்டு விதங்களான வ்யாப்திகளும் உண்டு என்பதைத் தெரிவிப்பது ஒரு காரணம். மேலும் அன்வயவ்யாப்தி மாத்திரமாவது கேவலான்வயி என்கிற ஹேதுவிற்கும் உண்டு. வ்யதிரேகவ்யாப்தி மாத்திரமாவது அஸாதாரணன் என்கிற, துஷ்ட ஹேதுவிற்கும் உண்டு. ஆகவே இந்த ஹேதுவானது அஸாதாரணம் அன்று கேவலான்வயியும் அன்று என்பதாக வித்யாஸம் தோன்றுவது மற்றொரு காரணம். ஆகவே இரண்டு வ்யாப்திகளையிட்டு அன்வயவ்யதிரேகி என்று சொல்லியது. முன்கூறிய பக்ஷஸம்பந்தம் முதலிய ஐந்து ஆகாரங்களோடுகூடியதாய், விபக்ஷம் (ஸாத்யமில்லாதஸ்தலம்) இல்லாததுமான ஹேதுவைக் கேவலான்வயி என்கிறது. உதாஹரணம்—(1) ப்ரஹ்மமானது, ஏதேனும் சப்தத்திற்குப்பொருள், ஏனெனில் குடம் முதலியவற்றைப்போல்

ப்ரஹ்மமும் வஸ்துவாகையால், அல்லது த்ரவ்யமாகையால், (2) குடம் முதலியவற்றைப்போல், ஜ்ஞானமும், ஒரு வஸ்து வாகையால், ஜ்ஞானத்திற்கு விஷயமா (இலக்கு) னது! இவ்வாருக கேவலான்வயி ஹேதுவிற்கு உதாஹரணம். ஏதேனும் சப்தத்திற்குப்பொருளல்லாததும் ஜ்ஞானத்திற்கு விஷயமல்லாததுமான ஒரு வஸ்துவே கிடையாது. ஆகையால் இங்கு விபக்ஷம் (ஸாத்யமில்லாதஸ்ததலம்) என்பது இல்லை.

(பூ) முயல் கொம்பு முதலிய துச்சவஸ்துவானது இருக்கின்றதே. அது ஒரு சப்தத்திற்கும் பொருள் அன்றே, ஜ்ஞானத்திற்கு விஷயமும் அன்றே. அது விபக்ஷம் (ஸாத்யமில்லாதது) ஆகலாமே.

(ஸி) என்பது கூடாது. இருக்கிறது என்று சொல்லக் கூடாதது துச்சம். ஆகவே துச்சமானது இருக்கிறது என்பது முரண்பட்ட வார்த்தையாகின்றது.

மேலும் பூமியில், குடம், இல்லை என்றுப்போலவே அபாவத்தைப்பற்றிய ஜ்ஞானம் உண்டாகிறது. இங்கு நிஷேதிக்கப்படுமதாகிய குடத்தை ப்ரதியோகி என்கிறது. பூமியை அதிகரணம் என்கிறது ஆகவே அபாவத்தைப்பற்றியஜ்ஞானம் எல்லாம் ஏதேனும் ஒரு அதிகரணத்தையும் ப்ரதியோகியையும் விஷயமாகக்கொள்ளாமல் ஏற்படாது. அதற்காக அதிகரணம் ப்ரதியோகி இவற்றோடு கூடியதாக அபாவத்தை எங்கும் இசைந்தோமாகில் கடம், படம், முதலியவற்றின் அபாவம்போலவே எல்லா அபாவங்களும் ப்ராமாணிகம், அப்படி ப்ரமாணிகமாயுள்ள அபாவத்தையே (ஸா) பாவத்தை போதிக்கும் சப்தத்திற்காட்டில் வேறுபட்டதான அபாவம் என்கிற சப்தத்தினல் சொல்லுகிறோம் என்று தேறுகிறது.

ஆகவே, வஸ்துவாகையால், சப்தத்திற்குப்பொருள், என்பதாக முன்கூறிய அநுமானத்திலுள்ள ஸாத்யமும் ஹேதுவும் அபாவத்திலே இருக்கின்றமையால் அவை இல்லை என்பது விருத்தமாகும். ப்ரஹ்மமானது, த்ரவ்யமாகையால், குணம் உடையது என்பதாக ஸாதிக்குமிடத்தில் த்ரவ்யத்தன்மை இல்லாமை (த்ரவ்யத்வாபாவம்) என்பது விபக்ஷமாகும். இந்த அபாவத்தில் ஸாத்யமும் ஹேதுவும் இல்லை என்பது விருத்தமன்று. ஆனால் இந்த ஹேதுவானது கேவலான்வயி அன்று அன்வயவ்யதிரேகி. குடம் முதலியவற்றின் அபாவத்தைக் காட்டில் வேறுபட்டதாய் "அஸத்" (அபாவம்) என்பது ஒன்று (ஸா) பாவரூபமானது இருப்பதாக தெரியவில்லையே. அதில் ஸாத்யமும் ஹேதுவும் இல்லை என்பதை எப்படி அறிய முடியும்!

முன்கூறியபடி அஸத்து என்பதாக ஒன்று இல்லாமையால் ஸாத்யமில்லாத இடத்தில் ஹேது இல்லை என்பதற்குச் சிலர் துச்சமானதை (அஸத்தை) உதாஹரணமாகக் கொள்ளுவது ஸரியன்று என்றதாயிற்று.

அஸத்தை வ்யதிரேக த்ருஷ்டாந்தமா (ஸாத்யமில்லாமைக்கு உதாஹரணம்) கக் கொள்ளில் ப்ரஹ்மமானது, சப்தத்திற்குப் பொருளன்று, என்றுப்போல் அபாவத்தை ஸாதிக்குமிடத்தில் அஸத்தானது அன்வய த்ருஷ்டாந்தமும்(ஹேது இருக்குமிடத்தில் ஸாத்யமிருப்பதற்கு உதாஹரணம்) ஆகலாமே. அஸத்திலே ஹேது இல்லாமையால் இது உதாஹரணமாகாது என்பது கூடாது ஏனெனில் "அறியப்படாமையால்" என்றுப்போல் அபாவத்தை ஹேதுவாகக்கொள்ளலாம் ஆகையால் ஹேதுவும் இதில் இருக்கின்றது.

ஸ்ரீபாஷ்யம் முதலியவற்றில் சிலவிடத்தில் முயல் கொம்பு முதலியதை உதாஹரணமாக்கியது ப்ரதிபந்தீ என்கிற எண்ணத்

தினுலோ அல்லது மதாந்தரத்த்தை அநுஸரித்தோ என்பதாகக் கண்டுகொள்வது. பிசாசங்களுக்குப் பிசாச பாஷையைக்கொண்டே பதில் சொல்லவேண்டியது என்கிற ந்யாயத்தின்படி பிறர் ஒப்புக்கொண்டரீதியில் அஸத்தை உதாஹரணமாகக் காட்டியுள்ளார் ஸ்ரீபாஷ்யகாரர், மாத்யமிக பௌத்தனுடைய ஸர்வசூன்ய வாதத்தை நிரஸனம் செய்யுமிடத்தில் ப்ரதியோகி, அதிகரணம் சேராமல் நிஷேதம் என்பது சேராது என்பதாக ஸ்ரீபாஷ்யகாரரே காட்டியிருப்பதாலும் பிறர் மதத்தின்படியே மற்ற இடத்தில் அஸத்தை உதாஹரணம் செய்தது என்பதாகக் கொள்ள வேண்டும்.

(பூ) அப்படியாகில் கேவலான்வயி ஹேதுவிற்கு விபக்ஷமே (ஸாதயமில்லாத இடம்) இல்லையாகில் இந்த ஹேதுவானது விபக்ஷத்தில் இல்லை என்பது எப்படிக் கூடும்? ப்ரஸித்தமல்லாத விபக்ஷத்தை இதற்கு நிஷேதிகக்கூடாதே எனில்.

(ஸி) கேவலான்வயி ஹேதுவானது விபக்ஷத்தில் இல்லை என்பது கூடாதாகில் விபக்ஷத்திலே அது இருக்கின்றதோ?

(பூ) விபக்ஷத்தில் இருப்பும் அதற்கில்லை எனில். (ஸி) ஸாத்யமில்லாத இடத்தில் ஹேது இருப்பதாகிய வ்யபிசாரமானது கேவலான்வயிக்கு இல்லை என்பதாகிறது. இதைத்தான் நாமும் விபக்ஷத்தில் இல்லாமை என்கிறோம். இது கேவலான்வயி ஹேதுவிற்கு வேண்டியது தானே. விபக்ஷம் என்பது இல்லாமற்போனாலும் விபக்ஷத்தில் இருக்கிறது கூடாதே

விபக்ஷம் இல்லாமையால் கேவலான்வயியை அநுமானம் என்பது கூடாது "ப்ரமாணிகமாகையால், எல்லாம், அநித்யமானது," என்பது எப்படி ஸமீசீனமன்றோ அப்படியே இதுவும் என்பதாகச்சில குயுக்திவாதிகளின் பக்ஷமானது முன்கூறியபடி கேவலான்வயியும் அநுமானம் என்று ஸித்தித்ததனால் தூஷிதமாயிற்று.

(பூ) கேவலாந்வயிஹேதுவானது ப்ரமாணம் என்றால் "அக்நியானது உஷ்ணமல்லாதது. குடத்தைப்போல் அதுவும் ஒரு பதார்த்தமாகையால்," என்றாப்போலவும் அநுமானம் ஏற்படலாமே யெனில்,

(ஸி) அதுஸரியன்று. அக்நி உஷ்ணமானதென்பது ப்ரத்யக்ஷஸித்தமானவிஷயம். ஆகவே உஷ்ணமல்லாமையென்கிற ஸாத்யமானது பக்ஷமாகிற அக்நியில் இல்லை. ஆகையால் இந்த அநுமானம் பாதம் (பாத:) என்கிற தோஷமுடையது.

(பூ) ஆகிலும் ஸமீசீநஞானத்திற்கு விஷயங்களாகியுள்ள நமது ஸுகம் முதலியவை யாரேனுமொருவர் இந்திரியத்திற்கு விஷயங்களாகின்றன. அவற்றைப்போலவே தர்மம் முதலியவைகளும் ஸமீசீன ஞானத்திற்கு விஷயங்களாவதால் யாரேனுமொருவருடைய இந்திரியத்திற்கு விஷயங்களாகக்கூடும் என்பதாக அநுமானமேற்படக்கூடுமே. அல்லது ப்ரத்யக்ஷத்தைக்காட்டில் வேறுபட்டதொரு ப்ரமாணத்திற்கு மீமாம்ஸகருக்கு விஷயமாயிருப்பதை ஹேதுவாகக்கொண்டாவது அவ்வநுமானம் கூடுமே. இதற்கு முன் அநுமானத்தைப்போல் பாதம் (பாத:) என்கிறதோஷம் சொல்லுவதற்கில்லையே யெனில்,

(ஸி) இது ஸரியன்று. தர்மம் முதலியவை ஸமீசீநஞானத்திற்கு விஷயங்களேயாகிலும் இந்திரியத்தினால் அறியப்படவேண்டாவே என்பதாக ஹேதுவைமட்டில் இசைந்து ஸாத்யத்தை இசையாவிட்டால் யாதொருபாதகமுமில்லை. இவ்வாறு தூஷணத்தை முன்பு (ப்ரத்யக்ஷாத்யாயம் 2-வது ஆஹ்நிகத்தில்) சொல்லியுள்ளோம். குடம் முதலிய வஸ்துவைப்போல் ஞானமும் ஒரு வஸ்துவாகையால் மற்றொரு ஞானத்திற்கு விஷயமா (இலக்கு) னது என்பதாக நாம் இசைந்துள்ள கேவலாந்வயி அநுமானத்தில் இந்ததோஷம் ஏற்படாது. அதில் ஹேதுவைமட்டில் இசைந்து ஸாத்யத்தை யில்லையென்றால் ஞானமானது மற்றொரு ஞானத்திற்கு விஷயமாகாது என்று தேறுகிறது. அது தனக்குத் தானே தோற்றுவதேயாகிலும் மற்றொரு ஞானத்திற்கும் விஷயமாகவேண்டும். இல்லாவிடில் ஞானம் என்கிற அர்த்தத்தைச் சொல்லக்கூடிய "ஞானம்" முதலிய சப்தத்தை ப்ரயோகம்செய்

யால் இந்தக்கேவலவ்யதிரேகி ஹேதுவிற்கு ஸாத்யத்தோடு வ்யாப்தியானது கிடையாது.

(ஸி) என்று எண்ணக்கூடாது. ப்ருஹ்மமானது, சப்தத்திற்குப்பொருளானது, ஏனெனில் குடம் முதலியவற்றைப்போல் அதுவும் ஒரு வஸ்துவாகையால், என்பதாக கேவலாந்வயி அநுமானம் முன்கூறப்பட்டதன்றோ. இவ்வநுமானத்தில் வ்யதிரேக வ்யாப்தியானது இல்லை. எது பதத்திற்குப்பொருளன்றோ அது வஸ்துவன்று என்பதாக வ்யதிரேக வ்யாப்தியைக்கொள்ளுவதற்கு உதாஹரணம் ஒன்றுமில்லையே. ஆகவே வ்யதிரேக வ்யாப்தியில்லாமையால் கேவலாந்வயி ஹேதுவிற்கும் ஸாத்யத்தோடு வ்யாப்தியில்லை என ப்ரஸங்கிக்குமே. கேவலாந்வயி ஹேதுவிற்கு அந்வயவ்யாப்திமாத்திரமே உள்ளதுபோல் கேவல வ்யதிரேகி ஹேதுவிற்கு வ்யதிரேக வ்யாப்திமாத்திரமே உள்ளது.

மேலும் தூமமிருப்பதால் பர்வதமானது அக்நியுள்ளது என்பதான அந்வயவ்யதிரேகி அநுமானத்திலே தனித்தனியே அந்வயவ்யாப்தியையும் வ்யதிரேக வ்யாப்தியையும் காட்டவேண்டுமென்பதாக ஒப்புக்கொள்ளுகிறோம். எங்கு தூமமிருக்கின்றதோ அக்நியுமங்கு இருக்கின்றது என்பதாக அந்வயவ்யாப்தி. அக்நி எங்கு இல்லையோ அங்கு தூமமுமில்லை யென்பதாக வ்யதிரேக வ்யாப்தி. இவ்விரண்டு வ்யாப்திகளையும் அந்வய வ்யதிரேகி ஹேதுவிற்குப் பிறகும் இசைந்திருப்பதால் வ்யதிரேக வ்யாப்திக்கு அநுமானத்தில் உபயோகமொன்றுமில்லை யென்பது கூடாது.

வரதவிஷ்ணுமிச்ரரும் கேவலவ்யதிரேகியை ஒப்புக்கொள்ளுகிறார். "அந்தஹேதுவானது அந்வயவ்யதிரேகியென்றும் கேவலாந்வயி என்றும் கேவலவ்யதிரேகியென்றும் மூன்றுவிதம்" என்றிவ்வாறாக அவரால் சொல்லப்பட்டது. "கௌதமர், ஹேது மூன்றுவிதம் என்பதாக ஸூத்ரத்தில் சொல்லியுள்ளார்" என்றுப்போல் தத்வரத்நாகரம் என்கிற க்ரந்தத்திலும் ஸ்ரீபராசரபட்டர் அருளிச்செய்திருக்கிறார். ஆகவே கேவலவ்யதிரேகி ஹேது என்பதும் ஒன்று இருப்பதால் ஹேதுவானது இரண்டுவிதம் என்பது உபபந்நமன்றெனில்.

பதார்த்தமாகக்கொண்டால் பக்ஷமாகிய குடத்தில் அப்படிப் பட்ட பாவ (ஸாவ) பதார்த்தமாகிய குடமல்லாமை என்கிறஸாத் யமானது இல்லாமற் போகிறது.

அஞ்ஞானமே அப்படிப்பட்ட பாவ (ஸாவ) பதார்த்தமென்ப தாகக்கொண்டால் அஞ்ஞானமல்லாமை என்பது குடத்திலேயிருப் பதால் பக்ஷத்திலே ஸாத்யமானது உபபந்நமாகிறது. ஆகவே இவ்வநுமானத்தினால் அஞ்ஞானமானது (ஸாவ) ரூபமாக ஸித்திக் கிறது. என்பதுவே அது. இவ்வாறான அநுமானங்களில் ஹேது வையிசைந்து ஸாத்யத்தை யிசையாவிடில் தோஷம் ஒன்றுமில்லா மையால் இவை ஸமீசீனங்களாகமாட்டா. ஸாத்யமானது இல்லாமற்போனால் விரோதமேற்படுவதாகில் இவ்வனுமானங்கள் ஸாத்யமில்லாமையை ஸாதித்துக்கொடுக்க சக்தியில்லாதவை என்பதாகிறது. ஆகவே எல்லாவற்றையும் ஸாதித்துக்கொடுப் பதற்கு இவை ஸமர்த்தங்கள் என்பதாக அவர்கள் இசைந்திருப் பது அநுபபந்நமாகும்.

## கேவலவ்யதிரேகி தூஷணம்.

(பூ) அந்வயவ்யதிரேகியென்றும் கேவலாந்வயி என்றும் ஹேதுவானது இரண்டுவிதமே யென்றது கூடாது. கேவலவ் யதிரேகியென்பதாகவும் ஹேது ஒன்று இருக்கிறதே. எப்படி யெனில், ஞானமானது, மற்றொருஞானத்திற்கு விஷயம் (இலக் கு) அல்லாதது, ஞானத்தன்மையுடையதாகையால், எதுமற்றொரு ஞானத்திற்கு விஷயமாகின்றதோ அது ஞானமன்று. இதற்குக் குடம் உதாஹரணம் என்பதாக கேவலவ்யதிரேகி அநுமானம் எங்கு ஸாத்யமானது இல்லையோ அங்குஹேதுவும் இல்லை என்ப தாக வ்யதிரேகவ்யாப்தி மாத்திரமே இவ்வநுமானத்திலுள்ளதா கையால் இது கேவலவ்யதிரேகியாகின்றது.

(பூ) இவ்வநுமானத்திற்கு அந்வயவ்யாப்தி என்பதுகிடை யாது. எது ஞானத்தன்மையுடையதோ அது மற்றொரு ஞானத் திற்கு விஷயமாகாது என்பதாக அந்வயவியாப்தியை இசைவதா னல் உதாஹரணமொன்றுமில்லை. பக்ஷமாகிய ஞானமே த்ருஷ் டாந்தமுமாகமாட்டாது. ஆகவே அந்வயவ்யாப்தியில்லாமை

யால் இந்தக்கேவலவ்யதிரேகி ஹேதுவிற்கு ஸாத்யத்தோடு வ்யாப்தியானது கிடையாது.

(ஸி) என்று எண்ணக்கூடாது. ப்ரும்மமானது, சப்தத்திற்குப்பொருளானது, ஏனெனில் குடம் முதலியவற்றைப்போல் அதுவும் ஒரு வஸ்துவாகையால், என்பதாக கேவலாந்வயி அநுமானம் முன்கூறப்பட்டதன்றே. இவ்வநுமானத்தில் வ்யதிரேக வ்யாப்தியானது இல்லை. எது பதத்திற்குப்பொருளன்றே அது வஸ்துவன்று என்பதாக வ்யதிரேக வ்யாப்தியைக்கொள்ளுவதற்கு உதாஹரணம் ஒன்றுமில்லையே. ஆகவே வ்யதிரேக வ்யாப்தியில்லாமையால் கேவலாந்வயி ஹேதுவிற்கும் ஸாத்யத்தோடு வ்யாப்தியில்லை என ப்ரஸங்கிக்குமே. கேவலாந்வயி ஹேதுவிற்கு அந்வயவ்யாப்திமாத்திரமே உள்ளதுபோல் கேவல வ்யதிரேகி ஹேதுவிற்கு வ்யதிரேக வ்யாப்திமாத்திரமே உள்ளது.

மேலும் தூமமிருப்பதால் பர்வதமானது அக்நியுள்ளது என்பதான அந்வயவ்யதிரேகி அநுமானத்திலே தனித்தனியே அந்வயவ்யாப்தியையும் வ்யதிரேக வ்யாப்தியையும் காட்டவேண்டுமென்பதாக ஒப்புக்கொள்ளுகிறோம். எங்கு தூமமிருக்கின்றதோ அக்நியுமங்கு இருக்கின்றது என்பதாக அந்வயவ்யாப்தி. அக்நி எங்கு இல்லையோ அங்கு தூமமுமில்லை யென்பதாக வ்யதிரேக வ்யாப்தி. இவ்விரண்டு வ்யாப்திகளையும் அந்வய வ்யதிரேகி ஹேதுவிற்குப் பிறகும் இசைந்திருப்பதால் வ்யதிரேக வ்யாப்திக்கு அநுமானத்தில் உபயோகமொன்றுமில்லை யென்பது கூடாது.

வரதவிஷ்ணுமிச்ரரும் கேவலவ்யதிரேகியை ஒப்புக்கொள்ளுகிறார். "அந்தஹேதுவானது அந்வயவ்யதிரேகியென்றும் கேவலாந்வயி என்றும் கேவலவ்யதிரேகியென்றும் மூன்றுவிதம்" என்றிவ்வாறாக அவரால் சொல்லப்பட்டது. "கௌதமர், ஹேது மூன்றுவிதம் என்பதாக ஸூத்ரத்தில் சொல்லியுள்ளார்" என்றாப்போல் தத்வரத்நாகரம் என்கிற க்ரந்தத்திலும் ஸ்ரீபராசரபட்டர் அருளிச்செய்திருக்கிறார். ஆகவே கேவலவ்யதிரேகி ஹேது என்பதும் ஒன்று இருப்பதால் ஹேதுவானது இரண்டுவிதம் என்பது உபபந்நமன்றெனில்.

(ஸி) கேவலவ்யதிரேகி ஹேது என்பது இல்லை என்று கொள்வதில் பூர்வாசார்ய வாக்யவிரோத மொன்றுமில்லை. ஸ்ரீ ஆளவந்தார் ஆத்மஸித்தியென்றும் க்ரந்தத்தில் "கேவலவ்ய திரேகியோவெனில் ஹேதுவிற்குரிய ஸ்வபாவமுடையதன்று. ஸபக்ஷத்தில் (ஸாத்யத்தைப்பற்றிய நிச்சய மிருக்குமிடத்தில்) அதற்கு ஸம்பந்தமில்லை. ஆகவே அஸாதாரணம் என்கிற ஹேது வைப்போல் அதுவும் துஷ்டமானது" என்றிவ்வாறாக விஸ்தார மாகச் சொல்லியிருக்கிறார்.

ந்யாயகுலிசம் என்கிற க்ரந்தத்தில் ஸ்வப்ரகாசவாதம் எனும் நான்காவது வாதத்தில் அப்புள்ளார் அருளிச்செய்திருப்ப தாவது "ஞானமானது, இதராபேக்ஷையன்றிதானாகவேப்ரகாசிக் கின்றது, ஏனெனில் ஞானத்தன்மையுடையதாகையால், என்கிற இவ்வநுமானமானது ஸித்தாந்தியாகிய விசிஷ்டாத்வைதியினு டையதன்று.

ஏனெனில் கேவலவ்யதிரேகி அநுமானத்தை ப்ரமாணம் என்பதாக ஸித்தாந்தி இசைவதில்லையன்றோ. இவ்வநுமானம் கேவலவ்யதிரேகியாகிறதே" என்பதாக அவ்வாக்யம். ஆகையி னால் வரதவிஷ்ணுமிச்ரர்சொல்லியது" ஸித்தாந்திகளுக்குள் சில ருடைய கொள்கையாகலாம், அல்லது நையாயிகர்மதத்தைத் தழுவி சொல்லியதுமாகலாம். தத்வரத்நாகரத்திலும் ஹேது மூன்றுவிதம் என்பதாக கௌதமர் ஸூத்ரத்தில் சொல்லியிருக் கிறார் என்று ஆரம்பித்துச்சொல்லப்பட்டது. அது தமது மதம் என்பதாக ஆரம்பித்துச் சொல்லப்படவில்லை.

(ஹு) அதே தத்வரத்நாகர க்ரந்தத்தில் "துஷ்டஹேதுக்களை நிரூபணம் செய்யுமிடத்தில் இவ்வாறாகச் சொல்லப்பட்டிருக்கி றதே. அதாவது — "கேவலவ்யதிரேகியானது அநத்யவஸிதம் என்றும் அத்யவஸிதம் என்றும் இரண்டுவிதம். அவற்றில் அஸாதாரண்யம் என்கிற தோஷமானது அநத்யவஸிதம் என்கிற கேவலவ்யதிரேகி ஹேதுவிற்குரிய தர்மமாகும். ஸபக்ஷமொன்று (ஸாத்யத்தைப்பற்றி நிச்சயம் இருக்குமிடம்) இருக்கச்செய்தே ஸாத்யத்தை ஸந்தேஹிக்குமிடமாகிய பக்ஷமாத்ரத்தில் இருக்கு மதை முதற்கூறிய அஸாதாரணம் என்கிறது. ஸாத்ய நிச்சயஸ்

தலம் இல்லாததும், ஸாத்யமில்லாமையைப்பற்றிய நிச்சயம் ஏற்பட்டஸ்தலத்திலே இராததுமான ஹேதுவை மற்ருெரு கேவல வ்யதிரேகி என்கிறது. ஸாத்யம் இருக்குமிடமாகிய ஸபக்ஷமொன்று நிச்சிதமாயிருக்க அதில் ஹேதுவானது இல்லையாகில் அந்த ஹேதுவிற்கு ஸாத்யத்தோடு ஸம்பந்தமில்லையென்பதை அந்த ஸபக்ஷத்திலேயே அறியலாம். ஆகையால் அந்த ஹேதுவானது ஸமீசீநமன்று என்பது தெளிவாகின்றது. ஸபக்ஷத்தைப் பற்றிய நிச்சயமிராதபொழுது ஹேதுவானது பக்ஷத்திலே ஸாத்யத்தோடு ஸம்பந்தம்பெற்றிருப்பதாக முன்கூறிய ப்ரமாணத்தின்படி நிச்சயிக்கமுடியும். ஆகையால் அந்த ஹேதுவானது ஸமீசீநமென்னலாம்" என்பதே அது.

(ஸி) அவ்வாறுகச் சொல்லியுள்ள விஷயத்தில் அவருக்குத் தாத்பர்யமில்லை என்று எண்ணுகிறேம். அதில் தாத்பர்ய முண்டாகில் பர்வதத்திலே தூமத்தைக்கொண்டு அக்னியை ஸாதிக்குமிடத்திலும் அந்த தூமமானது துஷ்டமென வேண்டிவரும். அந்த தூமமானது ஸாத்யத்தைப்பற்றி நிச்சயம் செய்யும் இடமாகிய மஹாநஸம் முதலிய சிற்சில ஸபக்ஷங்களிலேயே இருக்கிறது. அயோகோளகம் (காய்ச்சிய இரும்பு உருண்டை) என்கிற ஸபக்ஷத்தில் இராமையால் அதற்கு அந்த விடத்தில் ஸாத்யத்தோடு ஸம்பந்தமில்லையே. அயோகோளகத்தில் தூமம் இராமையினுலேயே அதற்கு ஸாத்யத்தோடு ஸம்பந்தமில்லை என்று சொல்லவாமன்ருே. ஆகையால் ஸ்ரீ பட்டருக்கு அதில் தாத்பர்யமில்லை என்று தோன்றுகிறது. அவர் கேவலவ்யதிரேகி ஹேதுவிற்கு லக்ஷணத்தை நிரூபணம் செய்யுமிடத்தில் அவருடைய திருவுள்ளம் ஸ்பஷ்டமாகின்றது. எப்படியெனில், ஸபக்ஷம் (ஸாத்ய நிச்சயஸ்தலம்) இல்லாதது என்பதாக லக்ஷணத்திலே சேர்த்திருக்கிருர் அன்ருே. ஸபக்ஷமில்லாமையால் கேவலவ்யதிரேகி ஹேதுவிற்கு ஸாத்யத்தோடு ஸம்பந்தம் சொல்வதற்கில்லையாகையால் அந்த ஹேதுவானது ஆபாஸம் என்பதாக அவர் திருவுள்ளம். ஸபக்ஷமில்லாவிடினும் ஸாத்யத்தை அநுமானம் செய்யுமிடமாகிய பக்ஷத்திலேயே ஹேதுவிற்கு ஸாத்யத்தோடு ஸம்பந்தமிருப்பதாக ஊஹிப்பதற்குரிய ப்ரமாணம் உண்டு என்பதாக அவர் சொல்லியுள்ளாரேயெனில், அதிலும் அவருக்கு நோக்

கமில்லை. பக்ஷத்திலேயே ஹேதுவிற்கு ஸாத்யத்தோடு ஸம்பந்தத்தை அநுமானம் செய்வதற்குரிய ப்ரமாணங்கள் பொதுவாக மேலே தூஷிக்கப்படப் போகின்றனவே.

(பூ) ஸபக்ஷம் சிலவற்றிலே மாத்திரம் இருக்குமதாகிய தூமம் முதலியதும் ஆபாஸமாக வேண்டிவரும் என்பதாக முன் சொல்லியது பொருந்தாது. ஏனெனில் மஹாநஸம் முதலிய ஸபக்ஷத்திலேயே ஹேதுவிற்கு ஸாத்யத்தோடு ஸம்பந்தமும் இருக்கின்றது. ஆகையால் ஸாத்யத்தோடு ஸம்பந்தமில்லாமையை அதற்கு எப்படி ஸந்தேஹிக்கக்கூடும்.

(ஸி) அப்படியாகில் ஸபக்ஷமிருக்கச்செய்தேயும் அதிலேயிராமல் பக்ஷத்திலேமட்டில் இருக்குமதாகிய அஸாதாரண ஹேதுவிற்கும் ஸாத்யத்தோடு ஸம்பந்தம் எப்படிப்பொருந்தும்? ஸபக்ஷத்திலே ஸாத்யத்தோடு ஸம்பந்தம் பெறுவிட்டாலும் பக்ஷத்திலேயே ஸாத்யத்தோடு ஸம்பந்தமானது அஸாதாரண ஹேதுவிற்கும் இருக்கிறதன்றோ.

(பூ) ஆகிலும் பக்ஷம் தவிர மற்றவிடம் ஒன்றிலும் அந்த ஹேதுவிற்கு ஸாத்யாத்தோடு ஸம்பந்தத்தைக் கண்டதில்லை. ஆகவே அஸாதாரணமான ஆபாஸம் எனில் (ஸி) கேவலவ்யதிரேகி ஹேதுவிற்கும் ஸாத்யத்தோடு ஸம்பந்தத்தை பக்ஷம் தவிர மற்றவிடத்தில் காணாமையால் அதுவும் அஸாதாரணனைப்போல் ஆபாஸம் என்பது ஸமானமானது.

(பூ) கேவலவ்யதிரேகி ஹேதுவிற்கு ஸாத்யத்தோடு ஸம்பந்தத்தை பக்ஷம் தவிர மற்றவிடத்தில் எப்படி காணவில்லையோ அவ்வாறே ஸாத்யத்தையும் பக்ஷந்தவிர மற்றவிடத்தில் காண முடியாது. ஆகையினால் அஸாதாரணனைக்காட்டிலும் இதற்கு இந்த வித்யாஸமொன்று இருக்கிறது. ஆகவே இதுஸமீசீநஹேதுவாகலாமே எனில் (ஸி) இந்தஸமாதானம் ஆச்சரியமானது! பாபியாகிய உனக்கு தோஷமே குணமாகத் தோன்றுகிறது. உன் ஸமாதானத்தின்படி கேவலவ்யதிரேகி ஸ்தலத்தில் ஸாத்யமும் ப்ரஸித்தமன்று என்பதாக மற்றொருதூஷணமும் ஏற்படுகிறது. ஆகவே அது ஆபாஸம் என்றே முடிவுபெறுகிறதன்றோ.

(பூ) ஸாத்யமானது பக்ஷம் தவிர மற்ற ஓரிடத்திலும் ப்ரஸித்தமில்லாமையால் ஸாத்யஸம்பந்தமில்லாமையையும் அந்தஹேதுவிற்கு நாம் காணமுடியாதே. ஆகையால் அதுஸமீசீநஹேதுவாக ஆகக்கூடுமேயெனில் (ஸி) ஸாத்யஸம்பந்தமில்லாமையைக் காணுமையால் கேவலவ்யதிரேகியானது ஸமீசீநம் என்பதாகில் ஸாத்யஸம்பந்தமில்லாமையையும் அந்தஹேதுவிற்கு நாம் காண முடியாதே! ஆகையால் அது ஸமீசீநஹேதுவாக ஆகக்கூடுமேயெனில் (ஸி) ஸாத்யஸம்பந்தமில்லாமையைக் காணுமையால் கேவலவ்யதிரேகியானது ஸமீசீநம் என்பதாகில் ஸாத்யஸம்பந்தமில்லாமையைக் காண்பதென்கிறது தோஷமென்று இசைந்ததாகிறது. ஆகவே தூமத்தைக்கொண்டு அக்னியை அநுமானம் செய்யுமிடத்தில் அந்த தூம ரூப ஹேதுவிற்கும் அந்த தோஷத்தை விலக்க முடியாது. எப்படியெனில் தூமமானது மஹாநஸம் முதலிய ஸபக்ஷம் சிலவற்றிலேயே இருக்கின்றது. அயோகோளகத்தில் (காய்ச்சிய இரும்பு உருண்டை) அதற்கு ஸாத்யத்தோடு ஸம்பந்தமில்லாமையைக் காண்கிறோம். ஆகவே அதுவும் துஷ்டமாக வேண்டும்.

(பூ) அயோகோளத்திலே ஸாத்யஸம்பந்தமானது தூமத்திற்கு இராவிடினும் மஹாநஸத்திலே ஸாத்தியத்தோடு ஸம்பந்தத்தை அதற்குக்காண்கிறோமே. ஆகவேதோஷமில்லை. தூமம் ஸமீசீந ஹேதுவாகலாம் எனில் (ஸி) அப்படியாகில் கேவலவ்யதிரேகி ஹேதுவிற்கு ஸாத்யத்தோடு ஸம்பந்தத்தை ஓரிடத்திலும் காணுமையால் அதற்கு ஸாத்யத்தோடு ஸம்பந்தமிருப்பதாக ஞானம் உதிக்கமாட்டாது. ஆகவே அது ஆபாஸம் என்று ஸித்திக்கிறது. அதற்கு ஸாத்ய ஸம்பந்தம் இல்லையென்பதில்லை யென்பதாக நீ சொல்வது ப்ரயோஜனமற்றது.

(பூ) கேவலவ்யதிரேகி ஹேதுவிற்கு பக்ஷத்திலேயே ஸாத்யத்தோடு ஸம்பந்தமானது தோன்றுகிறது. ஆகையால் அதற்கு ஸாத்ய ஸம்பந்தம் காணுமென்பது ஸரியன்றே யெனில் (ஸி) இதுவும் ஸரியன்று. இப்படியாகில் அந்யோந்யாச்ரயம் என்கிற தோஷமேற்படுகிறது. எப்படியெனில் ஹேதுவிற்கு ஸாத்யத்தோடு ஸம்பந்தத்தை நிச்சயம் செய்தபிறகு அந்த ஹேதுவைக் கொண்டு ஸாத்யத்தைஅநுமானம் செய்யவேண்டும். ஸாத்யத்தை

அநுமானம் செய்த பிறகு ஹேதுவிற்கு ஸாத்யத்தோடுள்ள நியதஸம்பந்தத்தை நிச்சயம் செய்யவேண்டும் என்பதாக அந்த அந்யோந்யாச்ரயதோஷம்.

(பூ) பக்ஷத்திலே ஸாத்யத்தை அநுமானம் செய்யாமலேயே ஸாத்யத்தோடு ஹேதுவிற்குள்ள நியதஸம்பந்தத்தை நிச்சயம் செய்யலாம். எப்படி எனில்—ஸாத்யமானது எங்கு இல்லையோ அங்கு ஹேதுவும் இருக்கமாட்டாது. ஆகவே ஸாத்யத்தின் அபாவத்திற்கு ஹேதுவின் அபாவமானது வ்யாபகமாகின்றது. வ்யாபகம் இல்லாவிடில் வ்யாப்யம் இருக்கமாட்டாது. ஆகையால் ஹேதுவின் அபாவமாகிய வ்யாபகம் இல்லாமையால் ஸாத்யத்தின் அபாவமாகிய வ்யாப்யமும் இல்லை என்று இசையவேண்டும். ஹேதுவின் அபாவம் இல்லை என்பதனால் ஹேது இருக்கிறது என்றும் ஸாத்யத்தின் அபாவமில்லை என்பதனால் ஸாத்யம் இருக்கிறது என்றும் ஏற்படுகிறது. இப்பொழுது ஹேது இருப்பதனால் ஸாத்யம் இருக்கிறது என்பதாக ஸாத்யத்தோடு ஹேதுவிற்கு வ்யாப்தி (நியதஸம்பந்தம்) யானது ஸித்திக்கின்றது. இவ்வாறாக ஹேதுவின் அபாவத்தோடு ஸாத்யத்தின் அபாவத்திற்குள்ள நியதஸம்பந்தமாகிய வ்யதிரேகவ்யாப்தியை ஹேதுவாகக்கொண்டு, ஸாத்யத்தோடு ஹேதுவிற்குள்ள நியதஸம்பந்தமாகிய அந்வயவ்யாப்தியை அநுமானம் செய்யலாம். எந்த வஸ்துவின் அபாவமானது மற்றொரு வஸ்துவின் அபாவத்திற்கு வ்யாப்யமாகிறதோ அந்த வஸ்துவானது அந்த மற்றொரு வஸ்துவிற்கு வ்யாபகமாகும். அப்படியே ஒரு வஸ்துவின் அபாவமானது மற்றொரு வஸ்துவின் அபாவத்திற்கு வ்யாபகமாகில் அந்த வஸ்துவானது அந்த மற்றொரு வஸ்துவிற்கு வ்யாப்யமாகும். உதாஹரணம் வஹ்னியின் அபாவமானது வ்யாப்யம். தூமத்தின் அபாவமானது வ்யாபகம் என்பதாக அபாவங்களுக்கு உள்ள வ்யாப்தி. அதற்கு மாறுபட்டதாக வஹ்னியானது வ்யாபகம் தூமமானது வ்யாப்யம் என்பதாக பாவஸ்த்தலத்தில் உள்ள வ்யாப்தி. இப்படி ஸாத்யத்தின் அபாவத்திற்கும் ஹேதுவின் அபாவத்திற்கும் பரஸ்பரம் வ்யாப்தி (நியதஸம்பந்தம்) இருக்குமிடம் எங்கும் ஸாத்யத்திற்கும் ஹேதுவிற்கும் பரஸ்பரம் நியதஸம்பந்தமானது ஸித்திக்கின்றதே எனில்.

(வி) இவ்வாறாக ஹேதுவின் அபாவத்தோடு ஸாத்யத்தின் அபாவத்திற்குள்ள வ்யதிரேகவ்யாப்தியை ஹேதுவாகக்கொண்டு ஹேதுவிற்கு ஸாத்யத்தோடு அந்வயவ்யாப்தியை (நியதஸம்பந்தம்) அநுமானம் செய்வது கூடாது. ஏனெனில்

(ச்லோ) வ்யதிரேகவ்யாப்தியாகிய ஹேதுவிற்கும் அந்வய வ்யாப்தியாகிய ஸாத்யத்திற்கும் பரஸ்பரம் வ்யாப்தி இருப்பதாக இசைகின்றீரா? முதல் பக்ஷத்தில் அந்வயவ்யாப்தியும் இருக்க வேண்டுமே. ஸாத்யமும் ஹேதுவும் கேவலாந்வயிகளான இடத்தில் ஹேதுவிற்கு அந்வயவ்யாப்தி மாத்திரமே உள்ளது. வ்யதிரேகவ்யாப்தியானது கிடையாதே. எதற்கு அபாவம் என்பது அப்ரஸித்தமோ அதை கேவலாந்வயி என்கிறது வ்யதிரேகவ்யாப்தியாவது—ஸாத்யத்தின் அபாவத்திற்கு வ்யாபகமாயிருப்பதொரு அபாவத்திற்கு ஹேதுவானது ப்ரதியோகியாகை (எதிர்பொருள்) ஸாத்யத்தின் அபாவமிருக்குமிடமெங்கும் ஹேதுவின் அபாவமும் இருப்பதே வ்யதிரேகவ்யாப்தி என்றபடி (வ்யாப்யமான ஹேதுவானது வ்யாபகமாயுள்ள ஸாத்யத்தின் அபாவத்திற்கு வ்யாபகமாயிருப்பதொரு அபாவத்திற்குப் ப்ரதியோகியாகை கேவலான்வயி ஸ்தலத்தில் எப்படிகூடும் என்று பொருள்).

(2) ஸாத்யநிச்சயமுள்ள இடம் எங்கும் இருக்குமதான கேவலாந்வயி ஹேதுவிற்கோ, அப்படிப்பட்ட ஹேதுவிற்கு வ்யாபகமாயுள்ள கேவலாந்வயி ஸாத்யத்திற்கோ அபாவம் என்பது அப்ரஸித்தமாகையால் அந்த ஸாத்யமும் ஹேதுவும் அபாவத்திற்கும் ப்ரதியோகி (எதிர்பொருள்) யாகமாட்டாவே. ஆகவே ஸாத்யாபாவத்திற்கும் ஹேதுவின் அபாவத்திற்கும் கேவலாந்வயி ஸ்தலத்தில் வ்யதிரேகவ்யாப்தியை இசைய முடியாது அன்வயவ்யாப்தி மாத்திரம் உள்ளது. ஆகையால்அந்வயவ்யாப்தி உள்ள இடமெங்கும் வ்யதிரேகவ்யாப்தியும்உண்டு என்பது தவறு.

அந்வயவ்யாப்தி இருக்குமிடம் எங்கும் வ்யதிரேகவ்யாப்தி இருக்கவேண்டும் என்கிற நியதி இல்லை. வ்யதிரேகவ்யாப்தியுள்ள ஸ்தலத்திலே அந்வயவ்யாப்தி இருக்கவேண்டும் என்பதாக இரண்டாவது பக்ஷத்தில் ஹேது ஸாத்யங்கள் கேவலாந்வயிகளாக இருக்குமிடங்களில் முன்கூறிய தூஷணம் இல்லையா

கிலும்வ்யதிரேகவ்யாப்தியைக்கொண்டு அந்வயவ்யாப்தியைஅநுமானம் செய்வதனால் அஸாதாரணன் என்கிற துஷ்ட ஹேதுவிற்கும் அவ்வாறாக வ்யாப்தி இருப்பதாகச் சொல்லக்கூடும். எப்படி எனில்—கந்தம் உடையதாகையால், ப்ருதிவியானது, நித்யமானது, என்பதாக ஸாதிக்குமிடத்தில் இந்த ஹேதுவை அஸாதாரணன் என்கிறது. எங்கு நித்யத்தன்மை இல்லையோ அங்கு கந்தமும் இல்லை என்பதாக ஹேதுவின் அபாவத்தோடு ஸாத்யத்தின் அபாவத்திற்குள்ள வ்யதிரேகவ்யாப்தியை ஜலம் முதலியவற்றில் காண்கிறோம். வ்யாபகமாயுள்ள கந்தாபாவம் ப்ருதிவியில் இல்லை ஆகையால் வ்யாப்யமான அநித்யத்வமும் (நித்யத்தன்மை இல்லாமை) அதில் இல்லை என்று ஏற்படுகிது. இதனால் கந்தமுள்ள இடம் எங்கும் நித்யத்தன்மையுள்ளது என்பதாக நித்யத்தன்மையாகிய ஸாத்யத்தோடு ஹேதுவாகிய கந்தத்திற்குள்ள அந்வயவ்யாப்தியை ஸாதித்துக்கொடுத்தே வ்யதிரேகவ்யாப்தியானது முடிவுபெறுகின்றது. என்பதாக அஸாதாரண ஹேதுவிற்கும் ஸாத்யத்தோடு வ்யாப்தியைச் சொல்லலாமே.

(பூ) ஆகிலும் அஸாதாரண ஹேதுவாகிய கந்தத்திற்கு ஸாதயமாகிய நித்யத்தன்மையோடு வ்யாப்தி இருப்பது போலவே அநித்யத்தன்மையோடும் வ்யாப்தி இருப்பதை அறிய முடியும். எப்படி எனில்—அநித்யத்தன்மை இல்லாத இடத்தில் கந்தமும் இல்லை என்பதாக காலம் முதலிய நித்யவஸ்துக்களில் காண்கிறோம் வ்யாபகமாகிய கந்தாபாவம் இல்லாமையால் வ்யாப்யமான அநித்யத்வாபாவமும் ப்ருதிவியில் இல்லை என்பதாக வ்யதிரேகவ்யாப்தி இருப்பதைக்கொண்டு கந்தத்திற்கு அநித்யத்தன்மையோடும் வ்யாப்தி இருப்பதாக ஸித்திக்கிறது. கேவலவ்யதிரேகிக்கும் அஸாதாரணனுக்கும் உள்ள வித்யாஸம் எனில்.

(ஸி) அப்படியாகில் அஸாதாரணஹேதுவிற்குஸாத்யத்திற்கு விருத்தமாயிருப்பதொன்றோடு வ்யாப்தி ஸித்திப்பது போலவே கேவலவ்யதிரேகி ஹேதுவிற்காட்டில் வேறுபட்டதொரு ஹேதுவிற்கும் கேவலவ்யதிரேகி ஸாத்யத்தோடு வ்யாப்தியை அறிய முடியும் என்பதாக அஸாதாரணனுக்குச் சொல்லும் தோஷம் கேவலவ்யதிரேகிக்கும் துல்யமானது.

எப்படி எனில்—ஜ்ஞானமானது, மற்றொரு ஜ்ஞானத்தினால் அறியப்படமாட்டாது; என்பதாக ஸாதிக்குமிடத்தில் ஜ்ஞானத் தன்மையை, கேவலவ்யதிரேகி என்கிறது. இவ்வாறாகவே குடமானது மற்றொரு ஜ்ஞானத்தினாலன்றிக்கே தானாகவே பிரகாசிக்கின்றது, குடத்தன்மை உடையதாகையால், எது தானாகவே பிரகாசிப்பதில்லையோ, அது குடத்தன்மை உடையதன்று. வஸ்திரம் உதாஹரணம் என்பதாக மற்றொரு ஹேதுவிற்கும் ப்ருக்ருத ஸாத்யத்தோடு வ்யாப்தியைக் கொள்ளலாம்.

(பூ) ஜ்ஞானமானது மற்றொரு ஜ்ஞானத்திற்கு விஷய (இலக்கு) மாகின்றதாகையால் குடம் முதலியவைகள் போல் அதுவும் ஜ்ஞானத்தன்மை இல்லாதாகவேண்டும் என்பதாக கேவலவ்யதிரேகி ஹேதுவிற்கு ஸாத்யமில்லாவிடில் பாதகம் இருக்கின்றது. அஸாதாரணத்திற்கு ஸாத்தியமில்லாவிடில் பாதகமொன்றுமில்லை இதுவே இரண்டிற்கும் உள்ள விசேஷம் எனில்

(ஸி) குடமானது, தானாகவே பிரகாசிக்கின்றது என்பதாக முன்கூறிய விருத்தாநுமான ஸ்தலத்திலும் ஸாத்யமில்லாவிடில் பாதகம் சொல்லக்கூடும். அதாவது—குடமானது, ஜ்ஞானத்திற்கு விஷய (இலக்கு) மாகின்றதாகில் குடத்தன்மை இல்லாததாகக் காண்கிறோம். அதுபோலவே இங்கும் என்பதாக அந்த பாதகயுக்தியைச் சொல்லவாம்.

மேலும் ப்ருதிவியானது, கந்தமுடையதாகையால், நித்யமானது, என்கிற அஸாதாரண ஹேதுவின் உதாஹரண ஸ்தலத்தில் நித்யத்தன்மை என்கிற ஸாத்யமானது காலம் முதலிய சிலவற்றில் ப்ரஸித்தமாயிருக்கிறது. ஆகவே நித்யத்வமாகிய ஸாத்யத்தின் அபாவத்தோடு கந்தமாகிய ஹேதுவின் அபாவத்திற்கு வ்யதிரேகவ்யாப்தி இருப்பதை அறிய முடியும். ஜ்ஞானமானது மற்றொரு ஜ்ஞானத்திற்கு விஷயமாகாதது' என்பதாக உள்ள கேவலவ்யதிரேகி ஸ்தலத்திலோவெனில் மற்றொரு ஜ்ஞானத்திற்கு விஷயமாகாமை என்கிற ஸாத்யமானது ஒரு இடத்திலும் பிரஸித்தமன்று. ப்ரதியோகியாகிய ஸாத்யத்தை ஒரு இடத்திலும் அறிய முடியாமையால் அதை ப்ரதியோகியாகக்கொண்டு அதின் அபாவத்திற்கு ஏற்பட்டுள்ள வ்யதிரேகவ்யாப்தியை அறியவே முடியாது.

(பூ) ஆகிலும் ஜ்ஞானவிஷயமாகாமை என்கிறஸாத்யத்தின் அபாவமானது ஜ்ஞான விஷயமாகை அன்றி வேறு அன்று. ஆகவே ஜ்ஞான விஷயமாகை என்கிற ஸாத்யபாவத்தை ஸுகமாக அறியலாமே எனில் அதுவும் தவறு. அப்படி அறிந்தாலும் எது ஜ்ஞானவிஷயமாகின்றதோ அது ஜ்ஞானமன்று என்பதாக ஸாத்யத்தின் அபாவத்தோடு ஹேதுவின் அபாவத்திற்கு வ்யாப்தியை அறியும் பொழுதே ப்ரதியோகியாகிய ஜ்ஞானமானது அறியப்படுவதைக்காண்கிறோம். ஆகவே ஜ்ஞானமானது ஜ்ஞானத்திற்கு விஷயமன்று என்பது விருத்தமானது.

மேலும் ஜ்ஞானமானது, தானாகவே பிரகாசிக்கின்றது, என்பதாக பாவரூபமான ஸாத்யத்தை உடைய கேவலவ்யதிரேக அநுமானங்களில் தானாக பிரகாசிக்கை என்கிற ஸாத்யமானது பக்ஷமாகிய ஜ்ஞானத்திலே முன்பே நிச்சிதமாகில் இவ்வநுமானம் வீணாகும். ஸாத்யத்தைப்பற்றிய ஸந்தேஹமானது பக்ஷத்திலே இருந்தாலன்றோ அதை நிவ்ருத்தி செய்வதற்காக அநுமானம் வேண்டுவது? பக்ஷந்தவிர்த்து மற்ற விடத்தில் ஸாத்ய நிச்சயமுண்டாகில் அந்த இடமே ஸபக்ஷமாகிறது. ஸபக்ஷம் இருப்பதால் இந்த ஹேதுவானது கேவலவ்யதிரேகியாக மாட்டாது. ஸபக்ஷமில்லாதன்றோ கேவலவ்யதிரேகி? பக்ஷம், பக்ஷமல்லாதது, இவ்விரண்டைக்காட்டில் வேறுபட்டதொன்று கிடையாது. அப்படி ஒன்றுஇருப்பதாகச் சொல்வது விருத்தமானது. (ஸா) பாவமா அபா (ஸா) வமா என்பதாக விகல்பம் செய்யும் பொழுது இவ்விரண்டிலும் சேராத மூன்றாவதொரு வஸ்து இருக்க முடியாதே. பா (ஸா) வமன்று என்றால் அபா (ஸா) வம் என்றதாகிறது. அபா (ஸா) அன்று என்றால் பா (ஸா) வம் என்றதாகிறது. பா(ஸா) வமும் அன்று. அபா(ஸா) வமும் அன்று என்பதாக மூன்றாவது ப்ரகாரம் கிடையாது என்பதாக ந்யாய குஸுமாஞ்ஜலியில் உதயனாசார்யர் சொல்லியுள்ள ந்யாயத்தின்படி மூன்றாவது கிடையாது. ஆகவே பக்ஷத்திலோ பக்ஷமல்லாத இடத்திலோ ஸாத்யம் ப்ரஸித்தம் எனவேண்டும். அப்பொழுது முன்கூறிய தோஷங்கள் ஏற்படுகின்றன என்றபடி.

இவ்வாறு பா(ஸா) வரூபமான ஸாத்யத்தையுடைய கேவலவ்யதிரேகி ஹேதுவிற்குச்சொல்லிய தூஷணமானது அபா(ஸா)வரூப

மான ஸாத்யத்தையுடைய கேவலவ்யதிரேகிஸ்தலத்திலும் துல்யமானது. ஞானமானது மற்றொரு ஞானத்திற்கு விஷயமன்று, என்பதாக அபா (ஹா) வத்தை ஸாத்யமாக உடைய கேவலவ்யதிரேகிஸ்த்தலத்திலும் ஸாத்யத்திலுடைய அபாவமானது பா (ஹா) வரூபமேயாகிலும் வ்யதிரேகவ்யாப்தியானது அந்தபாவரூபமான ஞானவிஷயமாகை என்கிற தர்மத்திற்கு அன்று. ஜ்ஞான விஷயமாகாமை என்கிறஸாத்யத்தின் அபாவத்திற்கே ஹேதுவின் அபாவத்தோடு வ்யதிரேகவ்யாப்தியைக் கொள்ள வேண்டும். ஸாத்யத்திலுடைய அபா (ஹா) வம் என்கிற ஆகாரத்தினால் அறியும்பொழுது ப்ரதியோகியாகிய ஸாத்யத்தை (ஜ்ஞானவிஷயமாகாமை)யும் அறிய வேண்டும். அந்தஸாத்தியமானது பக்ஷத்திலே ப்ரஸித்தமாகில் அநுமானம் வ்யர்த்தமாகும். பக்ஷமல்லாத இடத்தில் அது ப்ரஸித்தமாகில் கேவலவ்யரேகி ஹேதுவாகமாட்டாது என்பதாக முன்கூறிய தூஷணம் அபாவரூபமான ஸாத்யமுள்ள இடத்திலும் துல்யமானது. அப்படி அபா (ஹா) வங்களுக்கு வ்யாப்தியைக் கொள்ளாத பக்ஷத்தில் ஸாத்யத்தின் அபாவத்திற்கும் ஹேதுவின் அபா (ஹா)வத்திற்கும் வ்யதிரேகவ்யாப்தி என்றதாகமாட்டாது. பாவரூபமான ஸாத்யாபாவத்திற்கும் வ்யாப்தி உண்டேயாகிலும் அந்த பா (ஹா) வவஸ்துவை ஸாத்யத்திலுடைய அபா (ஹா)வம் என்பதாகக் காட்டியே வ்யதிரேகவ்யாப்தி ஏற்பட வேண்டும். அப்படி ஸாத்யத்தின் அபாவம் என்பதாகக் காட்டாவிடில் வ்யதிரேகவ்யாப்தி மூலகமான வ்யதிரேக பாரமர்சம் இல்லாமையால் கேவலவ்யதிரேகி அநுமானமாகியப்ரக்ருதஸ்த்தலத்தில் யாதொரு உபகாரமும் ஏற்படாது.

(பூ) கேவலவ்யதிரேகிஸ்த்தலத்தில் ஸாத்யமானது பக்ஷத்திலோ பக்ஷமல்லாததொரு இடத்திலோ ப்ரஸித்தம் என்பதாகக் கொண்டால் முன்கூறிய தூஷணம் ஏற்பட்டாலும் பக்ஷம், பக்ஷமல்லாதது என்று விசேஷித்துக்கொள்ளாமல் பொதுவாக ஏதேனுமொரு இடத்தில் ஸாத்யமானது ப்ரஸித்தமானது என்னலாம். பொதுவாக ஏற்பட்டுள்ள ப்ரஸித்தியினால் முன்கூறிய தூஷணம் ஏற்படாது. அப்படி ப்ரஸித்தமான ஸாத்யமானது பக்ஷத்திலே இருப்பதாக விசேஷித்து வ்யவஸ்த்தை செய்கிறது கேவலவ்யதிரேகிஹேது, என்று கொள்ளலாமே.

(ஸி) என்க்கூடாது. பொதுவாக ஸாத்யமானது ஒரு இடத்திலிருப்பதாகக் காட்டும்ப்ரமாண மொன்றுமில்லையே.

(பூ) ஜ்ஞானத்திற்கு விஷயமாகை என்கிற தர்மமானது, ஏதேனும் ஒரு வஸ்துவில் இல்லாதது. ஏனெனில், ஞானவிஷயமாகை என்பதும் ஒரு தர்மமாகையால், எது தர்மமாகின்றதோ அது ஏதேனுமொன்றில் இல்லாதது. குடத்தின் தன்மையாகிய க(வ)ட்த்வம் என்பது உதாரணம், க(வ)ட்த்வமானது படம் முதலியதில் இல்லையன்றோ, என்றிவ்வாறான அனுமானத்தினால் ஏதேனுமொன்றில் ஜ்ஞான விஷயத்வாபாவமாகியஸாத்யமானது பொதுவாக ஸித்திக்கலாமே எனில்

(ஸி) இது தவறு. ஜ்ஞானவிஷயமாகை என்பது, ஏதேனுமொன்றில் இல்லாதது என்கிற வார்த்தையானது விருத்தமானது. எப்படி எனில் ஏதேனுமொன்று என்பதாக எந்த ஒரு வஸ்துவைக் குறிக்கின்றாயோ இந்த வஸ்துவானது ஜ்ஞானத்திற்கு விஷயம் என்றால் "ஏதேனுமொன்றில் ஜஞான விஷயத்வம் இல்லை என்பது கூடாது. ஜ்ஞான விஷயமாகாமைக்கு ஏதேனுமொன்று என்பது ஆச்ரயமாகமாட்டாதே. அதற்காக அந்த ஏதேனுமொன்று என்கிற வஸ்துவானது ஜ்ஞானவிஷயமன்று என்பதாகக்கொண்டால் அந்த வஸ்துவை ஏதேனுமொன்று என்கிற சப்தத்தினால் சொல்லிக்காட்டுவது வீணாகும். பிறருக்கு ஏதேனுமொன்றாகிய அந்த வஸ்துவைப்பற்றிய ஜ்ஞானம் உண்டாவதற்காகவன்றோ ஒரு சப்தத்தினால் அதைக் காட்டவேண்டும். அந்த வஸ்துவானது ஜ்ஞானவிஷயமே அன்றாகில் ஜ்ஞானம் ஏற்படுவதற்காக அதை நிர்தேசம் செய்வது வீணேயன்றோ!

மேலும் ஜ்ஞானவிஷய(த்வம்)மாகை என்கிற தர்மமானது, ஏதேனுமொன்றில் இல்லாதது, என்பதாகப் பொதுவாக ஸாதிக்கும் இவ்வனுமானத்தில் வ்யபிசாரம் என்கிற தூஷணமும் ஏற்படுகிறது.

எப்படி எனில் ஒவ்வொரு வஸ்துவிலும் சிற்சில தர்மங்கள் இருக்கின்றனவே அன்றி எல்லாவற்றிலும் எல்லா தர்மங்களும் இல்லை என்பது ஸுப்ரஸித்தமானது. ஆகவே ஏதேனுமொரு

தர்மத்தின் அபா(ஹா)வம் என்கிற தர்மமானது எல்லா வஸ்துக்க ளிலும் இருக்கின்றது. ஏதேனுமொன்றில் இல்லாமை என்கிற ஸாத்யமானது அதில் இல்லை. தர்மத்வம் (தர்மமாகை) என்கிற ஹேதுவானது அதில் இருக்கின்றது. ஆகவே ஏதேனுமொரு தர் மத்தின் அபாவமாகிய தர்மத்தில் வ்யபிசாரம் என்கிற தோஷம் முன்கூறிய அநுமானத்திற்கு ஏற்படுகிறது.

(பூ) ஆனல் "ஏதேனுமொரு தர்மத்தின் அபாவமானது" எங்கும் இருப்பதாகக் கொள்ளவேண்டாவே. ஏதேனுமொன் றில் இல்லாமை என்கிற ஸாத்யமானது இந்த தர்மத்திலும் இருக் கின்றது. ஆகையால் ஸாத்யமில்லாத இடத்தில் ஹேது இருப்ப தாகிய வ்யபிசாரம் இல்லையே எனில்

(ஸி) இப்படியாகில் மறுபடியும் விரோதமே ஏற்படுகின் றது. ஏதேனுமொரு தர்மத்தின் அபாவமானது எங்கும் இருப் பதாகக் கொள்ளாவிடில் எல்லா தர்மங்களும் ஒரு வஸ்துவில் இருப்பதாகக் கொள்ளவேண்டுமே, அந்த வஸ்துவில் அவ்வோ பா(ஹா)வரூப தர்மங்களும் அவற்றின் அபா(ஹா)வங்களுமாகிய தர்மங்களும் சேர்ந்திருக்கவேண்டும். பா(ஹா)வம் அபா(ஹா) வம் இவை ஒன்றில் சேர்ந்திராவே!

மேலும் ஏதேனுமொரு தர்மத்தின் அபா(ஹா)வம் என்பது நீ காட்டியுள்ள வ்யதிரேகி அநுமானத்தில் பக்ஷமாகிய ஜ்ஞானத் திலும் இல்லையாகில், ஜ்ஞானவிஷயமாகை என்பது ஏதேனு மொன்றில் இல்லாதது என்பதாக ஸாதிப்பது விருத்தமாகும். ஜ்ஞானத்தையன்றே ஏதேனுமொன்று என்பதாக பொதுவாகக் காட்டுகிறாய். அந்த ஜ்ஞானத்தில் ஏதேனுமொரு தர்மத்தின் அபாவமானது இல்லையாகில் எல்லா தர்மமும் இருக்கிறதாகவன் றே ஸித்திக்கின்றது. ஜ்ஞானவிஷயமாகை என்கிற தர்மமும் இருப்பதாக ஏற்படுவதால் அதை இல்லை என்று ஸாதிப்பது விருத் தமேயாகும். ஜ்ஞானவிஷயமாகை என்கிற தர்மத்தின் அபாவ மும் இல்லை என்றதனால் ஜ்ஞான விஷயமாகை என்பது ஜ்ஞா னத்தில் இருப்பதாகவே மறுபடியும் ஏற்படுகிறது. எந்த வஸ்து வின் அபா(ஹா)வமானது எங்கு இல்லையோ அந்த வஸ்துவானது அங்கு அவச்யம் இருக்கவேண்டும். வஹ்னியின் அபாவம் இல்லை

யாகில் வஹ்னி இருக்கிறது என்றுதேருகிறது. ஏதேனும் ஒரு தர்மத்தின் அபாவம், என்பது ஜ்ஞானஸ்வரூபமே யல்லது ஜ்ஞானத்தின் தர்மமன்று. ஆகவேமுன்கூறிய வ்யபிசாரதோஷமில்லை என்பதுகூடாது. ஆச்ரயம்வேறு, தர்மம்வேறு. ஆகவேதர்மம் ஆச்ரயமாக மாட்டாது அன்றோ.

இவ்வாறாகவே 'ஏதேனும் ஒருசப்தத்திற்குப்பொருளாகை' என்கிறதர்மத்தோடு வ்யபிசாரம் சொல்லலாம். இந்ததர்மமானது எல்லாவற்றிற்குமுண்டு. ஆகவே ஏதேனும் ஒருவஸ்துவில் இல்லாமை என்கிறஸாத்யம் இதில் இல்லை. தர்மமாகை என்கிற ஹேதுவானது இருக்கிறது. இப்படிவ்யபிசாரம் ஏற்படுகிறது "ஏதேனும் ஒருசப்தத்திற்குப் பொருளாகை" என்கிறதர்மமானது ஒருவஸ்துவில் இல்லையாகில் அவ்வஸ்து துச்சமேயாகும். 'ஒருவஸ்து' என்கிறசப்தத்தால் சொல்லப்படுமதை ஒருசப்தத்திற்கும் பொருளன்று என்பதாக எப்படிச் சொல்வாம்?

இவ்வாறாகவே இச்சைமுதலியவை, ப்ருதிவீ, அப்பு, தேஜஸ்ஸு, வாயு, ஆகாசம், காலம், திக்கு, மனஸ்ஸு, ஆகியஎட்டுத்ரவ்யங்களில் வேறுபட்டதொரு த்ரவ்யத்திலுள்ளவை, ஏனெனில் முன்கூறிய எட்டுத்ரவ்யங்களில் இல்லாத குணங்களவை யாகையால், என்பதாக நையாயிகர் சொல்லும் கேவலவ்யதிரேகி அநுமானத்தில் எட்டுத்ரவ்யத்தைக்காட்டில் வேறுபட்டதொருத்ரவ்யமானது ப்ரஸித்தமாகில் கேவலவ்யதிரேகி அநுமானம் வ்யர்த்தமாகும் அந்வயவ்யாப்தியே கூடுமன்றோ. அப்படி வேறுபட்டதொருத்ரவ்யம் அப்ரஸித்தமாகில் ஸாத்ய ப்ரஸித்தமன்று என்கிற அதுவே தோஷமாகும்.

(பூ) இச்சை முதலியவை, குணங்களாகையால், த்ரவ்யத்தில் உள்ளவை, என்பதாக முதலில் அநுமானம் ஏற்படுகிறது. பிறகு அந்தத்ரவ்யமானது ப்ருதிவீ முதலிய முன்கூறிய எட்டுத்ரவ்யங்களில்வேறுபட்டதா சேர்ந்ததா என்பதாக வாதிகளின் பரஸ்பரவிருத்தவாக்யத்தினால் ஸந்தேஹம் ஏற்படுகிறது. அவைப்ருதிவீ முதலிய எட்டுத்ரவ்யங்களில் உள்ளவையாகில் இச்சை முதலியவை ப்ருதிவீ முதலியவற்றில் ஜ்ஞாதங்களாக வேண்டுமே என்பதாக ப்ருதிவீ முதலியவற்றை ஆச்ரயித்தவை என்கிற கோடியில் அநிஷ்டத்தை ஆபாதனம்செய்வதன்மூலம் அவற்றில் வேறுபட்ட

ப்ரமாணத்திற்கு விஷயமாக வேண்டியதே என்பதாகப் பொது வாக நிச்சயம் ஏற்பட்ட பிறகு அந்த ப்ரமாணம் எது? என்கிற விசேஷாகாங்க்ஷையை கேவலவ்யதிரேகியானது பூரணம் செய் கிறது. இவ்விதமாக கேவலவ்யதிரேகிக்குப் ப்ரயோஜனமுண்டு எனில் (ஸி) இதுவும் கூடாது "ஒன்பதாவதுத் ரவ்யத்தை ஆச்ரயித் திருக்கை" என்பது ப்ராமாணிகமானதா இல்லையா என்பது ஸந்தேஹத்திலிருக்கும் போது இதை எப்படி பக்ஷமாகக் கொள் ளலாம். ஆகவே, ஒன்பதாவது த்ரவ்யத்தை ஆச்ரயித்திருக்கை யும், தானில்லாவிடில் த்ருஷ்டத்தை விளைவிக்கிறது என்கிற உப நய வாக்யமானது ப்ரஸித்தமல்லாத தொன்றில் ஹேது இருப்ப தாகக் காட்டுகிறதாகிறது. இது உசிதமன்று.

முன்கூறிய அநுமானத்தினுல் "ஒன்பதாவது த்ரவ்யத்தை ஆச்ரயித்திருக்கை" என்பது ஸித்திக்கிறது எனில் அந்யோந்யாச் ரயம் என்கிற தோஷம் ஏற்படுகிறது. இவ்வநுமானத்தினுல் அது ஸித்திக்கிறது, அது ஸித்தித்த பிறகு முன்கூறிய இவ்வனுமானம் ஏற்படுகிறது இப்படி அந்த அந்யோந்யாச்ரயமாகும்.

மேலும் வஸ்துவானது ப்ரமாணிகம் என்பதற்காகவன்றோ ப்ரமாணம் தேடவேண்டும். முன்கூறிய ப்ராமாணிகதையை ஸா திக்கும் அனுமானத்தினுல் ஒன்பதாவது த்ரவ்யத்தை ஆச்ரயித் திருப்பது ப்ராமாணிகம் என்று ஸித்தித்து விட்டதால் அதைப் பற்றி மேலும் கேவலவ்யதிரேகி அனுமானம் ப்ரயோஜன மற்ற தேயாகும்.

(பூ) எது குணமோ அது த்ரவ்யத்தை ஆச்ரயித்திருக்கும் என்பதாக பொதுவான அனுமானததினுல் இச்சை முதலியவை த்ரவ்யத்தை ஆச்ரயித்தவை என்பதாக ஸித்திக்கிறது அவ்வனு மானத்தில் குணமெல்லாம் த்ரவ்யத்தை ஆச்ரயித்தது என்கிற அந்வயவ்யாப்தியையும். த்ரவ்யத்தை ஆச்ரயியாதது குண மன்று என்கிற வ்யதிரேக வ்யாப்தியையும் நிரூபிக்குமிடத்தில் எட்டு த்ரவ்யங்களை ஆச்ரயித்திருப்பதில் முன்கூறிய அனுபபத்தியின் உதவியினுல் முன்கூறிய குணத்வம் (குணமாகை) என்கிற ஹேது வினுலேயே எட்டில் வேறுபட்ட தொண்றை ஆச்ரயித்தவை என் பது ஸித்திக்கிறது என்பதாக யாதொரு வாதமுண்டோ (ஸி) அதுவும் உசிதமன்று. எட்டு த்ரவ்யங்களில் வேறுபட்டதொன்று

ப்ரமாணத்திற்கு விஷயமாக வேண்டியதே என்பதாகப் பொது வாக நிச்சயம் ஏற்பட்ட பிறகு அந்த ப்ரமாணம் எது? என்கிற விசேஷாகாங்க்ஷையை கேவலவ்யதிரேகியானது பூரணம் செய் கிறது. இவ்விதமாக கேவலவ்யதிரேகிக்குப் ப்ரயோஜனமுண்டு எனில் (ஸி) இதுவும் கூடாது "ஒன்பதாவதுத் ரவ்யத்தை ஆச்ரயித் திருக்கை" என்பது ப்ராமாணிகமானதா இல்லையா என்பது ஸந்தேஹத்திலிருக்கும் போது இதை எப்படி பக்ஷமாகக் கொள் ளலாம். ஆகவே, ஒன்பதாவது த்ரவ்யத்தை ஆச்ரயித்திருக்கை யும், தானில்லாவிடில் அநிஷ்டத்தை விளைவிக்கிறது என்கிற உப நய வாக்யமானது ப்ரஸித்தமல்லாத தொன்றில் ஹேது இருப்ப தாகக் காட்டுகிறதாகிறது. இது உசிதமன்று.

முன்கூறிய அநுமானத்தினால் "ஒன்பதாவது த்ரவ்யத்தை ஆச்ரயித்திருக்கை" என்பது ஸித்திக்கிறது எனில் அந்யோந்யாச் ரயம் என்கிற தோஷம் ஏற்படுகிறது. இவ்வநுமானத்தினால் அது ஸித்திக்கிறது, அது ஸித்தித்த பிறகு முன்கூறிய இவ்வனுமானம் ஏற்படுகிறது இப்படி அந்த அந்யோந்யாச்ரயமாகும்.

மேலும் வஸ்துவானது ப்ரமாணிகம் என்பதற்காகவன்றோ ப்ரமாணம் தேடவேண்டும். முன்கூறிய ப்ராமாணிகதையை ஸா திக்கும் அநுமானத்தினால் ஒன்பதாவது த்ரவ்யத்தை ஆச்ரயித் திருப்பது ப்ராமாணிகம் என்று ஸித்தித்து விட்டதால் அதைப் பற்றி மேலும் கேவலவ்யதிரேகி அநுமானம் ப்ரயோஜன மற்ற தேயாகும்.

(பூ) எது குணமோ அது த்ரவ்யத்தை ஆச்ரயித்திருக்கும் என்பதாக பொதுவான அநுமானததினால் இச்சை முதலியவை த்ரவ்யத்தை ஆச்ரயித்தவை என்பதாக ஸித்திக்கிறது அவ்வநு மானத்தில் குணமெல்லாம் த்ரவ்யத்தை ஆச்ரயித்தது என்கிற அந்வயவ்யாப்தியையும். த்ரவ்யத்தை ஆச்ரயியாதது குண மன்று என்கிற வ்யதிரேக வ்யாப்தியையும் நிரூபிக்குமிடத்தில் எட்டு த்ரவ்யங்களை ஆச்ரயித்திருப்பதில் முன்கூறிய அநுபபத்தியின் உதவியினால் முன்கூறிய குணத்வம் (குணமாகை) என்கிற ஹேது வினாலேயே எட்டில் வேறுபட்டதொன்றை ஆச்ரயித்தவை என் பது ஸித்திக்கிறது என்பதாக யாதொரு வாதமுண்டோ (ஸி) அதுவும் உசிதமன்று. எட்டு த்ரவ்யங்களில் வேறுபட்டதொன்று

இருப்பதாக விசேஷித்து எங்கும் ஸித்திக்க வில்லையே. விசேஷித்து ஸித்திக்கா விட்டாலும் இச்சை முதலியவை ப்ருதிவீ முதலியவற்றில் இல்லாதவையாகையால் அவற்றைக் காட்டில் வேறுபட்ட தொன்றை ஆச்ரயித்தவை என்பதாகப் பொதுவாக ஸாதிப்பதாகில் அன்வயவ்யாப்தியையும் சொல்லலாம். எப்படி எனில் - எந்த வஸ்துவானது எந்த த்ரவ்யங்களை ஆச்ரயிக்காமல் இருக்கச்செய்தே த்ரவ்யம் ஒன்றை ஆச்ரயித்திருகிறதோ அந்த வஸ்துவானது அந்த த்ரவ்யங்களில் வேறுபட்ட தொன்றை ஆச்ரயித்ததாகும். உதாஹரணம் கந்தம் முதலியது. ஜலம் முதலியதை ஆச்ரயியாமல் த்ரவ்யத்தை ஆச்ரயித்திருக்கிறது இது. ஜலம் முதலியதில் வேறுபட்டப்ருதிவியைச் சேர்ந்தது, இச்சை முதலியவைகளும் அப்படியே. என்பதாக அந்வயவ்யாப்தியும் கொள்ளலாம். ஆகவே கேவலவ்யதிரேகியாக மாட்டாது இது....

(பூ) இவ்வாறு முதலில் அந்வயவ்யாப்தி மூலமான, அநுமானம் ஏற்படலாம். பிறகு கேவலவ்யதிரேகி அநுமானமும் ஜீவிக்கலாமே என்பது (ஸி) கூடாது. ஸந்தேஹமிருந்தால் அன்றோ அநுமானம் ஏற்படும். இங்கு நிச்சயம் ஏற்பட்டு விட்டபடியால் பிறகு அநுமானம் கூடாது.

(பூ) இச்சை முதலியவற்றிற்கு ஆச்ரயம் ஒன்று பொதுவாக ஏற்பட்டிருக்கிறது. அதை பக்ஷமாகக் கொண்டு இது எட்டு த்ரவ்யங்களில் வேறு பட்டது, இச்சை முதலியவற்றிற்கு ஆச்ரயமாகையால், என்பதாக ஸாதிக்கலாமே எனில், (ஸி) அப்பொழுது எட்டு த்ரவ்யங்களில் வேறு பட்டிருக்கை என்கிற ஸாத்யமானது குணம் முதலியவற்றில் ப்ரஸித்தமானது. ஆகவே குணம் முதலிய ஸாத்ய நிச்சயஸ்தலம் இருப்பதால் இந்த ஹேதுவானது அஸாதாரணன் என்கிற துஷ்ட ஹேதுவாகிறது இதை நீயே இசைந்ததாகிறது.

(பூ) ஆகிலும் ஸாத்ய நிச்சயமுள்ள குணம் முதலியதில் ஹேதுவானது இல்லாவிடிலன்றோ அஸாதாரண தோஷம். குணம் முதலியதில் உள்ள தொன்றை ஹேதுவாகக் கொண்டால் அந்த தோஷம் இல்லையே எனில். (ஸி) இப்பொழுது இந்த அநுமானம் அந்வயி அநுமானமே ஆகும். ஹேது உள்ள இடத்தில் ஸாத்யம் இருப்பதாக வ்யாப்தி கொள்ளலாம் அன்றோ.

இச்சை முதலியதற்கு ஆச்ரயமாக பொதுவாக ஏற்பட்டுள்ளத்ரவ்யத்தையும் குணம் முதலியவற்றையும் பக்ஷமாகச் செய்து எட்டு த்ரவ்யங்களில் வேறு பட்டிருப்பதை அதில் ஸாதிப்பதாகில் பக்ஷத்தின் ஏகதேசமான குணம் முதலியது எட்டு த்ரவ்யத்தில் வேறுபட்டது என்பது முன்பே ஸித்தமாகையால் ஸித்தஸாதனம் (நிச்சிதமானதை மறுபடி ஸாதிப்பது) என்கிற தோஷம் ஏற்படும். எட்டு த்ரவ்யங்களில் வேறுபட்ட த்ரவ்யம் என்பதாக ஸாதிப்பதாகில் இப்பொழுது குணம் முதலியது த்ரவ்ய மன்றாகையால் ஸாத்ய நிச்சயமில்லையே யாகிலும் இந்த ஸாத்யமானது ஒரு இடத்திலும் ப்ரஸித்தமன்றே என்பதாக மறுபடி முன்கூறிய தோஷம் ஏற்படுகிறது.

(பூ) இச்சை முதலியவற்றிற்கு, உத்பத்தி உண்டாகையால், ஸமவாயிகாரணம் ஒன்று இருக்கவேண்டும் என்பதாகப் பொதுவாக ஸித்திக்கிறது பிறகு சரீரமானது, இச்சைக்கு ஸமவாயிகாரணத்தோடு ஸம்பந்தம் பெற்றது. ப்ராணன் முதலியதோடு கூடியிருப்பதால், எது இச்சைக்கு ஸமவாயிகாரணத்தோடு கூடியதன்றோ அது ப்ராணன் முதலியதோடு கூடியதன்று என்பதாக கேவலவ்யதிரேகி ஏற்படலாம் முன் கூறிய எல்லா தோஷங்களுக்கும் பரிஹாரம் இங்கு இருக்கின்றதே எனில்,

(ஸி) அதுவும் தவறு. அந்த ஸமவாயிகாரணத்தோடு பொதுவாக ஏதேனுமொரு ஸம்பந்தம் பெற்றது என்பதாக ஸாதிப்பதாகில் இது கேவலவ்யதிரேகியாகாது. ஏனெனில், குடம் முதலியது அப்படி ஸம்பந்தம்பெற்றதுதானே. ஆகவே ஸாத்யமானது குடம் முதலியதில் நிச்சயம்பெற்றிருக்கிறதே. ஆகவே ஸபக்ஷம் (ஸாத்யநிச்சயஸ்தலம்) இருப்பதால் இது கேவலவ்யதிரேகி யன்று அதற்கு சரீரமாயிருக்கை, அதீனமாயிருக்கை, முதலிய ஸம்பந்தத்தை விசேஷித்து ஸாதிப்பதாகில் ஸாத்யம் ப்ரஸித்தமன்று என்ற தூஷணம் ஏற்படுகிறது. பொதுவாகவோ, விசேஷித்தோ, அந்த ஸம்பந்தத்தைக் கொள்ளாமல் ஸாதிப்பதாகில் குடமானது, இச்சையின் ஸமவாயிகாரணத்தோடு ஸம்பந்தம் பெற்றது, குடமாகையால் எது அப்படி ஸம்பந்தம் பெறவில்லையோ அது குடமன்று என்றும் அநுமானம் செய்யலாமே. ஸம்பந்த விசேஷமானது ப்ரமாணாந்தரத்

தினால் ஏற்படுவதாகில் இந்த அநுமானம் வ்யர்த்தமாகும். ஸம்பந்த விசேஷம் ஸித்திப்பதற்காகவன்றோ இவ்வநுமானம். அந்த ஸம்பந்த விசேஷந்தான் வேறு விதத்தினால் ஸித்திக்கிறது என்கிறோமே.

(பூ) அக்னி முதலியவற்றோடு ஸம்பந்தத்தை ஸாதிக்குமிடத்திலும் அந்த ஸம்பந்தம் பொதுவாக ஏதேனுமொன்று அல்லது ஸம்யோகமா என்பதாக விகல்பம் கூடலாமே,

(ஸி) என்பதற்கில்லை, ஏனெனில், அக்னி ஸம்பந்தம் என்பது ஓரிடத்தில் ஸித்தித்து இருக்கிறது. ஹேதுவானது பக்ஷமான பர்வதத்திலிருப்பதால் அத்தவஹ்னி ஸம்பந்தமும் பர்வதத்தில் (பக்ஷத்தில்) இருக்கிறது என்பதாக விசேஷம் ஸித்திக்கிறது. ப்ரக்ருதத்தில் இச்சையின் ஸமவாயிகாரணத்தோடு ஸம்பந்த விசேஷமாகிய ஸாத்யமானது எங்கும் நிச்சிதமன்று. ஆகவே அது பக்ஷமாகிய சரீரத்தில் இருப்பதாகஸாதிக்க முடியாது என்பதாக கேவலவ்யதிரேகி தூஷணம் கொள்ளவும்.

(பூ) ப்ருதிவி முதலிய எல்லா கார்ய வஸ்து ஸர்வஜ்ஞனை ஒரு கர்த்தாவினால் உண்டு பண்ணப் பட்டது. ஏனெனில் சில காலத்தில் இராமல் சில காலத்திலேயே அது இருப்பதால் அவ்வாறாகவே வேதங்கள், ஸர்வஜ்ஞனை ஒருவனால் செய்யப் பட்டவை வேதங்களானகையால். என்பதாக கேவலவ்யதிரேகி உதாஹரணம் இருகின்றதே. (ஸி) அதிலும் இவ்வாறாக தோஷம் உண்டு, அப்படி எனில். ஸர்வஜ்ஞனை கர்த்தாவினால் உண்டானவை முதலிய ஸாத்யமானது ஒரு இடத்திலும் நிச்சிதமன்று- ஆகவே அந்த ஸாத்யத்தின் அபாவத்திற்கு ஹேதுவின் அபாவத்தோடு வ்யாப்தியை (நியத சம்பந்தம்) அறிய முடியாது. இந்த ஸாத்யத்தில் சேர்ந்துள்ள அர்த்தங்களை தனித்தனியே போதிக்கும் பதங்கள் ஒன்று சேர்ந்திருப்பது மாத்திரத்தைக் கொண்டே ஸாத்யமானது ப்ரஸித்தமெனலாப். (அதாவது. எல்லாவற்றையும், என்றும், அறிந்த, என்றும் கர்த்தா என்றும்அர்த்தங்கள் ப்ரஸித்தங்களே, ஆகையால்ஸாத்யம் ப்ரஸித்தமென்றபடி) என்று எண்ணுவாயாகில் அப்பொழுது முயல் கொம்பு முதலியவற்றைப் போல் இங்கு ஸாத்யமானது ப்ராந்தி மாத்திரத்தினால் ஸித்திக்கிறது- இந்த ஸாத்யத்தில் தனித்தனியே உள்ள அர்த்தங்களுக்கு

பரஸ்பரம் ஸம்பந்தம் கிடையாது. அப்படி ஸம்பந்தமிராத அர்த்தங்களை போதிக்கும் பதங்கள் சேர்ந்திருப்பது மாத்திரத்தினாலேயே ஸாத்யம் ஸித்தித்துவிட்டதாக ப்ராப்தி என்றதாகிறது.

(பூ) முயல் கொம்பு முதலியவற்றில்போல் இங்குயாதொரு பாதகமும் இல்லையாகையால் இங்கு ஸாத்யத்தில் சேர்ந்த அர்த்தங்களுக்கு பரஸ்பரம் அஸம்பந்தம் ஒன்றுமில்லை என்று அபிப்ராயமாகில் (ஸி) அதுவும் ஸாரமற்றது. ஸர்வஜ்ஞன் ஒருவன் கர்த்தாவாக இருப்பததற்கு விசேஷித்து பாதகம் இல்லையேயாகிலும் ஸர்வத்தையும் விஷயீகாரம் செய்யும் ஞானத்தை ஒருவருக்கும் கண்டதில்லையாகையால் அப்படிபட்ட ஸர்வவிஷயகமான ஜ்ஞானத்தை இசைவதற்கு விரோதமானது பொதுவாகஉண்டு. ஸர்வஜ்ஞன் ஒருவன் கர்த்தாஎன்பதற்கு ஸாதகம் ஒன்றுமிராத போது பொதுவாக ஸித்தித்துள்ள இவ்விரோதமே பாதகமானது என்பதாகக் கொள்ளலாம். ஸர்வஜ்ஞன ஒருகர்த்தாவை இந்த கேவலவ்யதிரேகி அநுமானமேஸாதிப்பதாகில் அந்யோந்யாச்ரயம் என்கிற தோஷமுண்டு. இவ்வநுமானத்தினால் ஸர்வஜ்ஞனை கர்த்தாவனவன் ஸித்திப்பதாகில் ஸர்வஜ்ஞனை கர்த்தாவை போதிக்கும் வாக்யமானது யோக்யமாகிறது, அந்தவாக்யம் யோக்யமாகில் இவ்வநுமானம் ஏற்படுகிறது, இப்படிஅந்த அந்யோந்யாச்ரய தோஷம். ஸர்வஜ்ஞனை கர்த்தாவை போதிக்கும் அந்தபதங்களை (ஆகமவாக்யங்கள்) ச்ருதிஸ்ம்ருதிவாக்யங்களாக நீயும் இசையவில்லையே. ஆப்தரால் சொல்லப்படாததும் நித்யமும் அல்லாதது மானவை ஆகமங்களாகவும் மாட்டாவே.

ஸர்வஜ்ஞன் ஒருவனை லௌகிக வாக்யமானது முன்கூறியபடி ஸாதிக்கமுடியாதேயாகிலும் ச்ருதிஸ்ம்ருதிகளில் ஸர்வஜ்ஞன் ஒருவன் இருப்பதாகச் சொல்லியிருப்பதைப் பின்பற்றி அவன் ஜகத்துக்குக் காரணம் என்பதை ஸாதிக்கிறோம் எனில் அப்படியாகிலும் அவன் காரணன்என்பது நாம்அறியமுடியாதாகையால் ஸாத்யம் அப்ரஸித்தம் என்கிறதோஷம் அப்படியேநிற்கிறது.

அவன் காரணபூதன் என்பதையும் ஆகமத்தினால் (ச்ருதிஸ்ம்ருதி) அறிகிறோம் எனில் பக்ஷமாகிய (ஸாத்யஸந்தேஹஸ்தலம்) ப்ருதிவீ முதலியதிற்கு அவன்காரணமாக ஆகமத்தால் அறியப்

(ஸி) கேவலவ்யதிரேகி ஹேது என்பது இல்லை என்று கொள்வதில் பூர்வாசார்ய வாக்யவிரோத மொன்றுமில்லை. ஸ்ரீ ஆளவந்தார் ஆத்மஸித்தியென்றும் க்ரந்தத்தில் "கேவலவ்ய திரேகியோவெனில் ஹேதுவிற்குரிய ஸ்வபாவமுடையதன்று. ஸபக்ஷத்தில் (ஸாத்யத்தைப்பற்றிய நிச்சய மிருக்குமிடத்தில்) அதற்கு ஸம்பந்தமில்லை. ஆகவே அஸாதாரணம் என்கிற ஹேது வைப்போல் அதுவும் துஷ்டமானது" என்றிவ்வாருக விஸ்தார மாகச் சொல்லியிருக்கிருர்.

ந்யாயகுலிசம் என்கிற க்ரந்தத்தில் ஸ்வப்ரகாசவாதம் எனும் நான்காவது வாதத்தில் அப்புள்ளார் அருளிச்செய்திருப்ப தாவது "ஞானமானது, இதராபேக்ஷையன்றிதானுகவேப்ரகாசிக் கின்றது, ஏனெனில் ஞானத்தன்மையுடையதாகையால், என்கிற இவ்வநுமானமானது ஸித்தாந்தியாகிய விசிஷ்டாத்வைதியினு டையதன்று.

ஏனெனில் கேவலவ்யதிரேகி அநுமானத்தை ப்ரமாணம் என்பதாக ஸித்தாந்தி இசைவதில்லையன்ருே. இவ்வநுமானம் கேவலவ்யதிரேகியாகிறதே" என்பதாக அவ்வாக்யம். ஆகையி னுல் வரதவிஷ்ணுமிச்ரர்சொல்லியது" ஸித்தாந்திகளுக்குள் சில ருடைய கொள்கையாகலாம், அல்லது நையாயிகர்மதத்தைத் தழுவி சொல்லியதுமாகலாம். தத்வரத்நாகரத்திலும் ஹேது மூன்றுவிதம் என்பதாக கௌதமர் ஸூத்ரத்தில் சொல்லியிருக் கிருர் என்று ஆரம்பித்துச்சொல்லப்பட்டது. அது தமது மதம் என்பதாக ஆரம்பித்துச் சொல்லப்படவில்லை.

(பூ) அதே தத்வரத்நாகர க்ரந்தத்தில் "துஷ்டஹேதுக்களை நிரூபணம் செய்யுமிடத்தில் இவ்வாருகச் சொல்லப்பட்டிருக்கி றதே. அதாவது — "கேவலவ்யதிரேகியானது அநத்யவஸிதம் என்றும் அத்யவஸிதம் என்றும் இரண்டுவிதம். அவற்றில் அஸாதாரண்யம் என்கிற தோஷமானது அநத்யவஸிதம் என்கிற கேவலவ்யதிரேகி ஹேதுவிற்குரிய தர்மமாகும். ஸபக்ஷமொன்று (ஸாத்யத்தைப்பற்றி நிச்சயம் இருக்குமிடம்) இருக்கச்செய்தே ஸாத்யத்தை ஸந்தேஹிக்குமிடமாகிய பக்ஷமாத்ரத்தில் இருக்கு மதை முதற்கூறிய அஸாதாரணம் என்கிறது. ஸாத்ய நிச்சயஸ்

(பூ) கேவலவ்யதிரேகி ஹேதுவானது ப்ரமாண மன்றுகில் ஒன்றும் லக்ஷணம் ஆகமாட்டாது. லக்ஷணம் என்பது கேவலவ்யதிரேகியே யன்றோ! லக்ஷணம் இல்லாவிடில் ப்ருதிவீஜலம் முதலிய வஸ்துக்களை ஒன்றுக் கொன்று வேறுபட்டதாக எப்படித்தீர்மானிப்பது? ஆகவே உலகத்தில் நிரூபகர் செய்யும் வ்யவஹாரங்களும் வைதிகமாயுள்ள வ்யவஹாரங்களும் அழியவேண்டியவை களாகும் எனில்.

(ஸி) அது உசிதமன்று. ஏனெனில் லக்ஷணம் என்பது கேவல்வ்யதிரேகி அன்று. தத்வரத்நாகரக்ரந்தத்தில் சொல்லியதாவது (ச்லோ) ஒருவஸ்துவிற்கு லக்ஷணமாவது அவ்வஸ்துவிற்கு ஸத்ருசமாயும், ஸத்ருசமல்லாததுமானவற்றை விலக்கி அவ்வஸ்துவிற்கே உறியதாயுள்ள ஆகாரத்தை அறிவதற்குக் காரணபூத மாயிருக்குமது. (உதா) ப்ருதிவீ முதலிய வற்றிற்கு கந்தம் முதலியவை) என்பதாகச் சொல்லிவிட்டு ப்ரத்யக்ஷம் முதலிய ப்ரமாணத்தைக் கொண்டு ஒருவஸ்துவை இன்னதென்று தீர்மானிக்குமிடத்தில் அவ்வஸ்துவிற்கு ஸத்ருசமாயும் அல்லாததுமானதை விலக்குவதற்கு ஜாதிமுதலிய அவ்வாகாரமானது உதவியாகின்றது. ஆனதுபற்றி அதை லக்ஷணம் என்கிறது. என்பதாக. இதனால் அவ்வோ வஸ்துக்களைப்பற்றிய ஞானத்தை உண்டு பண்ணும் ப்ரத்யக்ஷம் முதலிய ப்ரமாணமே அவ்வோ வஸ்துக்களை நிர்ணயம் செய்வதற்கு உபாயம் என்றதாகிறது.

இப்படி லக்ஷணமன்றியிலே ப்ரத்யக்ஷம் முதலியவற்றால் அவ்வோ வஸ்துக்களைப் பற்றிய நிஷ்கர்ஷம் கூடும் என்றதனால் ஒருவஸ்துவிற்கு லக்ஷணம் சொல்ல முடியாமையைக் கொண்டே லக்ஷ்யமாயுள்ள அவ்வஸ்துவையே இல்லை என்பார் சிலருக்கு ஸமாதானம் சொல்லியாய்விட்டது. நாம் அறிந்துள்ள எல்லா வஸ்துவையும் அஸாதாரணமான ஆகாரத்தைக்கொண்டு நிரூபிப்பதும் முடியாது. லௌகிகரான நிரூபகர் எல்லோரும் வ்யவஹரிக்கு மதாயுள்ள குடத்தையும் அஸாதாரண தர்மத்தை இட்டுச் சொல்லமுடியாது. "அடிபாகம் பெருத்திருக்குமது" என்பதுவும் விரலைச்சுட்டிக் காட்டுவது முதலியதும், மற்றவஸ்துவையும் போதிக்கு மாகையால் இதரவஸ்துவிற்கும் பொதுவானது இது அஸாதாரணமாக மாட்டாது. இதரவஸ்துவிற்கு இல்லாததாய்

அவ்வஸ்து ஒன்றுக்கே அஸாதாரணமாயுள்ள தொன்றைச் சொல்லினால் தெரிவிக்க முடியாது. அவ்வாறாகவே தண்டி எனும் கவி சொல்லியிருக்கிறன்.

(ச்லோ) "கரும்பு, பால், வெல்லம் முதலியவற்றிலுள்ள மதுரஸமானது மிகவும் வித்யாஸமுடையது. ஆனாலும் அந்த வித்யாஸத்தை ஸரஸ்வதியும் இன்னது என்பதாக விசேஷித்துச் சொல்ல முடியாது" என்பதாக அந்த தண்டிவாக்யமாகும்.

ஒரு வஸ்துவிற்கே உரியதாய் (அஸாதாரணமாய்) உள்ள ஆகாரத்தைப் பற்றிய ஞானத்தை உண்டுபண்ணி இது இன்ன வஸ்து என்பாக வ்யவஹாரத்தை நிரூபிருத்துமதாயுள்ள ஆப்த வாக்யம் முதலியதே அவ்வஸ்துவிற்கு லக்ஷணமாகும்! உதாஹரணம் - ப்ருதிவியானது, கந்தம் உடையது என்பது, எது கந்தம் உடையதோ அது எல்லாவற்றையும் ப்ருதிவி என்கிற சப்தத்தால் சொல்லவேண்டும். மற்றதை அல்ல என்பதாகவன்றோ அவ்வாக்யத்தின் பொருள்!

ஸமீசீனஞ் ஞானத்திற்கு விஷய (இலக்கு) மானது ப்ரமேயம் என்கிறது. இவ்வாறக லக்ஷணம் சொல்லுகிறேமே. இங்கு விபக்ஷம் (ஸாத்யத்தின் அபாவத்தைப் பற்றிய நிச்சயஸ்தலம்) இல்லாமையால் இது கேவலவ்யதிரேகியன்று. லக்ஷணமானது கேவலவ்யதிரேகியே யாகில் இந்த லக்ஷணத்தில் கேவலவ்யதிரேகித் தன்மையானது இல்லாமற் போகும். ஆகையால் லக்ஷணமானது கேவலவ்யதிரேகியே என்பது கூடாது. அஸாதாரண தர்மமே லக்ஷணம் என்றாலும் அது அந்வயவ்யதிரேகியேயாகலாம். கேவலவ்யதிரேகி என வேண்டியதில்லை. அந்த ஹேதுவானது ஸாத்யம் உள்ள இடம் எங்கும்தானும், தான் உள்ளவிடம் எங்கும் ஸாத்யமும், இருப்பதாகிய ஸமவ்யாப்தியை உடையது. ஒருவஸ்துவிற்கே உரியதாகும் (அஸாதாரணம்) அவ்வஸ்து எல்லாவற்றிலும் இருக்குமதான தொன்றையே அதற்கு லக்ஷணம் என்கிறது. அந்த லக்ஷணத்தினலேயே லக்ஷ்யத்திற்கு இதரவஸ்துவைக்காட்டிலும் பேதமும். லக்ஷ்யத்தன்மையும் ஸித்திக்கிறது. உதாஹரணம் - சரீரமானது ப்ருதிவியைச் சேர்ந்ததா, அன்ற, என்றிவ்வாறக ஸந்தேஹம் ஏற்படும்பொழுது "சரீரமானது,

ப்ருதிவியைச் சேர்ந்தது, கந்தமிருப்பதால். உதாஹரணம் - குடம் - என்பதாக ப்ருதிவித் தன்மையை ப்ருதிவீ லக்ஷணத்தினுல் ஸாதிக்கிறேும். அப்படியே சரீரமானது ஜலம் முதலியதைச் சேர்ந்ததன்று, கந்தமிருப்பதால் - (உதா) குடம். என்றிவ்வாருக ஜலாதிகளில் வேறுப்பட்டது சரீரம் என்பதையும் ப்ருதிவீ லக்ஷணமாகிய கந்தத்தினுல் ஸாதிக்கிறேும். ஆகவே. ப்ருதிவீத் தன்மையையும். ஜலம் முதலியவற்றில் பேதத்தையும் ஸாதிப்பதால் கந்தமானது லக்ஷணமாகிறது.

(பூ) அநேக வஸ்துக்களுக்குச் சேர்ந்ததாயுள்ள கந்தம் முதலிய லக்ஷணத்திருலே முன்கூறியபடி குடம் முதலியதை த்ருஷ்டாந்தமாகச் செய்து ப்ருதிவித்தன்மை முதலியவற்றையும்- ஜலாதிகளைக் காட்டில் வேற்றுமையையும் ஸாதிக்கலாமேயாயினும் சப்தமாத்ரத்தை உடையது ஆகாசம் என்பதுபோல் தனிப்பட்ட வஸ்துவிற்குச் சொல்லும் லக்ஷணத்திலே த்ருஷ்டாந்தம் ஒன்றும் இல்லாமையால் இந்த லக்ஷணத்தைக் கொண்டு ஆகாசத்தன்மையையும், இதர பேதத்தையும் ஸாதிப்பது எப்படி எனில்.

(ஸி) இது தவறு. ஆகாசம் முதலிய சப்தங்களும் அநேக ஆகாசம் முதலியவற்றைக் குறிக்கின்றன. ஆகவே அவை அநேக வஸ்துவில் உள்ளதொரு தர்மமாகிய ஜாதியைச் சொல்லுகின்றன. ப்ரளயம் தோறும் ஆகாசமும் வெவ்வேறு. ஆகவே ஆகாசங்கள் பலவன்றே? ஆகவே முன்கூறியபடி அநுமானம் கூடும்.

(பூ) ஆகாசம் முதலியவற்றின் லக்ஷணங்களில் அந்வயவ்யதிரேக வ்யாப்தியானது முன்கூறியபடி கூடுமேயாகிலும் ஈச்வரன், காலம், முதலியவற்றிற்கு ப்ரளயந்தோறும் வேறுபாடு இல்லாமையால் அவற்றின் லக்ஷணங்கள் அந்வயவ்யதிரேகிகளாகும் விதம் எப்படி எனில்.

(ஸி) இது உண்மையே. அங்கு முன்கூறியபடி "ஜகத்காரண பூதன் ஈச்வரன்" என்பதாக ஈச்வரனைக் காட்டும் ச்ருதியினுலேயே அந்த லக்ஷணத்தோடு கூடிய லக்ஷ்யம் ஸித்தித்து விடுகிறது. அந்த லக்ஷணமாகிய அஸாதாரண தர்மத்தையே அவ்வஸ்துவிற்கு மற்றவற்றிற் காட்டில் வேற்றுமை என்கிறது. அந்த வேற்றுமையானது அவ்வஸாதாரண தர்மத்தைக் காட்டில் வேறு

பட்டதன்று. ஆகவே அந்தவேற்றுமையானது முன்பே ச்ருதி யினுலே ஏற்பட்டு விட்டதனுல் அதை அநுமானத்தைக்கொண்டு ஸாதிக்கவேண்டியதில்லை. அதற்காக லக்ஷணத்தை கேவலவ்யதிரேகி என்பதாக இசைய வேண்டியதில்லை.

அஸாதாரணதர்மத்தைக் காட்டிலும் அந்தவேற்றுமையானது வேறுபட்டதேயாகிலும் லக்ஷணமானது அந்வயவ்யதிரேகியேயாகும் எப்படி எனில். ஈச்வரனுக்குறிய லக்ஷணமாகிய ஜகத்காரணத்வம் முதலியது எங்கு இல்லையோ. அங்கு ஈச்வரத்வமும் (ஈச்வரத்தன்மை) இல்லை என்பதாக நியமம் உண்டு.

ஆகவே ஈச்வரராக ஸந்தேஹிக்கப்படும் ப்ருஹ்மருத்ராதிகளிடத்தில் முன்கூறிய ஈச்வரலக்ஷணம் இல்லையாகையால் அவர்கள் ஈச்வரர் அன்று என்பதாக ஸாதிக்கிறோம். இங்குஹேது உள்ள இடமெங்கும் ஸாத்யம் இருப்பதாகிய அந்வயவ்யாப்திக்கு உதாஹரணம் நம்போன்ற ஆத்மாக்கள், ஸாத்யம் இல்லாதவிடத்தில் ஹேது இல்லாமையாகிற வ்யதிரேகவ்யாப்திக்கு உதாஹரணம் ஈச்வரன். இப்படி இரண்டு வ்யாப்தியும் இருப்பதால் இந்தலக்ஷணம் அந்வயவ்யதிரேகி யேயாகும் ஈச்வரன் என்கிற வஸ்து (ப்ரதியோகி) சாஸ்திரத்தினுல் ஸித்தமாயிருப்பதால் ஈச்வரரல்லாமையை ப்ருஹ்மாதிகளிடம் ஸாதிப்பதுகூடும்.

ப்ருஹ்மா முதலியவர்கள் ஈச்வரர் அன்று. எல்லாவுலகையும் ஸ்ருஷ்டிப்பது முதலியவற்றிற்கு அவர்கள் காரணமன்றுகையால். உதாஹரணம் குடம். இப்படி அநுமானம் கண்டு கொள்வது. அவ்வாறுகவே காலம் என்பது, மூலப்ரக்ருதியைக் காட்டில் வேறுபட்டது. மஹான் அஹங்காரம் முதலிய மாறுதல் இதற்கு (காலத்திற்கு) இல்லாமையால். உதாஹரணம் ஆத்மா. இவ்வாறுகவே ப்ரக்ருதியானது காலத்திற் காட்டில் வேறுபட்டது நிமிஷம் முதலிய மாறுதல் இதற்கு (ப்ரக்ருதிக்கு) இல்லாமையால். உதாஹரணம் ஆத்மா என்பதாக அவ்வோலக்ஷணம் இல்லாமையைக் கொண்டு அந்த அந்தவஸ்துக்களுக்கு மற்றதைக் காட்டில் பேதத்தை அநுமானம் செய்யலாம். இவ்வாறுக அவ்வஸ்துவாக ஸந்தேஹிக்கப் படும் மற்றவஸ்துக்களுக்கு அவ்வஸ்துவோடு வேற்றுமை ஸித்தமாகிறது. ஆகவே அவ்வஸ்துவிற்கும் மற்ற

வஸ்துக் களோடு பேதம் ஏற்படுகிறது. இவ்வாருக மற்ற வஸ் துக்களோடு பேதமாகிய ப்ரயோஜனம் லக்ஷணத்திஞல் லக்ஷ் யத்திற்கு ஏற்பட்டு விடுகிறது. ஆகையால் லக்ஷணம் எல்லாம் அந்வயவ் யாப்தியோடு கூடியதேயன்றி கேவலவ்யதிரேகியல்ல.

(பூ) இப்படியாகில் லக்ஷணம் எல்லாவற்றிலும் லக்ஷ்யவஸ் துவைக்காட்டில் வேறுபட்ட வஸ்துவிற்கு லக்ஷ்யத்தோடு வேற் றுமையை ஸாதிக்க முடியும். எப்படி எனில் (ம) கவயமானது (பசுவைப் போன்ற தொரு ம்ருகம்) பசுவன்று. ஸாஸ்னே எனப் படும் கழுத்தின் கீழிலுள்ளதொரு தோலானது அதற்கு இல்லா மையால். எருமை முதலியது உதாஹரணம். இப்படி கோ (மா) விற்கு லக்ஷணமாகிய ஸாஸ்னாயானது (கழுத்தின் கீழிலுள்ள தோல்) இல்லாமையினுல் மற்றவஸ்துக்கள் கோ அன்று என்பதாக ஸித்திப்பதால் கோவிற்கு மற்ற வஸ்துக்களில் பேதம் ப்ரஸித்த மாகிறது. ஆகவே ஸாஸ்னே (கழுத்தின் கீழ்தோல்) யாகிற லக்ஷ ணத்திஞல் கோவிற்கு மற்றவற்றில் வித்யாஸத்தை ஸாதிக்கலாம். முன்கூறியபடி ஸாத்யமானது ப்ரஸித்தமான படியால் கேவலவ் யதிரேகி ஸ்தலத்தில் ஸாத்யம் ப்ரஸித்தமன்று என்பதற்கில்லை யே எனில் - (ஸி) இப்படியேயாகிலும் லக்ஷணமானது கேவலவ் யதிரேகி யன்று.

எப்படி எனில் - ஸாஸ்னே (கழுத்தின் கீழ்தோல்) இருப்ப தால், இது, கோவாகும் என்று ஸாதிக்குமிடத்தில் எது ஸாஸ்னே யோடு கூடியதோ அதுகோவாகும் என்றே அந்வயவ்யாப்தியு ண்டு. உதாஹரணம் என்னுடைய பசு. அப்படியே எதுகோ அன்ருே அது ஸாஸ்னேயோடு கூடிய தன்று. உதாஹரணம். எருமை- என்பதாக அந்வயவ்யாப்தியும் வ்யதிரேக வ்யாப்தியும் இவ்வநுமானத்திற்கு உண்டு. அப்படியே ஸாஸ்னேயானது இல் லாமையால், இது, கோவன்று, என்பதாக அநுமானம் செய்யு மிடத்தில், ஹேதுவுள்ள இடமெங்கும் ஸாத்யமிருப்பதாகிய அந்வயவ்யாப்திக்கு மஹிஷமும் எதுகோவாகின்றதோ அது ஸாஸ்னேயோடு கூடியது என்பதாக வ்யதிரேக வ்யாப்தி (ஸாத்ய மில்லாத இடத்தில் ஹேது இல்லாமை) க்கு நம்முடைய பசுவும் உதாஹரணங்களாகின்றமையால் லக்ஷணமானது அந்வயவ்யதி ரேகியே யல்லது கேவலவ்யதிரேகி அன்று.

(பூ) சிலர் லக்ஷணத்தை கேவலவ்யதிரேகி என்றே கொள்ளு கிறார்கள். எப்படி எனில் - கோத்வம் (பசுவின் தன்மை) இருப்பதால், விவாத விஷயமாயுள்ள எல்லா வஸ்துவையும், கோ என்பதாகச் சொல்லவேண்டும் என்பதாகவோ, அல்லது ஸாஸ்னை (கழுத்தின் கீழ்தோல்) முதலியது இருப்பதால் கோபின்ன வஸ்துக்களில் அது வேறுப்பட்டது, என்பதாகவோ, அநுமானமாகும் இங்கு எல்லா கோவ்யக்திகளும் பக்ஷம். (ஸாத்ய ஸந்தேஹமுள்ளவிடம்) ஆகவே எங்கு ஹேது இருக்கின்றதோ அங்கு ஸாத்யமும் என்பதாக அந்வயவ்யாப்தி சொல்லமுடியாது. ஆகவே எங்கு ஸாத்யமில்லையோ அங்கு ஹேது இல்லை என்பதாக வ்யதிரேக வ்யாப்தியே உள்ளது. ஆகையால் லக்ஷணமானது கேவலவ்யதிரேகியே என்பதாக அவர்கள் அபிப்ராயம்.

(ஸி) இது தவறு. நமது கோவ்யக்தியை நாம் கோ என்பதாக வ்யவஹாரம் செய்கிறோம். கோ பின்னமான மஹிஷம் முதலியவற்றில் வேறுப்பட்டதாகவும் அறிந்திருக்கிறோம். ஆகையால் முன்கூறிய அநுமானத்தில் பக்ஷமாகிய (ஸாத்யத்தை அநுமானம் செய்யும் இடம்) கோவ்யக்திகளுக்குள் சில கோவ்யக்திகளில் முன்கூறிய ஸாத்யமானது நிச்சிதமானது. நிச்சயம் பெற்ற ஸாத்யத்தை ஸாதிப்பதாகிய ஸித்தஸாதனம் என்கிற தோஷம் இவர்கள் பக்ஷத்தில் அபஹரிக்க முடியாதது.

(பூ) "கோ என்பதாகச் சொல்லப்படவேண்டும்" என்று ஸாதிப்பதனால் எல்லா கோக்களிலும் இருக்குமதாகிய கோத்வம், (பசுத்தன்மை) ஆனது கோ சப்தத்திற்குப் பொருள் என்பதாக ஏற்படுகிறது. இந்த ஸாத்யமானது பக்ஷம் சிலவற்றில் நிச்சிதமன்றாகையால் முன்கூறிய ஸித்தஸாதன தோஷம் முதல் அநுமானத்திற்கு இல்லை. இரண்டாவது அநுமானத்திலும் ஸாத்யம். முன்பே அப்ரஸித்தம். மஹிஷம் முதலிய சில வஸ்துக்களைக் காட்டில் பேதம் ஸித்தித்தாலும் எல்லாவற்றிலும் வேற்றுமையை நிச்சயம் செய்யவில்லையே. ஆகவே முன்கூறிய ஸித்தஸாதன தோஷம் இல்லையே எனில்.

(ஸி) இது தவறு - முதல் அநுமானத்தினால் "கோ என்பதாகச் சொல்லப்படவேண்டும்" என்பதாக ஸாதிப்பதனாலேயே

கோ சப்தத்திற்கு கோத்வம் தான் பொருள் என்பதாக நிச்சயிக்கமுடியாதே. தமது கோவ்யக்தியில் இருப்பதாயுள்ள தொரு தர்மமும் கோ சப்தத்திற்குப் பொருளாக்குவதில். விரோத மொன்றுமில்லையே- அந்த தர்மம் என்னவெனில் - நமது க்ருஹத்தில் இருப்பது, முதலானதாகும். அந்த தர்மமானது நமது பசுவினிடத்தில் நிச்சயமே. இப்பொழுதும் ஸித்தஸாதன தோஷமே ஸித்தித்தது.

(பூ) கோத்வமானது கோசப்தத்திற்குப் பொருள் என்று கொள்ளுவதில் ஔசித்ய முண்டு. ஏனெனில் கோத்வம் என்பது ஜாதி. எல்லாகோக்களிலும் இருக்குமது. முன்கூறிய தர்மத்தை கோசப்தார்த்தமாக்குவதில் கௌரவம். நமது க்ருஹத்தில் இருப்பது முதலிய தர்மமானது சில கோவ்யக்திகளிலேயே இருக்கிறது.

(ஸி) இவ்வாறான யுக்திகளை நாமும் சொல்லக்கூடும். எப்படி எனில்- நமது க்ருஹத்தில் இருப்பது என்பதுவும் நமது பசுக்கள் எல்லாவற்றிலும் இருப்பதாகையால் ஸாமான்ய தர்மமாகலாம். எல்லா கோக்களிலும் இல்லையே எனில் எல்லா த்ரவ்யங்களிலும் கோத்வமும் இல்லாமையால் அதுவும் ஸாமான்யமன்று. கோ சப்தத்திற்கு கோத்வமும் பொருளாகக்கூடாது. என்றிவ்வாறான ஸமாதானமெல்லாம் நமக்கும் துல்யமானதே.

(பூ) "கோத்வ (கோத்தன்மை) த்தைப் பொருளாகக் கொண்ட கோசப்தத்திற்கு அர்த்தம்" என்பதாக ஸாதிக்கலாமே. கோசப்தத்திற்கு கோத்வமே பொருள் என்பது முன்பே ஸித்தமில்லாமையால் ஸித்தஸாதன தோஷம் இல்லையே எனில்.

(ஸி) இத்ஸாத்தியமானது அப்ரஸித்த மாகையால் கேவலவ்யதிரேகி ஸ்தலத்தில் ஸாத்யத்திற்கு ப்ரஸித்தியில்லாமையால் அதை ஸாதிக்க முடியாது என்றாப்போல் முன்கூறிய தோஷம் ஏற்படுகிறது.

கோபின்னங்களான மற்றஎல்லாவஸ்துக்களைக் காட்டிலும் வேற்றுமையை ஸாதிப்பதாக இரண்டாவது அனுமானத்தில்

கொண்டிருப்பதும் ஸரியன்று. பௌத்தமதத்தில் நாம் சொல்லும் அந்யோந்யாச்ரயம் என்கிற தோஷம் இவ்வநுமானத்திலும் ஏற்படுகிறது எப்படி எனில் - கோத்வம் என்பதாக ஒருதர்மம் கிடையாது. கோபின்னங்களைக் காட்டில் கோவிற்கு உள்ள வேற்றுமையே கோத்வம் என்பதாக அவன் சொல்லுகிறான். இப்படியாகில் கோவைப்பற்றிய ஜ்ஞானம் ஏற்பட்டபிறகு கோபின்னத்தைப் பற்றிய ஜ்ஞானம் ஏற்படுகிறது. கோபின்னத்தை அறிந்தபிறகு அதில்வேற்றுமையாகிறதர்மத்தோடு கோவைப் பற்றிய ஜ்ஞானம் என்பதாக அவன் பக்ஷத்தில் அந்யோந்யாச்ரய தோஷம். அவ்வாறாகவே. மஹிஷம் முதலிய மற்ற வஸ்துக்களை கோபின்னம் என்பதாக அறிந்த பிறகு கோவிற்கு, கோபின்னத்தின் வேற்றுமையாகிற ஸாத்யத்தை அறியவேண்டும். இந்த ஸாத்யத்தைப் பற்றியஞ் ஞானம் ஏற்பட்ட பிறகு மற்றதை கோபின்னம் என்பதாக அறிய வேண்டும். கோவானது கோபின்னங்களான மஹிஷம் முதலியவற்றில் வேறுபட்டது என்று அறிந்தாலன்றி மஹிஷம் முதலியவை கோபின்னங்கள் என்பதாகஞ் ஞானம் ஏற்பட மாட்டாது. இப்படி இங்கும் அந்யோந்யாச்ரய தோஷமுண்டு.

மேலும் (ச்லோ) "கோபின்னத்தைக் காட்டில் கோவிற்குள்ள வேற்றுமையாகிற ஸாத்யமானது ஹேதுவாகிய ஸாஸ்னை முதலிய லக்ஷணத்தைக் காட்டிலும் வேறுபட்டதா? அன்றா? வேறுபட்டதாகில் இந்த ஸாத்யத்திற்கு பக்ஷத்திலே நிச்சயமுண்டாகில் அநுமானமே கூடாது. மற்ற இடத்தில் ஸாத்ய நிச்சயமிருப்பதாகில் ஹேதுவும் அங்கு இருப்பதாகக் கொண்டால் அந்வயவ்யாப்தியே ஏற்படுகிறது. ஹேது இல்லையாகில் அஸாதாரணம் என்கிற தோஷம். ஆகையால் கேவலவ்யதிரேகியாக மாட்டாது. அதற்காக ஹேதுவாகிய லக்ஷணத்தைக் காட்டிலும் ஸாத்யமாகிய வேற்றுமையானது வேறுபட்டதன்று. என்றால் எந்த ஸாத்யத்தை எந்த ஹேதுவைக் கொண்டு எதற்காக ஸாதிக்கவேண்டுமென்பது ஏற்படவில்லை" (ஹேதுவும் ஸாத்யமும் ஒன்றாகில் ஹேதுவிற்கு பக்ஷத்திலே உள்ள நிச்சயமே ஸாத்யத்தைப்பற்றிய நிச்சயமுமாவதால் பக்ஷத்திலே ஸாத்ய நிச்சயம் ஏற்பட்டுவிட்டதால் அநுமானம் ஏற்படமாட்டாது என்றபடி.)

மேலும், பக்ஷமாகிய கோவ்யக்திகள் அநேகங்களேயாகிலும் அந்தவ்யக்திகள் எல்லாவற்றிலும் கோத்வம் என்கிற தர்மம் ஒன்றே. ஆகவே பக்ஷம் எல்லாவற்றிலும் உள்ள தர்மமானது ஒன்றாக இருக்குமிடத்தில் அந்தபக்ஷங்கள் சிலவற்றில் ஸாத்யத்தைப் பற்றிய நிச்சயமானது தோஷமன்று என்கிற எண்ணத்தினாலேயன்றோ எல்லா கோவ்யக்திகளிலும் "இதரங்களைக்காட்டில் பேதத்தை" ஸாதிப்பதாகக் கொள்ளுகிறாய். அதற்குத் தகுந்தப்ரமாணம் ஒன்றுமில்லை. ஆகவே பக்ஷம் எல்லாவற்றிலும் உள்ளதர்மம் ஒன்றாகிலும் பக்ஷங்கள் சிலவற்றில் ஸாத்யநிச்சயமும் தோஷமே. நமது கோவிற்கு மஹிஷம் முதலிய மற்றவற்றில் பேதமானது நமக்கு நிச்சிதம் தானே ஆகையால் ஸித்தஸாதனம் (நிச்சயித்ததை மறுபடி ஸாதிப்பது) என்கிற தோஷத்திற்கு ஸமாதானம் இல்லை.

"எல்லா கோவ்யக்திகளும், இதரபின்னங்கள், ஸாஸ்னை முதலியவற்றோடு கூடியிருப்பதால்" என்பதாக முன் கூறியவ்யதிரேகி அநுமானத்தை தத்வரத்நாகரக்ரந்தத்திலும் அநுவாதம் செய்து ஸாத்யமாயுள்ள பேதமானது ஹேதுவாகிய லக்ஷணத்தில் வேறுபட்டதா? ஒன்று என்று விகல்பம் செய்து காட்டிய தூஷணத்தையும் ஸ்ரீபராசரபட்டரும் சொல்லியிருக்கிறார்.

அதாவது— கந்தமாகிய லக்ஷணத்தை ஹேதுவாகக் கொண்டு, ப்ருதிவியானது, மற்றதைக்காட்டில் வேறுபட்டது, என்பதாக கேவலவ்யதிரேகி அநுமனம் என்கிறாயே. இங்கு கந்தம் என்கிற லக்ஷணத்திற்கு லக்ஷ்யமா (இலக்கு) யுள்ள ப்ருதிவியானது ஏதேனும் ப்ரமாணத்தால் ஸித்தமா? இல்லையா? இல்லையாகில் லக்ஷணமாகிய ஹேதுவிற்கு ஆதாரமாகிய பக்ஷமே ஸித்திக்க வில்லை யாகையால் ஆச்ரயாஸித்தி என்கிறதோஷம் ஏற்படுகிறது. அதற்காக ப்ரமாணத்தினால் ப்ருதிவிஎன்கிற ஆச்ரயமானது ஸித்தித்திருப்பதாகக் கொண்டால் மற்றவற்றில் அது வேறுபட்டதாகவே அந்தப்ரமாணத்தினாலேயே ஸித்தித்து விட்டபடியால் "இதரங்களைக் காட்டில் பேதத்தை" அதில்ஸாதிப்பது வீணாகும்.

---

71/1, 72/2—பக்கங்களை 72-வது பக்கத்திற்குமேல் சேர்த்துக்கொள்ளவும்.

(பூ) ப்ருதிவீ என்கிற ஸ்வரூபமாத்திரம் ப்ரமாணத்தினாலே ஏற்படுகிறது. அதில் "இதரங்களைக் காட்டில் பேதத்தை" அநுமானத்தினால் ஸாதனம் செய்கிறோமே எனில்.

(ஸி) அந்த இதரபேதம் என்கிற ஸாத்யத்தை ஓரிடத்திலும் நிச்சயம் செய்யாமையால் இந்தஸாத்யமானது அப்ரஸித்தமே. அப்ரஸித்தமான ஸாத்யத்தைப் பக்ஷத்திலே ஸாதிப்பதாகிய தோஷம் இப்பக்ஷத்திலும் முன்போலவே உள்ளது இதரபேதம் என்கிற ஸாத்யத்தைப் பற்றிய நிச்சயமுண்டாகில் அதை ஸாதிப்பது வீணாகும்.

மேலும் அந்த இதர பேதமானது ப்ருதிவியில் ஏதேனுமொரு ப்ரமாணத்தினாலே நிச்சிதமாயிருக்கச் செய்தேயும் மறுபடி அந்த தர்மத்தைப் பற்றிய நிச்சயத்திற்க்காகவே கேவலவ்யதிரேகி அநுமானம் ஏற்படுவதாகில், இந்த அநுமானத்தினால் ஸித்தித்த இதர பேதத்திற்கு மறுபடியும் மற்றொரு ப்ரமாணத்தைக் கொண்டு நிச்சயம் வேண்டும் என்ப தாகக் கொள்ளலாமாகையால் இவ்வழியில் ஸாத்யநிச்சயம் முடிவு பெறமாட்டாது. அநவஸ்தை (முடிவுஇல்லாமை) என்கிற தோஷமுண்டு. இதர பேதத்தைத் தெரிவிக்கும் ப்ரமாணத்தினால் அந்தப்ரமாணத்திற்கு விஷயமாயுள்ள இதர பேதம் ஸித்திக்கச் செய்தேயும் மற்றொரு ப்ரமாணத்தினாலே அதன் விஷயத்தை ஸாதிப்பதாகில் அந்த ப்ரமாணத்திற்குத் தன்விஷயத்தை ஸாதித்துக் கொடுப்ப தாகிய ப்ராமாண்யமானது மற்றொரு அநுமானத்தினாலேயே ஏற்படுகிறதல்லது ஸ்வத: (தானே) ப்ரமாணமாகவே அது ஸித்திக்க வில்லை என்றதாகிறது. இப்படியாகில் ஞானத்தின் ப்ராமாண்யத்தைப் பற்றிய மற்றொரு அநுமானம் ப்ரமாணம் என்பதையும் மற்றொன்றாலே.

—(o)—

கேவலாந்வயி என்பதாக ஹேதுவின்பிறிவு ஒன்று முன்பே காட்டியுள்ளோமன்றோ. அதாவது "பக்ஷத்தில் இருப்பது முதலிய ஐந்து ரூபங்களோடு கூடியதாய், தன்னுடைய ஸாத்தியத்திற்கு அபாவத்தை ஓரிடத்திலும் காணமுடியாததுமானது கேவலாந்வயி" என்பதாக" அந்த கேவலாந்வயி ஹேதுவிலும் ப்ரமாணமென்பது யாதெனில்— அந்தஹேதுவைக் கொண்டு ஸாதிக்கப்படும் அர்த்தமானது இல்லையாகில் பாத (பாய) கம் ஏற்படக்கூடியதே ப்ரமாணம். ஹேதுவை இசைந்து ஸாத்யத்தை இசையாவிட்டால் விரோதம் ஒன்றும் காட்டமுடியாத மற்றவை ப்ரமாணங்களல்ல என்பதாக அப்படிப்பட்ட கேவலாந்வயி ஹேதுக்களை முன்பே நிரஸனம் செய்துள்ளோம். ஆகையால் கேவலாந்வயி அநுமானத்தால் அபாவ ரூபமல்லாததொரு அஞ்ஞானமுண்டு என்பதாக மதாந்தரஸ்தர்கள் ஸாதிப்பது முடியாது. இவ்வழியிலும் ப்ராமாணிகருக்கு வாதிகளை வெல்லும் ச்ரமம் குறைந்தது.

அந்வயவ்யதிரேகி என்பதாக மற்றொரு ஹேதுவின் பிறிவாகும். ஹேதுஉள்ள இடம் எங்கும் ஸாத்யமிருப்பதாகிய அந்வயவ்யாப்தியும் ஸாத்யமானது இல்லாத இடங்களில் ஹேதுவும் இல்லாமையாகிற வ்யதிரேகவ்யாப்தியும் உள்ள ஹேதுவை அந்வயவ்யதிரேகி என்கிறது. இந்தஹேதுவைக் கொண்டு ஒருக்காலும் இந்திரியங்களுக்கும் புலப்படமுடியாத ஈச்வரன் முதலியவற்றை அநுமானம் செய்கிறார்கள் நையாயிகர் முதலியவர்கள். பூமி முதலியவை, உண்டாகின்றனவாகையால் இவற்றிற்குக் கர்த்தா ஒருவன் வேண்டும். அவனே ஈச்வரன் என்பதாக அவர் கொள்ளும் அநுமானமாகும். எது உண்டாகின்றதோ அது கர்த்தாவோடு கூடியது என்பதாக ப்ரத்யக்ஷத்தால் அறியக்கூடிய நியதஸம்பந்தத்தை குடம் முதலியவற்றில் நாம்கண்டிருப்பதை உதாஹரணமாகக் கொண்டு இவ்வநுமானம் செய்கிறார்கள். இப்படியாகில் அந்த கர்த்தாவானவன் சரீரமுடையவனாகவும் கர்மவச்யனாகவும் கண்டிருப்பதால் ஈச்வரனும் அப்படிப்பட்டவனாக வேண்டும். ஈச்வரன் அப்படியல்லனே. ஆகவே அவர்சொல்லும் அநுமானத்தில் உபாதி ஸத்ப்ரதிபக்ஷம் முதலிய தூஷணம் ஏற்படுவதால் அந்த ஹேதுவைக் கொண்டு அதீந்திரியமாகவே இருக்கும

தொன்றை அநுமானம் செய்ய முடியாது. இவ்வழியிலும் வாதிகளை ஜயிக்க வைதிகருக்கு ச்ரமம் குறைந்தது.

(பூ) சந்திரபிம்பத்தின் பின்பாகத்தை நாம் ஒரு பொழுதும் கண்டதில்லையே. அதை நாம் அநுமானம் செய்கிறோமன்றோ. இது அத்யந்தம் அதீந்த்ரிய மானதொன்றைப் பற்றிய அநுமான மாச்சுதே, இது எப்படிக் கூடும்? எனில்.

(ஸி)அந்த அநுமானம் கூடும். ஏனெனில் சந்திரபிம்பத்தின் பின்பாகத்தில் நமது இந்திரியம் ஸம்பந்தப் படவில்லை. ஆகவே அது நமக்குத் தெரியவில்லை. பர்வதத்தின் பின்பாகமானது முன் பக்கத்திலிருந்து நாம் பார்க்கும் பொழுது இந்திரிய ஸம்பந்த மில்லாமையால் தெரிவதில்லை, அதனாலேயே அது அதீந்திரிய மாய்விடுமா? பின்பக்கத்தில் சென்றால் அதைப்பார்க்கலாமன்றோ. அப்படியே சந்திரபிம்பத்தின் பின்பாகத்தையும் அதற்கு மேலிலி ருந்து காணலாம். ஆகையால் அது இந்திரியங்களுக்குப் புலப்படவே கூடாததொன்றன்று. ஆகையால் அதை அநுமானம் செய்வது உசிதமே.

ஒரு வஸ்துவானது இருக்கச் செய்தேயும் அதைநாம் காண முடியாததற்குப் பலஹேதுக்கள் இருக்கின்றனவே. இதைப் பற்றி ஸாங்கிய மதஸ்தரும் சொல்லியிருக்கிறார்கள்.

அதாவது— (ச்லோ) (1) மேருபர்வதம் முதலியவை வெகு தூரத்திலிருப்பதால் நமக்குத் தெரிவதில்லை. (2) நம் கண்களின் இமைகளை வெகுஸமீபத்திலே இருப்பதால் பார்க்கமுடியவில்லை. (3) கண்முதலிய இந்திரியம் அழிந்துவிடுவதனால் எதிரிலுள்ள வஸ்துவை பார்ப்பது முதலிய ஏற்படுகிறதில்லை. (4) மனது நிலை கொள்ளாமல் வேறு விஷயத்தில் வ்யாஸங்கம் ஏற்படுவதினால் முன்னிலே உள்ளபதார்த்தத்தையும் காண்பதில்லை. (5) ஸூக்ஷ்மமாகையால் ஜலத்திலுள்ள அக்னியைக் காண்பதில்லை. (6) சுவர் முதலிய மறைவினால் வெளியிலே உள்ள பதார்த்தத்தைப் பார்ப்பதில்லை. (7) பித்தத்தினால் கண்மறைவு ஏற்படுவதினால் சங்கின் உள்ள வெண்மையை அறிய முடியவில்லை. (8) ஸமானமான வஸ்துவோடு சேர்க்கையினால் ஜலத்திலுள்ள பரல் முதலிய

தைக் காணமுடியவில்லை. என்பதாக ஸாங்கியர் சொல்லியுள்ளார்கள். ஆனால் அந்தஸாங்கியர்கள் மூலப்ரக்ருதி என்கிறதத்வத்தை அநுமானம் செய்கிறார்கள் அதாவது— (ச்லோ) அந்த மூலப்ரக்ருதிக்கு மஹான் அஹங்காரம் முதலியவை ஸூக்ஷ்மங்களாகையால் ஸத்ருசகார்யங்கள். நமக்குக் காணப்படும் ப்ருதிவி முதலியவை ஸ்தூலங்களாகையால் ஸத்ருசமல்லாத கார்யங்கள். அவற்றில் ஸ்தூல கார்யங்களில் ஸத்வம் முதலிய குணம் இருப்பதினால் இதற்குக் காரணமும் ஸத்வம் முதலிய குணமுடையது. அதுதான் ப்ருக்ருதி. என்பதாக ஸ்தூல கார்யங்களைக்கொண்டு ப்ருக்ருதியை அனுமானம் செய்யவேண்டும். அந்தப்ரக்ருதியானது ஸூக்ஷ்மமாகையால் நமக்குப் ப்ரத்யக்ஷமானதில்லை. அன்றி அவ்வஸ்துவே இல்லாமையாலன்று என்பதாக அவர்கள் ப்ருக்ருதியை அனுமிக்கிறார்கள் நாமோ இம்மாதிரியான விஷயத்தில் அநுமானமே கூடாதென்கிறோம். ஏனெனில் ப்ரக்ருதியானது அத்யந்தம் அதீந்திரியம். இதை அனுமானம் செய்வதானால் ஹேதுவிற்கு வ்யாப்தியை (ஸாத்யத்தோடு நியதஸம்பந்தத்தை) நிச்சயிப்பது முடியாது. அவ்வாறன்றிக்கே இந்திரியத்தினால் அறியக்கூடியதாக இருக்கச் செய்தே ஸூக்ஷ்மமாகையால் காணமுடியாத வற்றைப்பற்றி அநுமானம் செய்வதை நாம் ஆக்ஷேபிக்கவில்லை. உஷ்ணஜலத்தில் அக்னியானது இருக்கின்றது. இதுநமக்குத் தென்படவில்லை. ஆகிலும் உஷ்ண ஸ்பர்சத்தினால் அக்னியை அநுமானம் செய்கிறோம். இவ்வநுமானத்தில் விரோதம் ஒன்றுமில்லை. சாஸ்திரத்தைக் கொண்டே ஹேதுவிற்கும் ஸாத்யத்திற்கும் வ்யாப்தி (நியதஸம்பந்தம்) ஏற்படுமிடத்தில் அந்தஹேதுவைக்கொண்டு மிகவும் அதீந்திரியமான தொன்றை அநுமானம் செய்வதை நாம் தடுக்கவில்லை அதாவது — ப்ராஹ்மண்யம் முதலியஜாதியையும், தேஜஸ் முதலிய குணத்தையும், சஸ்த்ரஜீவனம் முதலியகர்மாவையும், நிறத்தையும், செய்யவேண்டியதை நிச்சயிப்பதாகிய ப்ரஜ்ஞையையும், தாரணமுள்ளபுத்தியையும், வ்யாதி முதலிய வற்றையும் கண்டு அவற்றிற்கு மூலமான புண்ய பாபவிசேஷங்களை அநுமானம் செய்வது. சாஸ்திரத்தைக் கொண்டே இங்குஸாத்ய ஹேதுக்களுக்கு உள்ள நியதஸம்பந்தத்தை நிச்சயிக்க வேண்டும். இந்த அநுமானம் நமக்கு ஸம்மதமே.

(பூ) ஆனால் "இந்திரியங்களுக்கு புலப்படாதவை எல்லாவற்றையும் சாஸ்திரம் கொண்டே அறிய வேண்டுமல்லது அவற்றிற்கு அநுமானம் கூடாது" என்பதாக ஸ்ரீபாஷ்யத்திலே அருளிச்செய்திருக்கிறாரே. இது எப்படி உபபன்னம்? எனில்— (ஸி) ப்ரத்யக்ஷத்தினால் ஹேது ஸாத்யங்களுக்கு உள்ள நியதஸம்பந்தத்தைக் கொண்டு அத்யந்தம் இந்திரிய கோசரமல்லாத தொன்றை ஸாதிப்பதோ பாதிப்பதோ முடியாது என்பதாக அந்த பாஷ்யத்தின் தாத்பர்யம். சாஸ்திரத்தினால் ஏற்பட்டுள்ள நியதஸம்பந்தத்தை மூலாதாரமாகக் கொண்டு அதீந்திரிய வஸ்துவை அநுமானம்செய்வதை நிஷேதிப்பதில் அந்தபாஷ்யத்திற்கு நோக்கமன்று. அந்த அநுமானத்திற்கும் சாஸ்திரமே மூலமாகையால் சாஸ்திரமாகிய ப்ரமாணத்திலேயே அது முடிவு பெறுகின்றமையால் சாஸ்திரமே ப்ரமாணம் என்கிற பாஷ்யத்திற்கு விரோதமில்லை.

"ஸாமாந்யதோத்ருஷ்டம் முதலியதை நிரூபித்தல்"

இப்படி சாஸ்திரத்தினால் வ்யாப்தி நிச்சயம் ஏற்படுமிடத்தில் அதீந்திரிய வஸ்துவை அநுமானம் செய்யலாம் என்றதனாலே ஸாமான்யதோத்ருஷ்டம் என்றும் விசேஷதோத்ருஷ்டம் என்றும் அநுமானத்தை நையாயிகன் விபாகம் செய்வதற்கும் விஷயவ்யவஸ்தை செய்யப் பட்டதாகிறது. எப்படிஎனில் நம்போன்றவர்களின் ப்ரத்யக்ஷத்தால் அறியகூடிய தொன்றைப் பற்றிய அநுமானத்தை விசேஷதோத்ருஷ்டம் என்பது. நம்போன்றவர்களின் ப்ரத்யக்ஷத்தால் அறிய முடியாததொன்றைப் பற்றிய அநுமானத்தை ஸாமான்ய தோத்ருஷ்டம் என்பது என்பதாக நையாயிகர் சொல்லுகிறார்கள். அதன் தாத்பர்யமாவது— சாஸ்திரத்தைக் கொணடே வ்யாப்தியைத் தெளிந்து அதனால் ஏற்படும் அநுமானமானது "ஸாமான்ய தோத்ருஷ்டம்." நமது ப்ரத்யக்ஷம் முதலியவற்றினாலே வ்யாப்தியைத் தெளிந்து ஏற்படுமது விசேஷ தோத்ருஷ்டம் என்பதாக அந்த விபாகத்திற்குநோக்கம் ஸித்தித்ததாகிறது. மேலும் அத்யந்தம் அதீந்திரியமன்றிக்கே இருக்கச் செய்தேயும் ஸௌக்ஷ்மமாகையால் உஷ்ணஜலத்திலுள்ள அக்னி நமக்கு கண்ணிற்குப் புலப்படுவதில்லை, அதைப்போன்ற அநுமானம் ஸாமான்யதோத்ருஷ்டம், ஸ்தூல வஹ்னி முதலியதைப்பர்வதம் முதலியவற்றில் அநுமானம்

செய்வது விசேஷதோத்ருஷ்டம் என்பதாக லோகப்ரஸித்தமான வற்றிலே ஸம்பந்தம் சிலது, ஸம்பந்தமல்லாதது சிலது என்கிற வ்யத்யாஸம் இருப்பதால் அவற்றைப் பற்றிய அநுமானத்திலும் முன் கூறியபடி வ்யத்யாஸம் ஸித்திக்கின்றது.

சிலர் சொல்லுவதாவது— எந்த ஹேதுவிற்கு எந்த ஸாத்யத்தோடு நியதஸம்பந்தத்தை நாம் கண்டிருக்கிறோமோ அந்த ஹேதுவினால் அந்த ஸாத்யமாகிற வ்யக்தியை வேறு தேசத்திலோ வேறொரு காலத்திலோ அநுமானம் செய்வது விசேஷதோத்ருஷ்டம் என்பது, அப்படி அன்றிக்கே நியதஸம்பந்தத்தை நாம் அறிந்துள்ள வ்யக்திக்கு ஸஜாதீயமானதொன்றைக் கொண்டு எதோடு நியதஸம்பந்தம் ஏற்பட்டதோ அதற்கு ஸஜாதீயமான மற்றொன்றை அநுமானம் செய்வது ஸாமான்ய தோத்ருஷ்டம் என்பதாக அவர் சொல்வது- உதா- தூமத்தினால் அக்னியை அநுமானம் செய்வது ஸாமான்யதோத்ருஷ்டம். க்ருத்திகா நக்ஷத்திரத்தினால் ரோஹிணீ நக்ஷத்ரத்தை அநுமானம் செய்வது விசேஷதோத்ருஷ்டம். என்று அவர்கள் கொள்கை. அவர் சொல்லும் விசேஷதோத்ருஷ்டத்தின் உதாஹரணத்தை நிரூபித்துப்பார்த்தால் ஸாமாந்யதோத்ருஷ்டத்திலேயே அதுமுடிவுபெறுகின்றது. எப்படிஎனில்-க்ருத்திகா நக்ஷத்திரத்தினால் ரோஹிணீ நக்ஷத்ரத்தை நாம் அநுமானம் செய்வதில்லை. பின்னையோவெனில்-க்ருத்திகை உதயமாவதைக் கொண்டு ரோஹிணீ நக்ஷத்திரம் ஸமீபத்தில் உதயமாகப் போவதை அநுமானம் செய்கிறோம். தேச விசேஷத்தினால் ஸம்பந்தத்தையே உதயம் என்கிறது. இந்த ஸம்பந்தமானது ஒன்றல்ல பல உண்டு. ஆகவே வ்யாப்தி (நியதஸம்பந்தம்) யானது எந்த உதய வ்யக்திகளுக்கு அதாவது தேச விசேஷ ஸம்பந்தங்களுக்கு அறியப் பட்டிருக்கின்றதோ அந்த ஜாதியைச் சேர்ந்ததொன்றை ஹேதுவாகச் செய்து எதோடு நியதஸம் பந்தம் முன் அறியப்பட்டுள்ளதோ அந்த ஜாதியைச் சேர்ந்த மற்றொன்றையே அநுமானம் செய்கிறோம். ஆகவே வ்யாப்தியானது ஸாத்ய ஹேதுக்களுக்கு விசேஷித்து ஏற்படவில்லை. பொதுவாகவே ஏற்பட்டிருக்கிறது.

அப்படிக்கொள்ளாமல் வ்யாப்தியானது (நியதஸம்பந்தமானது) எந்த இரண்டு வ்யக்திகளுக்கு க்ருஹீதமாச்சுதோ அந்த வ்யக்திகள் இரண்டிலொன்றில் மற்றொன்றைப் பற்றிய

ஞானம் ஏற்படுவதாகக் கொண்டால் இந்தஞ் ஞானமானது, பூர்வம் அநுபவத்தினுல் ஏற்பட்டுள்ள ஸ்மரணமேயாகும், அநுமானமாகாது.

(பூ) ஆகிலும் புத்ரனுடைய குறலேக்கேட்டு புத்ரனே அநுமானம் செய்கிருேமே அது விசேஷதோத்ருஷ்டம் ஆகலாமே எனில். (ஸி) இங்கும் இப்பொழுது கேட்கப்படும் குறலேக் கொண்டு இது புத்ரனுடைய குறல் என்பதாக அநுமானமே ஏற்படுகிறது. இப்படி அனுமானம் செய்யப்பட்ட குறலேக் கொண்டு புத்ரனுடைய ஸன்னிதானத்தைப் பற்றிய அனுமானம் பிறகு ஏற்படுகிறதே அன்றி புத்ரனேப்பற்றிய அநுமானமில்லே. ஆகவே (வ்யாப்தி) நியதஸம்பந்தம் எவற்றிற்கு க்ருஹீதமோ அதோடு இந்த ஹேது ஸாத்யங்களுக்கு வேற்றுமையே ஏற்படுகிறது.

(பூ) ஆகிலும் தூரத்திலுள்ள ஒருவன், முன் கண்டுள்ள பர்வதசிகரத்தைப் பார்த்து அதே பர்வதத்தை அநுமானம் செய்கிருன். முன் வ்யாப்தியை அறியும்போது க்ருஹீதங்களான இரண்டு வ்யக்திகளில் ஒன்றைக் கொண்டே மற்றென்றுக்கு அநுமான மிது, ஆகவே இது விசேஷதோத்ருஷ்டம் என்னலாமே எனில்.

(ஸி) இது ஸரியன்று, இந்தஞ் ஞானமானது முன்பு பார்த்துள்ள பர்வத்தைப்பற்றிய ஸ்மரணமே என்பதாக எப்படியும் நிர்வாஹம் செய்யவேண்டும்.

அநுமானம் ஏற்படும் காலத்திலே பர்வதமானது இருப்பதாகவோ, அல்லது பர்வதமானது ருஜுவானது என்பதாகவோ இம்மாதிரியாக பர்வதத்தைக் காட்டிலும் மற்றென்றை அநுமானம் செய்வதாகக் கொண்டால் இந்த ஸாத்யவ்யக்திக்கு பூர்வம் ப்ரத்யக்ஷம் முதலிய அநுபவம் ஏற்படாமையாலே அவ்வநுபவம் ஏற்பட்டுள்ள காலவ்யக்தி முதலியதைக் காட்டில் சில பொழுது ஸாதிக்கப்படுமதாகிய காலவ்யக்தி முதலியது வேறுப்பட்டது என்பது ஸித்திக்கின்றது. ஆகவே இதுவும் ஸாமான்ய தோத்ருஷ்டமேயாகும் என்பதாக,

ஸ்ரீ ந்யாயபரிசுத்தி அநுமானத்யாயத்தில் வ்யாப்தி முதலியதைப்பற்றிய முதல் ஆஹ்னிகத்திற்கு விவரணம் ஸமாப்தம்.

——:(O):——

ஸ்ரீ:

ஸ்ரீமதே நிகமாந்த மஹாதேசிகாயநம:

# பரார்த்தாநுமான தூஷணம்.

அநுமான மானது ஸ்வார்த்தம் என்றும் பரார்த்தம் என்றும் இரண்டுவிதம் என்று விபாகம் செய்கிறார்கள் நையாயிகர் முதலியோர்சிலர். தனக்கு அநுமிதியை உண்டு பண்ணுமது ஸ்வார்த்தம். பிறருக்கு அநுமிதியை உண்டுபண்ணுமது பரார்த்தம் என்பதாக அவர்கள் அபிப்ராயம். அது தவறு. அநுமானம் எல்லாவற்றுமே ஸ்வார்த்தமேயாகும். ஏனெனில்ஹேதுவானது ஸாத்யத்தோடு நியதஸம்பந்தம் பெற்றிருப்பதையும். பக்ஷத்தில் ஸம்பந்தப் பட்டிருப்பதையும் எவனொருவன் அறிகிறானோ, அவனுக்கு அநுமிதியானது ஏற்படுகிறது. அந்த அநுமிதிக்குப் பிறகு ஏற்படக்கூடிய வ்யவஹாரம் முதலிய பலமும் அவனுக்கே ஏற்படுகிறது. ஆகவே அநுமானமானது ஸ்வார்த்தமே

ஆகிலும் மேல்நிரூபிக்கப் போகிற அவயவவாக்யங்களை மற்றொருவன் சொல்ல அதினால் பரம்பராக்மத்தில் மற்றொருவனுக்கு அநுமிதியானது உண்டாகிறது. ஆகவே இதையிட்டு பரார்த்தாநுமானம் என்றொரு விபாகம் கூடலாமே எனில் இங்கும் வாக்யத்தினால் ஸாக்ஷாத்தாக அநுமிதியானது உண்டாகவில்லை. பின்னை எப்படி எனில் இந்தவாக்யங்களால் மற்றொருவனுக்கு வ்யாப்திக் ஞானம் முதலியது உண்டாகி பிறகே அநுமிதியானது ஏற்படுகிறது. இதனால் அநுமிதியானது வ்யாப்திக் ஞானம் முதலியவற்றால் உண்டாகிறதென்பதாகுமே யன்றி வாக்யங்களால் உண்டானதாகமாட்டாது. மேலும் அந்த வாக்யங்களையும் ப்ரதிவாதி ஒருவன் சொல்லுமாகில் வாதிக்கு அவ்வாக்யங்கள் ப்ரமாண மன்றாகையாலே அநுமிதி ஏற்படமாட்டாது. ஆப்தன் சொல்லிய வாக்யங்களாக வைத்துக் கொண்டாலும் அவ்வாக்யங்களால் ஹேதுஸாத்யங்களுக்கு உள்ள நியதஸம்பந்தமாத்திரத்தை ஆப்தன் உபதேசம் செய்ய அதைக் கேட்டும் மற்றொருவன் அந்தவ்யாப்திக் ஞானத்தின் பேரில் தாமாகவே ஸாத்யத்தை அநுமானம் செய்யலாமே.

ஆகிலும் ஆப்தவாக்யத்தினால் வ்யாப்தி முதலிய வற்றைப் பற்றிய ஞானம் உண்டாகி அதின் பேரில் அநுமிதி ஏற்பட்டிருப்பதைக் கொண்டே பரார்த்தாநுமானம் என்பதாகில் ப்ரத்யக்ஷப்ரமாணம் சப்தப்ரமாணம் இவற்றையும் பரார்த்தமென்றும் இரண்டாக விபாகம் செய்யலாம். ஒருவன் ஒருவஸ்துவைப்பற்றி தனக்குப் ப்ரத்யக்ஷம் ஏற்பட்டிருப்பதைச் சொல்லியதின்பேரில் மற்றொருவன் அவ்வஸ்துவை ப்ரத்யக்ஷத்தினால் அறியக்கூடுமே. அல்லா ஒருவன் வார்த்தையைக் கேட்டு மற்றொருவன் சொல்ல அதனால் சாப்தபோதம் (சப்தத்தினால் உண்டாகும் ஞ்ஞானம்) உண்டாகு மாகையால் அவ்வோசில விஷயங்களில் ப்ரத்யக்ஷத்திற்கும் சப்தத்திற்கும் மூலப்ரமாணமாகிறது அந்த சப்தமேயன்றோ. ஆகையால் எல்லாப்ரமாணங்களுமே இரண்டுவிதங்கள். அவற்றில் சில ப்ரமாணங்களானவை பிறருடைய வாக்யங்களாலன்றிக்கே தமது காரணங்களாலேயே ஏற்படுகின்றன. இவை ஸ்வார்த்தங்களாகும். பிறர் வாக்யங்களாலே சில ஏற்படுகின்றன. இவை பரார்த்தங்கள் என்பதாக ப்ரத்யக்ஷம்முதலிய எல்லா ப்ரமாணங்களையும் இவ்வாறு இரண்டுவிதங்களாகப் பொதுவாக விபாகம் செய்ய வேண்டும் என்றதாகிறது.

தத்வரத்நாகரக்ரந்தத்திலும் ஸ்ரீபட்டபராசர் அதையேசொல்லியுள்ளார் அதாவது—

(ச்லோ) (க) ப்ரத்யக்ஷம் முதலிய ப்ரமாணம் எல்லாவற்றுமே ஒவ்வொன்றும் இரண்டு விதமாகும், சில ப்ரமாணங்கள், தாமாகவே ஏற்பட்டுள்ள காரணங்களால் உண்டாகிறன. பிறர்வாக்யங்களால் ஏற்பட்டுள்ள காரணங்களால் சில ப்ரமாணங்கள் உண்டாகிறன. இப்படி ப்ரமாணம் எல்லாவற்றுமே இரண்டு விதம்

(உ) ஆகவே ப்ரத்யக்ஷம் முதலியது இரண்டு விதமாகிருப் போலவே அநுமானமும் ஸ்வார்த்தம் என்றும் பரார்த்தம் என்றும் இரண்டுவிதம் (க) ப்ரத்யக்ஷத்திற்கும் சப்தத்திற்கும் ஏற்பட்டுள்ள காரணஸமுதாயங்களுக்கு மூலமாயுள்ள பிறர் வாக்யங்களைக் காட்டியாய் விட்டது.

(ந) மேலே வாதமார்கத்தை நிரூபிக்கப் போகுமிடத்திலும் அவற்றைக் காட்டப் போகின்றேன். அநுமானத்திற்கு மூல

மாயுள்ள பிறர் வாக்யம் இன்னது என்பதை இப்பொழுது சொல்லுகின்றேன். பிறருக்கு அநுமிதியானது உண்டாகவேண்டுமென்கிற எண்ணத்தோடு அநுமிதி உண்டாவதற்க்காகப் ப்ரயோகம் செய்யப்படும் வாக்யமே பரார்த்தாநுமானமாகும். அதுவே பிறர் அநுமதிக்கு உபாயமாகவும் ஆகிறது என்றுப்போல் லுள்ளது அந்த தத்வரத்னாகரவசனம்.

ஐந்துஅவயவ வாக்யங்களை நிரூபித்தல்

ஆக இவ்வாறாக அநுமிதியை உண்டு பண்ணுமதாயுள்ள வாக்யமானது ப்ரதிஞ்ஞை முதலிய ஐந்து அவயவங்கள் (அம்சங்கள்) உள்ளது,

(1) அவற்றில் மற்றவனுக்கு போதம் உண்டாகவேண்டுமென்கிற எண்ணத்தினால் ஸாத்யத்தோடு கூடியதாக பக்ஷத்தைத் தெரிவிக்கும் வாக்யத்தை ப்ரதிஞ்ஞை என்கிறது.

உதாஹரணம்— பர்வதமானது, அக்நியோடு கூடியது, என்பது,ஸாத்யத்திற்கு ஆதாரமாயுள்ள தொன்றில் ஸாத்யமாகிற தர்ம மிருப்பதை இந்த ப்ரதிஞ்ஞா வாக்யமானது காட்டுகின்றது என்கிறார்கள் பெரியோர்கள்,

(2) ஸாத்ய ஞானத்தை உண்டாக்குமதைத் தெரிவிக்குமதானவிபக்தி அதாவது ப்ரத்யயம், (விகுதி) அல்லது மற்றொரு பதத்தின் சேர்க்கை, இதோடு கூடி ஹேதுவைத் தெரிவிக்குமதான வாக்யத்தை ஹேது என்கிறது.

உதாஹரணம்— தூமம் இருப்பதிலிருந்து, தூம மிருப்பதனால், யாதொரு காரணத்தினால் இங்கு தூமம் இருக்கிறதோ என்றாப்போன்றவை யாகும். அல்லது, வஹ்னியில்லாவிடில் தூமமும் இருக்கக்கூடாது என்று ஆபாதனம். அதாவது ஆரோபணம் (இல்லாததொன்றை இருப்பதாகக் கொள்ளுகை) செய்து அவ்வழியாலே ஹேதுவைக் காட்டு மதான வாக்யம் அது என்றால் போலவும் உதாஹரணம் சொல்லலாம்,

(3) ஹேதுவிற்கு ஸாத்யத்தோடுள்ள ஸமீசீனவ்யாப்தியைக் காட்டி அதற்கு த்ருஷ்டாந்த மொன்றைத் தெரிவிக்கும் வாக்யத்தை உதாஹரணம் என்பது. அந்த வ்யாப்தியின் ரீதியையும்.

த்ருஷ்டாந்தத்தின் ரீதியையும் அநுஸரித்து அந்த உதாஹரண மானது அந்வயோதாஹரணம் என்றும் வ்யதிரேகோதாஹரணம் என்றும் வெவ்வேறாகிறது.

அவற்றுள் "எது தூமமுடையதோ அது அக்நியையுடையது உதாஹரணம் மஹாநஸம்" என்று ஹேதுவிற்கு ஸாத்யத்தோடு வ்யாப்தி, த்ருஷ்டாந்தம், இவற்றைத் தெரிவிக்குமது அந்வயோதாஹரணம் எது அக்நியையுடையதன்றோ அது தூமத்தோடு கூடியதன்று. மஹாஜலம் உதாஹரணம் என்பதாக ஸாத்யத்தின் அபாவத்திற்கு ஹேதுவின் அபாவத்தோடு வ்யாப்தியையும் அதற்கு த்ருஷ்டாந்தத்தையும் தெரிவிக்குமது வ்யதிரேகோதாஹரணம்

எது முன் சொல்லிய ஹேதுவோடு கூடியதோ அது முன் கூறிய ஸாத்யத்தோடும் கூடியது. எது முன் சொல்லிய ஸாத்யத்தோடு கூடியதன்றோ அது முன் சொல்லிய ஹேதுவோடு கூடியதுமன்று. இவற்றுக்கு வாதி ப்ரதிவாதிகள் இருவரும் இசைந்தது த்ருஷ்டாந்தம் என்பதாகப் பொதுவாகவும் உதாஹரணம் கொள்ளுகிறார்கள்.

இங்கு எது எது என்பதாக இரண்டு முறை ப்ரயோகம் செய்யவேண்டு மென்பதில்லை. ஹேது ஸாத்யங்கள் உள்ள எல்லா ஸ்தலங்களையும் குறிப்பிடுவதற்காகவன்றோ எது எது என்பதாக இரண்டு முறை ப்ரயோகிப்பதாகக் கொள்ளவேண்டும்.! எது ஹேதுவை உடையதோ அது ஸாத்யமுடையது என்றும் எது ஸாத்யத்தோடு கூடியதன்றோ அது ஹேதுவோடு கூடியதன்று என்றும் பொதுவாகச் சொல்லுவதிலேயே அப்படிப்பட்ட எல்லா ஸ்தலங்களையும் குறிப்பிட்டதாகிறதே - பசுவைக் காலால் தொடக் கூடாதென்றால் எல்லாப்பசுக்களையும் காலால் தொடக்கூடாதென்பதாகிற தன்றோ. அதைப் போலவே எது எது என்று இரண்டு முறை ப்ரயோகம் வேண்டியதில்லை மந்தபுத்தியுள்ள ஒருவனுக்குத் தெளிவிப்பதற்காக இரண்டு முறை ப்ரயோகம் செய்வதென்பது.

(ச) உதாஹரணத்தில் காட்டியுள்ளதை த்ருஷ்டாந்தமாகச் செய்து ஸாத்யத்தோடு நியதஸம்பந்தம் பெற்று ஹேதுவானது பக்ஷத்திலே இருப்பதாகக் காட்டும் வாக்யத்தை உபநயம் என்கிறது. அதுவும் உதாஹரணம் போலவே இரண்டுவிதமாகும்.

"இதுவும் அதைப் போலவே தூமமுடையது" என்பது அந்வயோபநயம் "இது அதைப்போலே தூமமில்லாததன்று" என்பது வ்யதிரேகோபநயம்

(5) ஹேதுஇருப்பதை முன்னிட்டுக்கொண்டு பக்ஷத்திலே ஸாத்யம் இருப்பதை முடிக்கும் வாக்யத்தை நிகமநம் என்கிறது. நிகமனத்தில் முன்கூறிய ரீதியில் அந்வயநிகமனம் வ்யதிரேக நிகமனம் என்று விபாகம் கண்டு கொள்வது. உதாஹரணம்—ஆகையால் இது அக்னியையுடையது என்று அந்வயநிகமனம், இது அக்னியில்லாத தன்று என்பது வ்யதிரேக நிகமனம் என்று விபாகம்

ஐந்து அவயவங்க்களின் நியதி இல்லாமையை நிரூபித்தல்

இந்த ஐந்து அவயவவாக்யங்களையும் ப்ரயோகம் செய்ய வேண்டுமென்கிறார்கள் நையாயிகர்? உதாஹரணம் வரையிலுள்ள முதல்மூன்றையோ அல்லது உதாஹரணம் முதலாக உள்ள பின்னிட்ட மூன்றையோ ப்ரயோகம் செய்யவேண்டும் என்கிறார்கள் மீமாம்ஸகர்? உதாஹரணம் உபநயம் இவ்விரண்டை மாத்திரமே ப்ரயோகிக்கவேண்டும் என்பதாக பௌத்தர் சொல்லுகிறார்கள். நாமோ இப்படிப்பட்ட நியதி ஒன்றும் இல்லை என்கிறோம். அவரவர் சொல்லும் நியமம் அவரவர் ஸித்தாந்தமாகிறாப் போலே அந்த நியமமில்லை என்பதும் ஸித்தாந்தமாகலாம். பலர் இசைவதன்றோ ஸித்தாந்தம் என்பது. அது நியமபக்ஷத்தில் போலவே நமது அநியமபக்ஷத்திலும் கூடும். அவயவங்களை நியமமன்றி ப்ரயோகம் செய்திருப்பதை ஸ்ரீ பாஷ்யம் முதலியவற்றில் காண்கிறோம். சிலவிடங்களில் ஐந்து அவயவங்களோடு கூடியதும் சிலவிடங்களில் மூன்று அவயவங்களோடு கூடியதும் சிலவிடங்களில் அவயநிரூபணமில்லாததும் சிலவிடங்களில் ஒரு வ்யாப்தியோடு கூடியதும் சிலவிடங்களில் இரண்டுவ்யாப்திகளைக் காட்டுமதாயும் இவ்வாறாக நியமமன்றி ஸ்ரீபாஷ்யாதிகளில் ப்ரயோகமிருப்பதைக் காண்கின்றோம். வாதி ப்ரதிவாதிகள் ஒருவருக்கொருவர் ஏற்பாடு செய்து கொண்டதற்கு ஏற்றவாறு அவரவர் விரும்பிய வ்யவஹாரங்களை அநுமதி செய்து வாதம் செய்யலாம் என்பதற்கு இப்படி பாஷ்யத்தில் பலவிதமாக நியதியன்றிக்கே அவயவயவங்களை ப்ரயோகம் செய்திருப்பதுஸூசகமாகிறது?

ப்ரதிவாதி இசைந்த ரீதியிலே வாதம் நடத்துவதை மதாந்தரஸ்தரும் கொண்டிருக்கிறார்கள். பிசாசங்களுக்கு உரிய பாஷையைக் கொண்டே பிசாசங்களுக்குப் பதிலுரைக்க வேண்டும் என்பதாக லோக நீதியை அநுஸரித்து இப்படி எல்லோரும் கொண்டது? ஆகையாலும அவயவங்கள் இத்தனை தான் ப்ரயோகிக்கப்படவேண்டுமென்று நியமமொன்றுமில்லை. மந்தபுத்திகளுக்கு விஸ்தாரத்தோடு ஐந்து அவயவங்களையும, நடுத்தர புத்திமான்களுக்கு மூன்று அவயவங்களையும் ஸூக்ஷ்மபுத்திகளுக்கு இரண்டு அவயவங்களையும் நீண்டுங்குறுகியும் இப்படி ப்ரயோகிப்பது யுக்தமாகிறது.

ஹேதுவிற்கு ஸாத்யத்தோடு வ்யாப்தியானது உதாஹரணத்தினாலும் இந்த ஹேதுவிற்கு பக்ஷஸம்பந்தமானது உபநயத்தினாலும் ஸித்தித்து விடுவதால் அவ்விரண்டு அவயவங்களே போதுமானவையே ஆகிலும் சொல்லவேண்டிய விஷயம் நன்றாக விளங்குவதற்காக ப்ரதிஜ்ஞை ஹேது உதாஹரணம் இம்மூன்றையுமோ அல்லது உதாஹரணம் உபநயம் நிகமநம் இம்மூன்றையுமே ப்ரயோகம் செய்யவேண்டும். ப்ரக்ருதத்தில் விவாதத்திலுள்ள ஸாத்யமானது இன்னது என்பதாகத் தெளிவிக்காமையானது கூடாதன்றோ.

நையாயிகர் சொல்லுவதாவது— ப்ரதிஜ்ஞை, ஹேது, உதாஹரணம், இம்மூன்றையும் ப்ரயோகம் செய்த பிறகும் இந்த ஹேதுவானது பக்ஷத்திலே இல்லை என்பதாக ஸ்வரூபாஸித்தி என்கிற தோஷமும் ஹேது இருந்தும் ஸாத்யம் வேண்டாவே என்பதாக அந்யதாஸித்தி என்கிற தோஷமும் ஏற்படுமாகையால் அதை விலக்குவதற்காக உபநயவாக்யத்தைப் ப்ரயோகம் செய்யவேண்டும். நிகமநத்திலே ஹேது, ஸாத்யம், ஆகிய இரண்டு அம்சங்கள் இருக்கின்றன. அவற்றில் ஹேது அம்சத்தினால் ஸித்தஸாதனம் என்கிற தோஷத்திற்குப்பரிஹாரம் ஏற்படுகிறது. பிறர் நிர்விவாதமாய் இசைந்ததை ஸாதிப்பது ஸித்தஸாதனம். க-பக்ஷத்தில் ஸாத்யம் இல்லாமை என்பது (ஙா) பாதம். இந்தபா(ஙா)த தோஷத்தை நிவர்த்திப்பிக்கிறது ஸாத்யாம்சம் என்கிறார்கள்.

இவர்கள் சொல்லுகிறபடி உபநயம் முதலியதால் அஸித்தி முதலியவற்றிற்குப் பரிஹாரம் கொள்ளுவதற்கு யாதொரு ஆதாரமும் காணும். அந்த வாக்யங்களால் அஸித்தி முதலிய தோஷங்களுக்குப் பரிஹாரம் ஏற்படுவதாகக் கொள்ளுமவர்கள் பிசாசத்தை ஓட்டுவதற்கு மந்திரத்தைச் சொல்லுவதைப் போல் இதை எண்ணுகிறார்கள். முன்கூறிய அஸித்தி முதலிய தோஷங்கள் ஒன்றும் இல்லை என்பது ப்ரதிஜ்ஞை ஹேது இவைகளாலேயே ஏற்பட்டுவிட்டதே? அப்படிக்கொள்ளாமல் அந்ததோஷங்களுக்குப் பரிஹாரத்தை ஸ்பஷ்டமாக்குவதற்க்காக உபநயம் முதலியவை பிரயோகிக்குப் படவேண்டுமென்றால் இன்னும் ஸ்பஷ்டமாக இது அஸித்தி தோஷமுடையதன்று பா(பா)தம் என்கிற தோஷமுடையது மன்று என்பதாகச் சொல்லவேண்டிவரும்? இந்த ஹேதுவானது துஷ்டமானதன்று. துஷ்டம் என்பதற்கு வேண்டிய லக்ஷணம் ஒன்று மில்லாமையால் என்பதான வாக்யத்தினாலேயே எல்லா தோஷங்களுமில்லை என்று ஏற்பட்டுவிட்டதனால் தோஷமில்லாமையைக் காட்டுவதற்க்காக உபநயம் முதலியதை ப்ரயோகிப்பதானது சொன்னதையே சொல்லுவதாகவுமாகிறது. ஸ்ரீஆளவந்தார் ஸ்ரீபாஷ்யகாரர் முதலியோர் ஐந்து அவயவங்களோடும் ஹேதுக்களை ப்ரயோகம் செய்திருக்கிறார்களே எனில்— அது உண்மையே, ஆகையினாலே தான் நாமும் நியமமில்லை என்கிறோம். அவர்களே இரண்டு மூன்று அவயவங்களோடும் ஹேதுக்களை ப்ரயோகம் செய்திருக்கிறார் களன்றோ.

மேலும் சில வாதக்ரந்தங்களில் சொல்லியிருப்பது மாத்திரத்தைக் கொண்டே அப்படியே எப்பொழுதும் வ்யவஹாரம் செய்ய வேண்டும் என்பதாக நியமமில்லை, "ஜீவாத்மாவானவன் தனக்குப் பிரகாசிக்கிறான்" என்றாப் போலுள்ள ஸ்தலத்தில் அந்வய வ்யாப்தி வ்யதிரேக வ்யாப்தி ஆகிய இரண்டு வ்யாப்திகளையும் காட்டியுள்ளார் ஸ்ரீபாஷ்யத்திலே? அதனாலேயே அந்த இரண்டு வ்யாப்திகளையும் எப்பொழுதுமே அவச்யமாகக் காட்ட வேண்டும் என்பதாகக் கொள்ளவேண்டிவருமே

ப்ரதிஜ்ஞை முதலியவற்றைப்பிரயோகிப்பதில் சிலநியமமும் கொள்ளுகிறார்கள். நையாயிகர் பர்வதமானது அக்னியோடு

எதுபக்ஷவுக்கு ஸமானமானதோ அது கவயம் என்கிறபதத்தின் பொருள். உதாஹரணம் ஏற்கனவே ஆப்தன் நமக்குக் காட்டியுள்ள கவயம்— இந்தகவயமும் கோவிற்கு ஸமானமானது. ஆகவே கவயம் என்கிற பதத்திற்கு இதுவே பொருள்" என்பதாகச் சொல்லிவிட்டு.

(ச்லோ) ஹேதுவிற்கு ஸாத்யத்தோடு நியதஸம்பந்த மாகிய வ்யாப்தியை த்ருஷ்டாந்தஸ்தல மொன்றில் அறியவேண்டுமானல் கட்டாயமாக த்ருஷ்டாந்தத்தையும் காண்பிக்கவேண்டும். ச்ருதிஸ்ம்ருதி முதலிய ஆகமத்தினுல் அந்தவ்யாப்தியானது ஸித்திக்குமாகில் வ்யாப்தியை அறிவதற்காக த்ருஷ்டாந்த மொன்று காட்ட வேண்டியதில்லை. தூமமிருக்குமிட மெங்கும் அக்னியிருக்கும் என்று லௌகிகஆப்த ப்ரயோகத்திலே த்ருஷ்டாந்தம் காட்டவேண்டும் என்ருப்போல் சொல்லியிருக்கிருர்.

ப்ரஞ்ஞா பரித்ராணம் என்னும் க்ரந்தத்திலோ வெளில் வரத விஷ்ணுமிச்ரர் அருளிச் செய்ததைப் பின்பற்றி இவ்வாறு சொல்லப் பட்டிருக்கிறது.

(ச்லோ) பிறருக்கு அநுமிதி ஏற்படுவதற்காக அநுமானப் பிரயோகம் செய்யுமிடத்தில் மூன்று அவயவங்களை பிரயோகிக்க வேண்டும். ப்ரதிஞ்ஞை, ஹேது, உதாஹரணம், என்பதாக அம் மூன்று அவயங்கள் என்று மதம்" என்ருப்போல் அவ்வசனமாகும்.

ஆகவே ஹேதுவிற்கு ஸாத்யத்தோடு நியதஸம்பந்தமும், பக்ஷஸம்பந்தமும் அவசியமானது, அவற்றைத் தெரிவிப்பதற்கு எந்தவழி உபயோகமுள்ளதோ அப்படி ப்ரதிஞ்ஞை முதலியவற்றை மாற்றியும் பிரயோகம் செய்யலாம், இன்னவழியில் தான் பிரயோகம் செய்ய வேண்டும் என்பதாக நியமம் செய்து கொண்டு வாதம்செய்யுமிடத்தில் நியமத்தை அநுஸரித்தே ப்ரதிஞ்ஞை முதலியவற்றை பிரயோகம் செய்ய வேண்டுமென்று நமது ஸித்தாந்தத்தின் ரஹஸ்ய மாகும்.

---

ஸ்ரீ:

# வாதத்தை நிரூபித்தல்.

விசாரம் செய்யவேண்டிய விஷயத்தைப் பற்றி வாதி ப்ரதிவாதிகள் செய்யும் ப்ரமாணோபந்யாஸரூபமாயுள்ள வாக்ய பரம்பரையை கதை என்கிறது. ஜயிக்கவேண்டும் என்கிற ஆசையன்றிக்கே செய்யுமது என்றும் ஜயிக்க எண்ணங்கொண்டு செய்யுமது என்றும் அந்தக் கதையானது இரண்டுவிதமாகும். ஜயத்தில் இச்சையில்லாதவன் செய்யும் கதையை வாதம் என்கிறது, வாதம் என்கிற சப்தமானது கதை எல்லாவற்றிற்குமே பொதுவான சப்தம், விசேஷித்துக்கதா விசேஷத்தையும் அது சொல்லும். அந்த வாதத்திற்கு ஸ்ரீமன்னாத முதனிகள் ந்யாய தத்வம் என்கிற க்ரந்தத்திலே ஸம்யோகாதிகரணத்திலே லக்ஷணம் சொல்லியிருக்கிறார் அதாவது— மற்றொருவனுக்குத்தான் உபதேசம் செய்யும்பொழுது தனக்கு அந்த அர்த்தத்தைப் பற்றி நிச்சயம் வேண்டுமன்றோ? அதேரீதியில் நிச்சயம் செய்யப்பட்ட அர்த்தத்தைப் பற்றியதாகச் செய்யும் வாதிகளின் வ்யவஹாரத்தை வாதம். என்கிறது என்று, இதன்கருத்தாவது— ப்ராமாணிகங்கள் என்றும் யுக்தியோடு கூடியவை என்றும் எண்ணப்பட்ட ஹேதுக்களைக் கொண்டு தீர்மானம் செய்துள்ளதோர் அர்த்தத்தைப் பற்றி வாதிப்ரதிவாதிகள் செய்யும் வ்யவஹாரமே வாதம். சிஷ்யனும் ஆசாரியனும் செய்யும் வ்யவஹாரம் போன்ற வ்யவஹாரமிது. என்பதாக ந்யாயதத்வ வாக்யத்தின் கருத்து. அந்தவாதத்தில் இரண்டு அம்சங்கள் உண்டு. தன்னுடைய பக்ஷத்தை ஸ்தாபனம் செய்வது ஒன்று. பிறர்பக்ஷத்தை தூஷிப்பது மற்றொன்று.

சிலர் வாதத்தில் இன்னும் மூன்று அம்சங்களையும் சேர்த்து வாதம் ஐந்து விதம் என்கிறார்கள். அந்த அம்சங்களாவன— (1) தன்னுடைய பக்ஷத்திற்கு ஸாதகமானதை ஸமர்த்தனம் செய்தல் (2) ப்ரதிவாதிபக்ஷத்திற்கு பாதகமான ஹேதுவை ஸ்தாபனம் செய்தல் (3) பிரதிவாதி பக்ஷத்தில் தான்காட்டியுள்ள தோஷத்தை அவன் பரிஹாரம் செய்து விட்டால் அந்த பரிஹாரத்திற்குமேல் தூஷணம் சொல்லி அதை நிராகரணம் செய்தல்.

என்பதாக அம்மூன்று அம்சங்கள் என்கிறார்கள். அது ஸரியன்று இப்படியாகில் தன்னுடைய பக்ஷத்திலே பிரதிவாதியின் தூஷணத்தை நிராகரணம் செய்தல், அந்த நிராகரணத்தை ஸ்தாபனம் செய்தல். என்றப் போலுள்ளதையும் சேர்த்து இன்னும் அநேக அம்சங்களை வாதத்தில் இசைய வேண்டிவருமே. தன் பக்ஷத்தை ஸ்தாபனம் செய்வது முதலிய முன்காட்டியுள்ள இரண்டு அம்சங்களிலேயே இவை அடங்கியவை என்பதாகக் கொள்ளில் அப்பொழுது அநேரீதியில் தன்பக்ஷத்தை ஸ்த்தாபித்தல், பரபக்ஷத்தை நிராகரித்தல், ஆகிய இரண்டு அம்சங்களிலே யே சிலர் சொல்லும் முன்காட்டிய மூன்று அம்சங்களையும் சேர்த்து இரண்டு அம்சங்களை வாதத்தில் என்பதாகக் கொள்ளலாம்.

இந்தவாதமானது உண்மையை தீர்மானிப்பதற்காக ஏற்பட்டுள்ளது. இதில் புத்தி பூர்வகங்களான தோஷங்களோடு கூடிய வாக்யங்கள் கூடாது. பிரதிவாதி காட்டியுள்ள மற்ற தூஷணங்களை வாதி இசையவேண்டும். இப்படி வாதத்திலே நியமமுண்டு. ஜயிக்கஎண்ணத்தினால் செய்யப் படுமதாகிய மற்றொரு கதை (வாதம்) யிலேயென்னில் புத்திபூர்வகமாயும் தோஷமுள்ளவாக்யத்தை பிரயோகம் செய்யலாம். ஏனெனில்—வேறுவழியில்லாவிடில் பிரதிவாதியை ஏமாற்றியாவது ஒருக்கால் தனக்கு ஜயம் ஏற்படலாம் என்றோ அல்லது இரண்டாவது பக்ஷங்களும் ஸமங்களே என்பதைக் காட்டிவிடலாம் என்றோ எண்ணத்தினால் வாதியானவன் துஷ்டவாக்யங்களையும் புத்தி பூர்வகமாகவும் பிரயோகிக்கலாம்.

ஜயத்தில் அபேக்ஷையோடு செய்யும் கதையினது (இரண்டாவது பிரிவு) இரண்டுவிதம். ஜல்பம் என்றும் விதண்டை என்றும் அந்தப் பிரிவு. அவற்றில் வாதி, பிரதிவாதி, ஆகிய இருவருடைய பக்ஷங்களைச் சொல்லுவதும் பரஸ்பரம் அவற்றை நிராகரணம் செய்வதுமாக உள்ளகதையை ஜல்பம் என்கிறது. வாதியானவன் தன் பக்ஷத்தை உபந்யாஸம்செய்ய பிரதிவாதியானவன் தன்பக்ஷத்தை ஸ்தாபனம் செய்யாமல் வாதியின் பக்ஷத்தை நிராகரணம் செய்வதுமாத்திரத்திலே நின்று செய்யும் வாதத்தை விதண்டை என்கிறது.

விதண்டாவாதத்திலும் இரண்டு பிரிவு உண்டு. ஜயத்தில் ஆசையுள்ளவன் செய்யுமது என்றும், ஜயாபேக்ஷயில்லாதவன் செய்யுமது என்றும் அந்தவிபாகம் என்கிறார்கள் சிலர். அது சரியன்று, ஜயாபேக்ஷயில்லாதவன் பரமத நிராகரணம் செய்த பிறகு தன்பக்ஷத்தை ஸ்தாபனம் செய்வது என்கிற அடுத்த வ்யாபாரமொன்றைக் கைக்கொள்ளாவிடில் அவன் அபேக்ஷிக்குமதாயுள்ள தத்வநிர்ணயம் (உண்மையைப் பற்றிய நிச்சயம்) ஏற்படமாட்டாதே. ஆகவே அவன் பரபக்ஷத்தை நிரஸனம் செய்வதோடு நிற்கமுடியாது. விதண்டாவாதம் செய்யுமிடத்தில் அப்படி அன்று. அவனுக்கு தத்வநிச்சயம் அபேக்ஷிதமன்று. வாதியை ஜயிப்பதே உத்தேச்யம். அந்த ஜயமானது வாதி பக்ஷத்தை நிரஸனம் செய்தமாத்திரத்திலேயே ஏற்பட்டுவிடுகிறது. பரமதத்தை தூஷித்துவிடுகிறேன் என்பதாக அவன் இசைந்து விதண்டாவாதத்தில் இறங்குகிறானாகையால் அவன் இசைந்துள்ள ஜயமானது அவ்வளவாலேயேகூடுகிறது, தத்வநிர்ணயத்திற்காகச் செய்யும்வாதத்திலே ப்ரதிவாதியின்பக்ஷத்திலே பா(பா)தம் என்கிற தோஷத்தை வாதி காட்டுமிடத்திலே அதனாலேயே தன்னுடைய பக்ஷமும் ஸ்தாபிக்கப் பட்டதாகிறது. (உதாஹரணம்—பர்வதத்தில் அக்னியிருக்கிறது என்பது வாதியின் பக்ஷம். இல்லை என்பது ப்ரதிவாதம், அதற்கு பாதமாவது இல்லை என்பதை இல்லை செய்தல் அதாவது அக்னியிருக்கிறது என்றதாகிறது) ஆகவே தத்வநிர்ணயரூபமான ப (ஃ) லமானது பரபக்ஷத்தை நிராகரணம் செய்வதினாலேயே ஏற்படுவதாய் மறுபடியும் தன் பக்ஷத்தை நிரூபணம் செய்யவேண்டியதில்லை. தன்பக்ஷத்தை ஸ்தாபனம் செய்வதற்காகவும் மற்றொரு முறை அதேபிரமாணத்தைக் காட்டுவதில் ப (ஃ) லம் யாதொன்றும் இல்லையே. பரபக்ஷத்தை பாதிப்பதற்காக வாதி பிரமாணத்தைக் காட்டும் பொழுது அதைஸ்த்தாபித்து அதற்கு யுக்திமுதலிய வற்றையும் காட்டியன்றோ தான்காட்டியுள்ள பிரமாணத்தை ஸ்தாபனம் செய்திருக்கிறான். தன்பக்ஷத்தை ஸ்தாபனம் செய்ய வேறு பிரமாணம் ஒன்றும் அபேக்ஷிதமன்றே. ஆகவே மறுபடி அந்த ப்ரமாணத்தை அவன் தன்பக்ஷத்தை ஸ்தாபிப்பதற்காக காட்ட வேண்டியதில்லை. விதண்டாவாதம் செய்யுமிடத்தில் தன்னுடைய பக்ஷத்திற்கு யுக்தி ஒன்றுங்கிடையாது. ஆகவே பரமத நிரா

கரணமாத்திரமே உள்ளது. வாதஸ்த்தலத்திலோ வெனில் பரமத நிராகரணத்திற்காகக் கொண்ட யுக்தியே தன்மதத்திற்கு அநுகூலமாவதால் வேறுபிரமாணம் காட்டவேண்டியதில்லை என்பதாக அபேக்ஷையில்லாமையால் வேறுபிரமாணம் காட்டாமல் ஓய்வு அடைகிறுன். ஆகவே வாதமும் விதண்டையும் ஒன்றுக மாட்டாது, மந்தபுத்தியுள்ள ஒருவன் "என்பக்ஷம் பாதிதமானுலும் உன்பக்ஷத்திற்கு பிரமாணம்யாது" என்பதாக கேட்டால் அவனுக்காக தன்பக்ஷத்திற்கு வேண்டிய பிரமாணத்தையும் இவன் நிரூபிக்க வேண்டுமே. விதண்டாவாதத்திலே அப்படியல்லாமையால் இரண்டிற்கும் வேற்றுமையுண்டு.

ஜல்பத்திலோவெனில் பிரதிவாதி பக்ஷத்தை பா (பா) திப்பதற்க்காக காட்டியுள்ள பிரமாணத்தையே தன்பக்ஷத்தை ஸ்தாபனம் செய்வதற்காகவும் மறுபடியும் காட்டவேண்டும் என்கிற நியதிஉண்டு, எனெனில்— மறுபடியும் அந்த பிரமாணத்தை வாதிகாட்டுமிடத்தில் ஏதோவொரு விதமாக வார்த்தையில் ஏற்றத்தாழ்வு முதலிய தோஷம் ஏற்படக்கூடுமன்றே அது இல்லாவிடில் குணமும் அதனுல் ஜயமும். அப்படிதோஷமுள்ளதாகில் அபஜயமும் எற்படுமாகையால் மறுபடி அந்தபிரமாணத்தைக் காட்ட வேண்டிய நியதிஉண்டு. "வாதஜல்பவிதண்டாபி:" என்பதாக வாதம ஜல்பம் விதண்டை இவைகளை ஸ்ம்ருதியிலும் சொல்லியிருப்பதால் இப்படி கதை (வாதம்) மூன்றுவிதம் என்பது பிரமாணஸித்தமும் ஆகிறது.

சிலர் சொல்லுவதாவது— வாதி பிரதிவாதிகள் முறையே விதண்டாவாதம் செய்யுமிடத்தில் வாதியானவன் தன்பக்ஷத்தை ஸ்தாபிப்பதாகில் பிரதிவாதியானவன் அதை நிரஸனம் செய்கிறுன். பிரதிவாதியானவன் தன்பக்ஷத்தை ஸ்தாபிப்பதாகில் வாதிஅதை தூஷணம் செய்கிறுன். இப்படிமுறையே விதண்டையானது இரண்டு இடத்திலும் மாறுபடுகிறது. இது ஒரே விதண்டையாகமாட்டாது. இதையே ஜல்பம் என்கிறது, விதண்டையைக் காட்டிலும் ஜல்பம் என்பது வேறுஅன்று என்பதாக சிலர் சொல்லுவது. ஆகிலும் அந்தக்ரமத்திலேயே விதண்டை வேறுபட்டிருப்பதால் கதையை (வாதத்தை) மூன்றுவிதமாக விபாகம் செய்தது உபபன்னமே.

ஜல்பம் விதண்டை இவற்றிற்கும் லக்ஷணத்தை ந்யாயதத்வத்தில் ஸம்யோகாதிகரணத்திலே ஸ்ரீமன் நாதமுனிகள் சொல்லியிருக்கிறார் 'தன்னுடைய பக்ஷமானது பிரமாணம் ப்ரதிவாதியின் பக்ஷமானது அப்ரமாணம் என்பதாக நிச்சயம் செய்வதற்கு உறிய வ்யவஹாரத்தை ஜல்பம் என்கிறது. ப்ரதிவாதி பக்ஷம் அப்ரமாணம் என்பதை நிச்சயம் செய்வற்காக மாத்திரம் ஏற்படும் வாதத்தை விதண்டை என்கிறது என்பதாக அந்தக்ரந்தம்'.

ஸ்ரீமத் கீதாபாஷ்யத்தில் 'வாத: ப்ரவததாமஹம், என்கிற விடத்தில் 'ஜல்பம் விதண்டை முதலியவற்றை உபயோகிப்பவர்களின் வாதங்களுள் உண்மையை நிச்சயம் செய்வதற்காக யாதொரு வாதமானது ஏற்படுகின்றதோ அந்த வாதம் நான், என்பதாகவிவரணம் செய்திருப்பதால் கதைகள் மூன்றும் காண்பிக்கப் பட்டது. "விப்ரம் நிர்ஜித்யவாதத:, நவிக்ருஹ்யகதாம் குர்யாத்" என்றுப்போலுள்ள ப்ரமாணங்களால் ஜல்பம், விதண்டை, இவற்றை நிஷேதம் செய்திருப்பதானது சிஷ்டர்களான மஹான்களிடத்தில் அவற்றை உபயோகம் செய்யக் கூடாது என்கிற அபிப்ராயத்தினாலே என்பதாக இதனால் தெரிவிக்கப்பட்டது! ஒரு ஸமயம் மதாந்தரஸ்தரின் மதத்தை நிரஸனம் செய்வதற்காக ஜல்பவிதண்டைகளையும் உபயோகிக்க வேண்டுமன்றோ. அப்படியே சாஸ்திரத்தினால் ஏற்படும் தத்வநிர்ணயத்தைக் காப்பாற்றுவதற்காக ஜல்பம் விதண்டை இவற்றைப் பிரயோகம் செய்யவேண்டும். விதையினால் உண்டாகும் முளையைக்காப்பதற்கு முள்வேலி கட்டுவது போன்றது இது, என்பதாக கௌதம ஸூத்ரத்திலும் சொல்லியிருக்கிறது.

## வாதத்திற்கு உதவுமவற்றை நிரூபித்தல்

இனி வாதத்திற்கு வேண்டிய அம்சங்களாவன—(1) ஸபையோரையும் ஸபைத்தலைவரையும் ஏற்படுத்தல் (2) இன்னார்வாதி. இன்னார் ப்ரதிவாதி என்பதாகத் தீர்மானித்தல் (3) வாதம் ஜல்பம் விதண்டை இவற்றுள் இதையே பின் பற்றுவது என்பதாக நிர்ணயம் செய்தல் (4) விவாதம் செய்யவேண்டிய விஷயம் இன்னது என்பதாக நிஷ்கர்ஷம் செய்தல் என்பதாக அந்த அம்சங்கள் நான்கேயாகும். வரதவிஷ்ணுமிச்ரர் அரு

ளிச் செய்வதாவது— ஜல்பம் எனும் வாதமானது நான்கு அங்கங்களோடு கூடியது. அந்த அங்கங்களாவன— (1) வாதி (2) ப்ரதிவாதி (3) ஸபாநாயகன் (4)ஸபையோர். என்பதாக! முன்கூறிய வாதம் ஜல்பம் விதண்டை இம்மூன்றுக்குள் இன்னமுறையே ஆச்ரயித்து இன்னவிஷயத்தை விசாரிப்பது என்கிற நிர்மானமின்றி வாதி ப்ரதிவாதிகளின் வாதத்திற்கு இடமில்லாமையால் வாதி ப்ரதிவாதி வ்யவஸ்தையிலே நாம் முன்கூறிய மூன்றாவது அம்சமும் நான்காவது அம்சமும் அடங்கியுள்ளது என்பதாக ஆசார்யர் திருவுள்ளம் என்க. ஜயத்தில் அபேக்ஷையன்றிக்கே தத்வநிர்ணயம் ஒன்றையே உத்தேசித்து செய்யப்படுமதாகிய வாதத்தில் ஸபையோர் முதலியவர்களை ஏற்பாடு செய்யவேண்டிய ஆவச்யகமில்லை. வார்த்தைப் பிறழ்வு முதலியவை அந்த வாதத்தில் புத்திபூர்வகமாய் ஏற்படமாட்டாதன்றோ. ஜயாபேக்ஷையில்லாத சிஷ்யாசார்யர்களும் ஸஹாத்யாயிகளும், சிக்ஷைமுதலிய அங்கங்களோடு வேதாத்யயநம் செய்த சிஷ்டரும். கேவலவேதாத்யாயிகளாய் சாஸ்த்ரார்த்தத்தைத் தெளிந்து அநுஷ்டானம் செய்வதனால் ஏற்படும் ப்ரயோஜனத்தை விரும்புபவர்களுமன்றோ அந்த வாதத்தில் அதிகாரம் பெற்றவர்கள். தற்செயலாய் ஸபையோர் சேர்ந்தால் அவர்களை விலக்க வேண்டியதில்லை. ஸபாநாயகனை ஏற்படுத்துவது என்பது இந்த வாதத்திற்கு வேண்டியதேயில்லை. இன்னொருக்கு ஜயம் என்பதான ஒரு ப்ரயோஜனத்தைத் தெரிவிப்பதற்காகவன்றோ சபாநாயகனை ஏற்பாடு செய்யவேண்டும் ஜயத்திலே இவர்களுக்கு அபேக்ஷையில்லாமையால் சபாநாயகன் வேண்டியதில்லை! அபிமானமும் த்வேஷமும் இல்லாதவர்களாய் மூன்றுக்குக் குறையாமல் ஒற்றைப் பட்டகணக்கிலே ஸபையோரை ஏற்படுத்தவேண்டும். இவர்களுக்கு அபிப்ராயபேதம் ஏற்படுமிடத்தில் பலர் சொல்லுவதையே தீர்மானமாகக் கொள்ளவேண்டியதாகையால் ஒற்றைப் பட்டவர்கள் வேண்டுமென்றது. மிகவும் ப்ராஜ்ஞனாயுள்ள ஒருவனும் போதுமானதே!

(பூ) இன்னது ஸித்தாந்தம் என்பதாக வ்யவஸ்தையும் வாதத்திற்கு அவச்யம் அபேக்ஷிதமாச்சுதே, ஆகவே அங்கங்கள் நான்கு தான் என்பது எப்படி? (ஸி) இவ் ஆக்ஷேபம் ஸரியே ஆகிலும் விவாதம் செய்யவேண்டிய விஷயம் இன்னது என்ப

தாக முன் சொல்லியுள்ள அங்கத்திலேயே இதுவும் அடங்கியது. ஸித்தாந்தம் இன்னது என்பதாக வ்யவஸ்த்தையன்றி இன்னது விஷயம் என்கிற நியமம் கூடாதன்றே. ஆகவேதனியாக இதைச் சொல்லவில்லை. பல ஸித்தாந்தங்களில் ஒப்புக் கொண்ட விஷயத்தை விவாதிக்குமிடத்தில் 'இன்ன ஸித்தாந்தத்தின்படி விவாதிப்பது, என்பதாக வ்யவஸ்தையும் வேண்டும், இல்லாவிடில் ஒரு ஸித்தாந்தத்தைத் தழுவி ஒரு விஷயத்தை வாதியானவன் ஸ்தாபிக்க அதை பிரதிவாதி தூஷித்த பிறகும் மற்றொரு ஸித்தாந்தத்தின்படி மறுபடியும் வாதி விவாதத்தைக் கிளப்பலாம். ஆகையால் வ்யவஹாரம் முடிவுபெற மாட்டாது! ஆகவே ஸித்தாந்த வ்யவஸ்த்தை அங்கு ஆவச்யகமானதே!

சிலர் முன்கூறிய நாலு அங்கங்களோடு மேலும் இரண்டு அங்கங்களையும் சேர்த்து வாதத்திற்கு ஆறு அங்கங்கள் என்கிறார்கள். அந்த இரண்டு அங்கங்களாவன (1) 'நிக்ரஹஸ்த்தானங்களைச்சேர்த்தோ அல்லதுப்ரத்யேகங்களாகவோ காட்டவேண்டும், என்பதாக ப்ரதிஜ்ஞை செய்தலும் (2) விவாதத்தின் முடிவைப் பற்றிய வ்யவஸ்த்தையும் என்பவை! இப்படி அவர்கள் சொல்லுவது தவறு— நிக்ரஹஸ்தானத்தை ப்ரதர்சநம் பண்ணுவதைப் பற்றிய ப்ரதிஜ்ஞையானது வாதி ப்ரதிவாதிகளின் அபிப்ராயத்தை அநுஸரித்து. விவாதத்தை முடிப்பதைப் பற்றிய நியமமானது வாதி ப்ரதிவாதிகள் ஸபையோர் இவர்களின் இஷ்டத்தின்படி செய்யவேண்டியது. ஆகவே இவை இரண்டும் வாதத்திற்கு அவச்யாபேக்ஷிதங்களன்று! நியதமல்லாதவற்றை அங்கமாகக் கொள்ளக்கூடாது. அப்படி அங்கமாகக் கொண்டால் யாகம் முதலியவற்றிற்கு அங்கமல்லாதவற்றையும் அங்கங்களாக இசையவேண்டி வரும்!

மேலும் வ்யவஹாரத்தில் முடிவைப் பற்றிய நியமமானது முன்கூறப்பட்ட மூன்று விதமான வ்யவஹாரத்திற்கும் அபேக்ஷிதமன்று! ஜயாபேக்ஷையன்றியில் செய்யப்படும் வாதமானது தத்வநிர்ணயம் ஏற்பட்டவாறே தானேமுடிவுபெறுகிறது. அல்லது மேன்மேல் வாதம் செய்வதற்குரிய சக்தியில்லாமையாலும் அது முடிந்து விடுகிறது. வாதத்தின் முடிவைப் பற்றிய வ்யவஸ்த்தை இதற்கு அபேக்ஷிதமன்று அந்த வ்யவஸ்த்தையில்லால்

உபயோகமொன்றுமில்லை! வாதி ப்ரதிவாதிகளின் இசைவினுலேயே வாதம் முடிவுபெறுகிறது என்க! ஜல்பம் விதண்டை என்பவைகளும் நிக்ரஹஸ்தானம் காட்டியவாறே முடிவுபெறுகின்றது. ஆகையால் அவைகளிலும் வ்யவஹாரத்தின் முடிவைப் பற்றிய நியமத்தினுல் உபயோகமொன்றுமில்லை. இவ்வாருக ப்ரஜ்ஞாபரித்ராணம் என்கிற க்ரந்தத்திலும் சொல்லியிருக்கிறது—

(ச்லோ) (1) 'ஜயாபேக்ஷையோடு செய்யப்படும் வ்யவஹாரமானது நிக்ரஹஸ்த்தானத்தை ப்ரயோகம் செய்வதினுல் முடிகின்றது. ஜயாபேக்ஷயன்றியில் செய்யப்படும் வாதமோவெனில் மேன் மேலும் உண்மையைப் பற்றிய தெளிவு ஏற்படும் வரையில் செய்யப்பட்டு தத்வநிர்ணயம் உண்டானவாறே முடிவுபெறுகின்றது' (2) போலி ஹேதுக்களை ப்ரயோகிப்பதும் தம்முடைய ஸித்தாந்தத்திற்கு விருத்தமான பக்ஷத்தை இசைவதும் நிக்ரஹஸ்தானத்திற்கு அவகாசமில்லாதிருக்கச் செய்தே அதை ப்ரயோகிப்பதுமாகிய தோஷங்கள் எங்கு ஏற்படுகின்றனவோ அங்கு எல்லா வ்யவஹாரமும் முடிவுபெறுகின்றது, என்பதாக அந்த க்ரந்தம் இன்னதொரு நிக்ரஹஸ்த்தானத்தில் வ்யவஹாரம் முடிவுபெறவேண்டும் என்கிற நியமத்தை ஜல்பம் விதண்டை இவற்றிற்கு அங்கமாக இசைவதாகில் அப்பொழுது 'இன்ன பாஷையினுலேயே வியவஹாரம் செய்யவெண்டும், கத்யம் அல்லது பத்யம் இவற்றிலொரு நியமம் கொண்டு சொல்லவேண்டும், ப்ரத்யக்ஷாதிகளில் இன்ன ப்ரமாணத்தைச் சேர்ந்த தொன்றையே காட்டவேண்டும் அபாவரூபமன்றிக்கே பாவரூபமாயுள்ள தொரு அஜ்ஞானத்தை அத்வைதிகள் அநுமானம் செய்கிறார்களே அந்த ரீதியைப் பின் பற்றவேண்டும். (அதாவது)— ஸாத்யத்தை இசையாவிடில் யாதொரு விரோதமும் இல்லாமை, அநுமானத்தில் இன்ன விபாகத்தைச் சேர்ந்ததையே பிரயோகிக்கவேண்டும், எழுத்து மூலமாகவே விஷயங்களை நிரூபணம் செய்யவேண்டும், ஆகாசத்தைப் பார்த்து பூமியில் எழுதுவது போன்ற விபரீதங்கள் கூடாது, வியவஹாரமத்தியில் மற்றொருவரோடு ஸம்பாஷணம்; என்றுப் போலுள்ள வ்யவஸ்த்தைகளையும் வியவஹாரத்திற்கு அங்கமாக (உதவி) கொள்ளவேண்டும்.

## நிக்ரஹஸ்தான நியமம்

வியவஹாரம் செய்யும்பொழுது ஸ்வரஸமாக வேண்டிய நிக்ரஹஸ்தானம் இன்னது என்கிற வ்யவஸ்த்தையைச் சொல்லுகிறோம்— ஜயாபேக்ஷையன்றியில் செய்யும் வாதத்தில் அபஸாபம் முதலியது அநேகமாய் ஏற்படமாட்டா[1] முன் ப்ரதிஞ்ஞை செய்ததை மாற்றுவது, வாதி இரண்டு மூன்று தடவையில் சொல்லியுள்ள விஷயத்தை ஸபையோர் அறிந்திருக்கச் செய்தே பிரதிவாதி அறியாமை, இவைபோன்ற நிக்ரஹஸ்தானம் ஏற்படுவதாகிலும் அதை பிரயோகிக்கக் கூடாது. வ்யாகரண ரீதிக்கு விருத்தமான சப்த ப்ரயோகமாகிய அவாசகம் என்கிற நிக்ரஹஸ்தானத்தை உபயோகிக்கலாமாயினும் அந்த சப்தத்தை ஸமீசீனமாக்கி மேலேயும் வாதம் நடத்தலாம். அவாசகம் என்கிற நிக்ரஹஸ்தானத்தினல் வாதம் முடிவுபெறமாட்டாது. வாதி பிரதிவாதிகளின் இசைவின் பேரில் ஒரு ஸாத்யத்தை ஸாதிக்க அநேக ஹேதுக்களையும், அநேக உதாஹரணங்களையும், அநேக தூஷணம் முதலியவற்றையும், சொல்லுவதிலும் விரோதமில்லை. ஜல்பம், விதண்டை, இவைகளிலோவெனில் வாதி பிரதிவாதிகள் செய்து கொண்ட வ்யவஸ்தையின்படி இவை எல்லாவற்றுமே நிக்ரஹஸ்தானங்களாகும். வாதஸ்தலத்தில்போல் சிலவற்றிற்கு விலக்கு இல்லை என்க.

## கதாஸ்வரூபவிவேசநம்

இவ்வாறு முன்கூறியுள்ள வாதாங்கம் நான்கோ அல்லது பல ஸித்தாந்தங்களில் இசைந்துள்ள விஷயமாகில் ஸித்தாந்த நியதியையும் சேர்த்து ஐக்தோ ஏற்பட்ட பிறகு வாதிகள் தங்களுடைய ஸித்யாமத்திற்கு ஏற்றவாறு மற்ற வியவஸ்த்தைகளும் ஏற்பட்ட பிறகு, ஸபையோரும் பிரதிவாதிகளும் வாதத்தைக் கேட்பதற்குறிய அவதானத் துடனிருக்க, ஸபையோர் அநுமதியைப் பெற்று முதலில் தன்னுடைய ஸாத்யத்தை உத்தேசித்துச் சொல்லவேண்டியதாயுள்ள பிரத்யக்ஷம் முதலிய பிரமாண விசேஷத்தை வாதியானவன் சொல்லவேண்டும். அதன் பேரில் பிரதிவாதி சொல்லும் தோஷத்திற்கு பரிஹாரமும் காட்ட

வேண்டும்! 'ஸாத்யமானது இல்லாவிடில் யாதொரு பாதகமும் இல்லையே' என்பது முதலான ஆபாதனம் ப்ரதிவாதியால் ஏற்பட்டால் தர்க்கம் ப்ரயோகிக்கவேண்டும். ஸாத்யமில்லாவிடில் இன்ன தோஷம் என்று தெளிவிக்குமது ஆவசியகம் என்கை!

சுருக்கமாகவோ விஸ்தாரமாகவோ தோஷத்திற்குப் பரிஹாரமும் தர்க்க ப்ரயோகமும் ஆவச்யகம் என்பதாக யாவர் சிலர் சொல்லுகிறார்களோ அவர்கள் ப்ரதிவாதிக்கு அவகாசத்தை வாதியே ஏற்படுத்தவேணும் என்கிறதால் "எங்கள் வீட்டுக் குப்பையில் வெங்கலப்பாத்ரம்" இல்லை என்கிற உலகப்பழமொழியைப் பின் பற்றுகிறார்கள். மேலும் வாதிகள் தாங்கள் சொல்லும் தோஷபரிஹாரவாக்யத்திற்கும் தர்க்க ப்ரயோக வாக்யத்திற்கும் மேலே ஏற்படக் கூடிய தோஷத்திற்கும் தாங்களே பரிஹாரம் செய்யவேண்டும். இப்படி அதற்குமேலும் பரிஹாரம் செய்யவேண்டி வருமாகையால் இந்த ரீதியில் யாதொரு முடிவும் இல்லாமற் போகும். இப்படி அநவஸ்தை (முடிவு இல்லாமை) யாகிற அநிஷ்டம் ப்ரஸங்கிக்கும். ஆகவே தூஷணம் ப்ரதிவாதி சொன்னாலன்றி வாதிதானாகவே தூஷணோத்தாரம் செய்யவேண்டிய அவசியமில்லை. இப்படியே தர்கப்ரயோகமும் தானாகவே செய்யவேண்டியதென்பதில்லை! வாதி தனது பக்ஷத்தைச் சொல்லிய பிறகு அதை ப்ரதிவாதியானவன் அநுவாதம் செய்து வாதிபக்ஷத்திலே தூஷணத்தைச் சொல்லவேண்டும்! மேன்மேல் இவ்வாறு ப்ரதிவாதி வாக்யத்தை வாதி அநுவதித்து தூஷிப்பதும் வாதி வாக்யத்தை ப்ரதிவாதி அநுவதித்து தூஷிப்பதுமாக விலக்ஷக்ரமமாய் உக்தி ப்ரத்யுக்திகள் ஸித்திக்கின்றது! இங்கு வாதி ப்ரதிவாதிகளின் வ்யவஹாரத்திற்கு நான்கு அம்சங்கள் உண்டு. (1) ப்ரதிஜ்ஞை செய்வது (2) அதை ஸாதிப்பது (3) தூஷிப்பது (4) தீர்மானம் செய்தல் என்ப! ப்ரதிஜ்ஞையும் அதை ஸாதிப்பதுமாகிய முதல் இரண்டு அம்சங்களையும் வாதி செய்யவேண்டும். அதை தூஷிப்பது என்கிற மூன்றாவது அம்சமானது ப்ரதிவாதியால் செய்யப் படவேண்டும்! அந்த தூஷணம் சில ஸமயம் வாதியும் இசைந்ததாயிருக்கும்! நான்காவதாகிய தீர்மானிப்பது என்கிற அம்சத்தை ஸாக்ஷிகளோ ஸபையோரோ செய்வது, வாதரூபமான வ்யவ

ஹாரத்தில் வாதிப் பிரதிவாதிகளே செய்யவேண்டும். ஜல்பம் விதண்டை இவற்றில் ஸபையோர் நிர்ணயம் செய்யவேண்டும் என்க!

ப்ரதிஜ்ஞை செய்துள்ள விஷயத்தை ஸாதிப்பதற்கு ப்ரத்யக்ஷம், சப்தம், இவற்றுள் இஷ்டமானவற்றை உசிதம்போல் உபந்யாஸம் செய்யவேண்டும்! ப்ரத்யக்ஷத்தை ஸாதகமாக வாதி உபந்ஸிக்குமிடத்தில் 'அந்த ப்ரயக்ஷம் கிடையாது, என்பதாக பிரதிவாதி தூஷிப்பதாகில் ஸபையோரே நிச்சயம் செய்யவேண்டும்! அநுமானம் இல்லை என்பதாகப் பிரதிவாதியானவன் தூஷணம் சொல்லுவதாகில் அவ்வநுமானத்தையும் ஸாதிப்பதாக ப்ரதிஜ்ஞை செய்து வாதியானவன் ஸாதிக்கவேண்டும்! ப்ரதிவாதியோ அல்லது வாதியோ வ்யபிசாரம் முதலிய தூஷணத்தை எவன் சொல்லுகிறானோ அவனே அந்த தோஷத்தை ஸாதிக்க வேண்டும்! வாதியின் அநுமானத்தோடு துல்ய (ப) லமுள்ள எதிர் அநுமானத்தை ப்ரதிவாதி நிரூபணம் செய்துவிட்டால் இருவருக்கும் ஜயம் கிடையாது. ஜல்பஸ்தலத்தில் இப்படிக் கொள்ளவேண்டும்! விதண்டாவாதம் செய்பவனுக்கோ துல்யமான ப்ரத்யநுமானம் காட்டுவதினாலேயே ஜயம் உண்டு. விவாதம் நடக்கும்போது ஒவ்வொரு கக்ஷியிலும் வாதி பிரதிவாதிகளின் வார்த்தைகளை எழுதவேண்டும்! இல்லாவிடில் அபலாபம் முதலியது நேர்ந்து ஸபையோருக்கும் ஸந்தேஹம் ஏற்படுமாகையால் எழுதவேண்டியது அவசியமானது. அஸமீசீநமான உத்தரம் எனப்படும் சலம், ஜாதி இவைகளாகிய நிக்ரஹஸ்தானங்களை விலக்கவேண்டும். ஏனெனில் இவற்றால் ஜயமென்பது நிச்சிதமாய் ஏற்படமாட்டாது. ஒரு ஸமயம் இவற்றையும் பிரயோகம் செய்யலாம்! 'சலத்தை நான் பிரயோகம் செய்திருப்பதை நீ அறியவில்லையே' என்பதாக பிரதிவாதியின் அஜ்ஞானத்தைக் காட்டி அந்த வழியில் வாதிக்கு தத்வநிர்ணயம் செய்வதற்கு உதவியாகுமவை. இத்துடன் மேலும் சில நியமங்களை தத்வரத்நாகர க்ரந்தத்திலே ஸ்ரீ பராசரபட்டர் நிரூபித்தருளினார். ஆக இவ்வாறு நியமத்தோடு நடத்தப்பெறும் இந்த வியவஹாரத்தில் மேல் சொல்லப்புகும் நிக்ரஹஸ்தானங்கள் வாதத்திற்கு ஏற்றவாறு ஏற்படுகின்றன. இன்ன நிக்ரஹஸ்தானம் என்பதற்குப் பெயரைச் சொல்லியோ அல்லது அவற்றின் அர்த்தங்களைக் காட்

டியோ, அந்த நிக்ரஹஸ்தானங்களை வ்யவஸ்தையின்படி வாதிப் பிரதிவாதிகள் சொல்லவேண்டும்.

## நிக்ரஹஸ்தானங்களுக்குப் பொதுவானலக்ஷணம்

வ்யவஹாரகாலத்தில் எதை உடைய வாதியோ பிரதி வாதியோ பராஜயம் அடைகிறனே. பராஜயத்திற்கு ஹேது பூதமாயுள்ள அந்த தோஷத்தை நிக்ரஹஸ்தாநம் என்கிறது. உண்மையறிவு இல்லாமையை ஸூசநம் செய்துகொடுத்து அம் முகத்தாலே இது வாதி பிரதிவாதிகளில் ஒருவனுக்கு பராஜயத் திற்குக் காரணமாகிறது, அஜ்ஞானம் என்றும் விபரீதஜ்ஞாந மென்றும் தத்வாஜ்ஞானமானது (உண்மை அறிவுஇல்லாமை) இரண்டுவிதமானது, உண்மையை அறியாவிடினும், மாறுபட்டு அறிந்தாலும், உண்மையறிவின்மையில் விசேஷமொன்றுமில் லையே! ஆகவே இவ்விரண்டையும் ஸூசநம் செய்வதினால் நிக்ர ஹஸ்தாநம் இரண்டு விதமாகிறது. (1) அவசியம் சொல்ல வேண்டு மவற்றைச் சொல்லாமையும் (2) சொல்லவேண்டாத வற்றைச் சொல்லுவதுமாக இரண்டுவிதம் என்றும் நிக்ரஹஸ் தாநத்தை விபாகம் செய்யலாம்! அல்லது மூன்று விதமாகவும் சுருக்கமாக நிக்ரஹஸ்தாநத்தைப் பிரிக்கலாம்— (1) சொல்ல வேண்டியவற்றைச் சொல்லாமை (2) சப்தத்தை தூஷிப்பது (3) அர்த்தத்தை தூஷிப்பது என்பதாக அந்தப் பிறிவு என்ப) இவற்றின் உட்பிறிவைக் கொண்டு நிக்ரஹஸ்தாநம் பலவேற் றுமையுடையது, அதாவது— (1) உக்தஹாநி: (தூஷித்த பிறகு தான் சொல்லியதைத்தானே விடுவது) (2) உக்த விசேஷணம். (சொல்லியதற்கு மேல் புதியயதொரு விசேஷணம் சேர்த்தல்) (3) உக்தாபலாபம் (சொல்லியதை மாற்றுதல் (4) உக்தவிரோத: (தான் சொல்லியதிற்குத்தானே விருத்தம் செய்தல் (5) அபஸித் தாந்த: (தானிசைந்த ஸித்தாந்தத்திற்கு விருத்தமானதை இசை தல் (6) அவாசகம் (வியாகரணப் பிழையுள்ள பிரயோகம். (7) அநந்விதம் (தகுந்த ஸம்பந்தமில்லாமல் சப்தத்தை பிரயோகிப் பது, (8) அப்ராப்தகாலம் (ஏற்பட்டுள்ள க்ரமத்தை மாற்றுதல்) (9) அவிஜ்ஞாதார்த்தம் (ஸபையோர் பிரதிவாதி இவர்களுக்குள் ஒருவருக்கும் அர்த்தம் புலப்படாத சப்தத்தை பிரயோகம் செய் தல் (10) அர்த்தாந்தரம் (ப்ரக்ருதோபயோக மற்றவார்த்தை!

(11) ந்யூநம் (தன் ஸித்தாந்தப்படி சொல்லவேண்டுமவற்றில் சிலவற்றைமட்டில் சொல்லுவது) (12) அதிகம் (ஹேது த்ருஷ்டாந்தம் முதலியவற்றை அதிகமாக பிரயோகித்தல்) (13) புநருக்தம் (தான் சொல்லியதை பிறர் அறிந்திருக்கச்செய்தே பிரயோஜனமன்றிக்கே மறுபடியும் சொல்லுவது) (14) அநநுபாஷணம் (வாதி சொல்லியதை ஸபையோர் அறிந்திருக்கச் செய்தே தன்னுடைய அஜ்ஞானத்தைக் காட்டாமைக்காக பிரதிவாதி அநுவாதம் செய்யாமை) (15) அஜ்ஞானம் (வாதி சொல்லியதை ஸபையோரில் ஒருவரேனும் அறிந்திருக்க அதை பிரதிவாதியானவன் தனக்குத் தெரியவில்லை என்கை) (16) அப்ரதிபா (வாதகாலத்தில் தூஷணம் முதலியது தோன்றாமை) (17) விக்ஷேப: (வாதத்தை முடிப்பதற்காக அநாவச்யகமாய் ஏதேனுமொரு வியாஜத்தைச் சொல்லுதல்) (18) மதாநுஜ்ஞா (தன் தோஷத்தை இசைந்து பிறருக்கு தோஷத்தை ஆரோபணம் செய்தல்) (19) பர்யநுயோஜ்யோபேக்ஷணம் (அவச்யம் சொல்லவேண்டிய தோஷத்தை ஸமயத்திலும் உபேக்ஷித்தல்) (20) நிரநுயோஜ்யாநுயோக: (இல்லாத தோஷத்தை ஆரோபித்தல்) (21) ப்ரமாணாபாஸா: (பிரமாணம்போல் தோன்றும் போலிஹேதுக்கள்) இவை பலவகைப் பட்டவை. முன்கூறிய ஒவ்வொன்றும் நிக்ரஹஸ்த்தானங்கள் என்ப.

## (1) உக்தஹாநி:

வாதத்தில் தான் சொல்லியதை பிரதிவாதி தூஷித்த பிறகு தானே முன்சொன்னபக்ஷத்தை விடுவது உக்தஹாநி யாகும். அது இரண்டுவிதம் சப்தத்தினால் சொல்லப்பட்டது என்றும் அர்த்தத்தினால் ஸூசிக்கப்பட்டது என்றும். இது தோஷமுடையதாகில் இதை நான்விடுகின்றேன், என்பது சப்தத்தினால் சொல்லப்பட்ட உக்தஹாநியாகும். 'அப்படியாகில் வேறு ஒன்றைப் பற்றுகிறேன்' என்பது ஆர்த்திகமான உக்தஹாநியாகும். இதனால் தன் பக்ஷத்தைவிட்டது ஊஹிக்கப்படுவதால் இதை ஆர்த்திகம் என்கிறது. 'பிரதிஜ்ஞாஹாநி, என்றும் 'ஹேதுஹாநி' என்றும் 'த்ருஷ்டாந்த ஹாநி' என்றும் 'பிரத்யக்ஷஹாநி' என்றும் 'ஆகமஹாநி' என்றும் இவ்வாறாக இது பலவகைப்பட்டது. பிரதிஜ்ஞையைவிடுதல், ஹேதுவை விடுதல், த்ருஷ்டாந்தத்தை விடுதல், பிரத்யக்ஷத்தை விடுதல், சப்தத்தை விடுதல், இவ்வாறாக விடப்

படுமவை வேறுபட்டிருப்பதே இவ்விபாகத்திற்குக் காரணம். அவற்றில் (1) பிரதிஜ்ஞாஹாநியாவது—பாதஞ்சலயோகமதஸ்த்தன் ஒருவன் 'சப்தமானது நித்யம்' என்பதாகச் சொல்லுகிறுன். 'இது உன் ஸித்தாந்தத்திற்கு விருத்தமானது' என்பதாக அதை பிரதிவாதி தூஷித்துவிடுகிறுன். அப்படியாகில் 'சப்தமானது நித்யமல்லாததாக இருக்கட்டுமே' என்று அந்தயோகமதஸ்த்தன் சொன்னுல் அதை பிரதிஜ்ஞாஹாநி என்கிறது. (2) ஹேதுஹாநியாவது— 'சப்தமானது, அநித்யம், பிரத்யக்ஷமாகின்றமையால்' என்பதாக வாதி சொல்லுகிறுன். இதை பிரதிவாதி தூஷித்து விடுகிறுன். 'அநித்யத்தன்மையாகிய ஸாத்யமானது இல்லாதிருக்கச் செய்தேயும், பிரத்யக்ஷமாகை என்கிற ஹேதுவானது ஆத்மாவிலே இருக்கின்றது. ஆகையால் இந்த ஹேதுவிற்கு வ்யபிசாரம் என்கிற தோஷமுண்டு' என்பதாக. பிறகு வாதியானவன்— 'அப்படியாகில் இந்த ஹேதுவை விலக்கிவிடுகிறேன். கார்யமாகையால் என்று ஹேதுவாகலாம்' என்று சொல்லுவது ஹேதுஹாநியாகும். 'சப்தமானது அநித்யம்' என்று முன் காட்டிய உதாஹரணத்திலேயே 'பொதுவாக வேறு ஒரு ஸாத்யம் இருக்கட்டு' மென்றுல் ப்ரதிஞ்ஞாஹாநி என்றும் 'வேறு ஹேது இருக்கட்டுமே' என்றுல் ஹேதுஹாநி என்றும் இவ்வாருகவும் கண்டுகொள்ளலாம். (3) த்ருஷ்டாந்தஹாநியாவது— சப்தம் அநித்யம் என்று முன் காட்டிய ஸ்த்தலத்திலேயே ஜாதியை உதாஹரணமாக வாதிசொல்ல அதை பிரதிவாதி தூஷித்துவிடுகிறுன்— 'அநித்யத்வம் என்கிற ஸாத்யமும் கார்யத்வம் என்கிற ஹேதுவும் நீ காட்டிய உதாஹரணத்திற்கு இல்லையே' என்பதாக. இப்படி தூஷித்த பிறகு இப்படியாகில் 'குடமானது அநித்யமானதே அது த்ருஷ்டாந்தமாகலாமே என்றுப்போல் சொல்லுவது த்ருஷ்டாந்தஹாநியாகும் இவ்வாருகவே (1) தர்மி விசேஷணஹாநி (2) ஹேது விசேஷணஹாநி (3) த்ருஷ்டாந்த விசேஷணஹாநி என்றுப்போலவும் ஊஹித்துக் கொள்ளவும். அதாவது— (1) சப்தம் அநித்யம் என்பதாக முன் காட்டிய ஸ்த்தலத்தில் 'இந்திரியத்திறைல் அறியப்படும் சப்தமானது' என்பதாக பக்ஷத்தை விசேஷித்துப் பிரயோகிப்பதாகில் சப்தத்திற்கு இந்த விசேஷணமானது வ்யர்த்தமாகின்றது. அதை பிரதிவாதி காட்டிய பிறகு 'அந்த விசேஷணத்தை விட்டு விடுகிறேன். சப்தமாத்

திரம் பக்ஷமாகலாம்' என்றால் இதை தர்மி விசேஷண ஹானி என்பது. (2) அதே ஸ்தலத்தில் கார்யமாகையால் என்கிற ஹேது விற்கு விசேஷணமொன்றைச் சேர்த்துப் 'ப்ரயத்ன கார்யமாகையால்' என்றால் இந்த விசேஷணம் வ்யர்த்தம். அதை ப்ரதிவாதி காட்டிய பிறகு விட்டுவிடுவது ஹேது விசேஷண ஹானியாகும். (3) அதே ஸ்தலத்தில் 'நீலகடம்போலே' என்பதாக உதாஹரணம் சொல்லுவதாகில் கடத்திற்கு இந்த விசேஷணம் வ்யர்த்தம். அதை ப்ரதிவாதி காட்டிய பிறகு விட்டுவிடுவது த்ருஷ்டாந்த விசேஷண ஹானியாகும். இவ்வாறாக ஊஹம் செய்யவேண்டுமென்ப.

உக்தஹானியில் நான்காவது பிறிவாகிய (4) ப்ரத்யக்ஷ ஹானியாவது— சப்தமானது, ஸ்திரமானது, (நாசமில்லாதது) அதேசப்தம் என்பதாக ப்ரத்யபிஜ்ஞை ஏற்படுவதால், என்கிறான் வாதி. 'தீபஜ்வாலை வெவ்வேறாக இருக்கச் செய்தேயும் அதே தீபஜ்வாலை என்பதாக ப்ரத்யபிஜ்ஞை உண்டாகிறதன்றோ? அது ப்ரமமே, அதைப்போலவே சப்தம் ஸ்திரம் என்பதாக ப்ரத்யபிஜ்ஞானமும் ப்ரமமே' என்பதாக ப்ரதிவாதி தூஷித்து விடுகிறான். பிறகு 'அப்படியாகில் அநுமானத்தினாலோ, சப்தத்தினாலோ சப்தம் ஸ்திரமாகலாமே' என்றாற்போல் வாதி சொல்லுவது, இதுவே ப்ரத்யக்ஷஹானியாகும். (5) ஆகமஹானியாவது எல்லாவஸ்துவும், க்ஷணந்தோறும் நசிக்கின்றது, எல்லாமறிந்த புத்தர் அவ்வாறாக சொல்லியிருப்பதால், என்று பௌத்தன் சொல்லுகிறான் 'புத்தர் தத்வஜ்ஞானமில்லாதவர்' என்பதாக ப்ரதிவாதி தூஷிக்கின்றான். 'அப்படியாகில் ஸத்தாகையால் (ப்ராமாணிகமாகையால்) க்ஷணிகமாகலாமே, என்பதாக அநுமானத்தைக் காட்டுவது போன்றது ஆகமஹானியாகும். இவ்வாறாக மற்ற ஹானிகளையும் ஊஹித்துக் கொள்ளவும். அதாவது— அநுமானஹானியாவது— சப்தமானது, அநித்யம், உண்டாகின்றமையால் என்று வாதி சொல்லுகிறான். இதை நையாயிகன் தூஷித்துவிடுகிறான். 'த்வம்ஸம்' என்கிற அபாவமானது நாசமில்லாததாயிற்றே. அதில் இத்தன்மை இல்லை. ஹேது இருக்கின்றது, ஆகவே வ்யபிசாரம் என்கிற தோஷம் இந்த அநுமானத்திற்கு உண்டு என்பதாக, பிறகு 'ப்ரத்யக்ஷத்தினாலேயே

சப்தம் அநித்யமாகலாமே' என்று வாதி சொன்னால் இதை அநுமானஹாநி என்பது. இவ்வாறு ஊஹிக்கவேண்டும் என்றபடி.

தத்வநிர்ணயார்த்தமாக ஏற்பட்டுள்ள வாதத்திலோவெனில் ஸமீசீனமாகச் சொல்லியதை ஸ்த்தாபிக்கவேண்டும். அஸமீசீனமானதை விலக்கவேண்டியதேயன்றி ஸ்த்தாபிக்கவேண்டியதில்லை. ஏனெனில் அஸமீசீனபக்ஷத்தை நிர்வஹிப்பது உண்மையை நிஷ்கர்ஷம் செய்ய உபயோகியாகாது. அதை விலக்குவதினால் தத்வநிர்ணயமுண்டாகும் என்று கண்டுகொள்ளவேணும். இப்படியாக உள்ள உக்தஹாநியானது வாதிகளுக்கு ஏற்படவேண்டிய காரணமென்னவெனில்? தோஷமுள்ளதை விட்டுவிடுவதினால் தமக்கு தோஷமொன்றும் இல்லாமற்போகின்றது என்பதாக வாதிகள் எண்ணலாம். அதின்பேரில் இவ்வாறான உக்தஹாநிக்கு அவகாசம் கூடுகிறது. வாதத்தில் ஸ்த்தாபிக்கக்கூடியதையே சொல்லவேண்டும் ஜல்பம் விதண்டை இவற்றில் சொன்னதையும் ஸ்த்தாபிக்கவேண்டும் என்பதாக இந்த நிக்ரஹஸ்த்தான நிரூபண க்ரந்தத்தின் தாத்பர்ய ரஹஸ்யம்.

## (2) உக்தவிசேஷணம்.

யாதொரு விசேஷணத்தையும் சேர்க்காமல் வாதி முன்பு சொல்லியதை பிரதிவாதி தூஷித்தபிறகு அதற்குப் புதிதாக விசேஷணமொன்றைச்சேர்ப்பது உக்தவிசேஷணமாகும்.

(பூ) விசேஷணமன்றியில் முன்பு பிரயோகித்திருப்பதை புதிதாக விசேஷணம் சேர்ப்பதின்மூலம் கைவிட்டதாகிறது ஆகையால் இதுவும் முன்சொல்லிய உக்தஹாநியே ஆகலாமே.

(ஸி) என்பதுகூடாது. ஏனெனில்—'விசேஷணம் ஒன்றுமில்லை' என்பதாக ஏற்கெனவே வாதியானவன் சொல்லவில்லை சொல்லிய அம்சத்தை கைவிடவுமில்லை. ஆகையால் இது உக்தஹாநியிற்சேராது.

ஸாத்யத்திற்கு விசேஷணத்தை புதிதாக சேர்ப்பதால் ப்ரதிஜ்ஞாந்தரம் என்றும், ஹேதுவிற்குப் புதிதாக விசேஷணம் சேர்ப்பதால் ஹேத்வந்தரம் என்றும் இந்த உக்தவிசேஷணமென்கிற நிக்ரஹஸ்த்தாநத்தை இரண்டாக கௌதமர் விபாகம் செய்திருக்

கின்றார். அதுஸரியன்று. அந்த கௌதமரே ஹாநியை நிரூபிக்குமிடத்தில் இப்படி அவாந்தர விபாகத்தைக் கைக்கொள்ளவில்லை. முன்காட்டிய எல்லா ஹாநிகளையும் உக்தஹாநி என்பதாகப் பொதுவாகவே சொல்லியிருக்கிறார். அப்படி அவர் பொதுவாகச் சேர்த்துச் சொல்லியிருப்பதை நாம் காண்கிறோம் அதேரீதியிலே இங்கும் பொதுவாக அவர் சொல்லுவது உசிதம். இல்லாவிடில் ப்ரதிஜ்ஞாஹாநி என்றும் ஹேதுஹாநி என்றும் ஹாநியானது அப்படியே இரண்டு நிக்ரஹஸ்த்தாநமாகப் பிரஸங்கிக்கும். 'அங்கு அப்படியில்லை இங்கு தான் அப்படிவிபாகம்' என்பதற்கு விசேஷகாரணம் ஒன்றுமில்லையே.

வரதவிஷ்ணுமிச்ரர் என்றுகிற ஆசாரியர் ஹேத்வந்தரம் என்கிற நிக்ரஹஸ்த்தாநத்தைத் தனியாகச் சொல்லியிருக்கச் செய்தேயும் ப்ரதிஜ்ஞாந்தரத்திலே அதை சேர்ந்ததாகவே சொல்லியிருக்கிறார் அதாவது.

(ச்லோ) 'பக்ஷம், உதாஹரணம், ஹேதுமுதலியவற்றிற்கு பிரதிவாதி தூஷணம்சொன்ன பிறகு மறுபடி விசேஷணமொன்றைச்சேர்ப்பது ப்ரதிஜ்ஞாந்தரம் என்பதாகச் சொல்லப்படுகிறது' என்பதே அது.

இந்த உக்தவிசேஷணமானது இரண்டுவிதம் (1)பொதுவாக விசேஷணத்தைச் சேர்த்தல் என்றும், (2) விசேஷித்துச்சேர்த்தல் என்றும் உதாஹரணம். (1) சப்தமானது, அநித்யமானது, பிரத்யக்ஷமாகையால், என்பதாக வைசேஷிகமதஸ்த்தன் பிரயோகம் செய்கிறான் 'ஜாதி முதலியவற்றில் அநித்யத்வமாகிற ஸாத்யமானது இல்லை பிரத்யக்ஷத்வமாகிற ஹேது இருக்கின்றது ஆகவே இந்த அநுமானமானது வியபிசாரம் என்கிற தோஷமுடையது, என்பதாக அதை மீமாம்ஸகன் தூஷிக்கிறான், பிறகு ஜாதி முதலியதை விலக்குவதற்கு ஏதேனுமொரு விசேஷணம் சேர்த்துக்கொள்ளுவது இது ஸாமாந்யமாக விசேஷணத்தைச் சேர்ப்பதாகும். (2) அதேதோஷத்திற்காக ஜாதியோடுகூடியதாய் நம்போன்றவருக்கு பிரத்யக்ஷமாகையால், என்று ஹேதுவை விசேஷிப்பது விசேஷித்து உக்தவிசேஷணமாகும். இந்த உக்தவிசேஷணமும் பலவிதமானது. (1) பக்ஷத்தை விசேஷிப்

பது, (2) ஸாத்தியத்தைவிசேஷிப்பது, (3) ஹேதுவை விசேஷிப் பது, (4)உதாஹரணத்தை விசேஷிப்பது, (5)ப்ரத்யக்ஷத்தை விசே ஷிப்பது. சப்தத்தை விசேஷிப்பது என்றுப்போலுள்ளது அந்தவிபாகம். (1) அவற்றில் பக்ஷவிசேஷணமாவது—சப்த மானது, அநித்யம், என்கிறான் நையாயிகன், த்வநிரூபமான சப்த மானது அநித்யமென்பது ஸித்தமாகையால் 'பக்ஷம்சிலவற்றில் ஸித்தத்தை (நிச்சயிக்கப்பட்டதை) ஸாதிப்பது' என்கிற தோஷம் இந்த அநுமானத்திற்கு உண்டு என்று மீமாம்ஸகன் தூஷித்து விடுகிறான் பிறகு அப்படியாகில் அக்ஷரரூபமான சப்தமானது அநித்யம் என்பதாக பக்ஷத்திற்கு விசேஷணமொன்றை புதிதா கச்சேர்ப்பது அந்தபக்ஷவிசேஷணமாகும்.

## (2) ஸாத்யவிசேஷணமாவது.

பூமி முதலியதானது, பிரயத்நமுள்ள ஒருவனால் உண்டு பண்ணப்பட்டது, என்பதாக நையாயிகர் அநுமானம் சொல்லு கிறார்கள் இதற்கு வேதாந்திகள் தூஷணம் சொல்லுவதாவது— "இதனால் ஈச்வரன் ஸித்திக்கமாட்டான் ஜீவாத்மாவுக்கும், பிரா சீனமான அத்ருஷ்டமானது அவனது பிரயத்நத்தினாலே ஏற்பட்ட தன்றோ அந்தபிரயத்நமுடைய ஜீவனேகாரணமாகலாமே பூமி முதலியவற்றிற்கு" என்பதாக. இந்ததோஷம் சொல்லியபிறகு 'இப்படியாகில் ஸாக்ஷாத்தாக பூமிமுதலியவற்றின் காரணத்தைப் பற்றிய ஜ்ஞானம், இச்சை, பிரயத்னமுடைய ஒருவனால் உண் டானது என்பதாக ஸாத்யம் கொள்ளுகிறோம்' என்று நையாயி கர் ஸாத்யத்தை விசேஷிப்பதாகில் இதை ஸாத்யவிசேஷணமென் கிறது. (3) ஜாதியோடுகூடியதாய் நம்போன்றவருக்குப் பிரத் யக்ஷமாகையாலே, என்று முன்கூறியதையே ஹேதுவிசேஷண மென்கிறது.

## (4) த்ருஷ்டாந்த விசேஷணமாவது.

எது பிராமாணிக மென்று சொல்லப்படுகின்றதோ அது எல்லாம் க்ஷணகாலமே இருக்குமதாகும் உதாஹரணம்— குடம், என்பதாக பௌத்தன் பிரயோகம் செய்கிறான். குட மானது ஸ்திரமாகையால் க்ஷணிகத்வம் என்கிறஸாத்தியமா னது அந்த உதாஹரணத்தில் இல்லையே என்பதாக தூஷணம்

சொன்னபிறகு உத்பத்திக்ஷணத்திலேயுள்ள குடம் த்ருஷ்டாந்தமாகலாமென்பதாக த்ருஷ்டாந்தத்திற்குப் புதியதொரு விசேஷணத்தைச் சேர்ப்பது அந்த த்ருஷ்டாந்த விசேஷணமாகும்.

## (5) ப்ரத்யக்ஷவிசேஷணமாவது.

"அபாவரூபமன்றிக்கே ஸாவரூபமாயிருப்பதொரு அஞ்ஞாநமானது, இருள் முதலியவற்றைப்போல், எல்லோருக்கும் ப்ரத்யக்ஷமானது," என்பதாக அத்வைதிசொல்லுகிறான். "பாஹ்யேந்திரியங்களாலும் மனதினாலும் அதற்கு ப்ரத்யக்ஷமில்லாமையால் அதை ப்ரத்யக்ஷமெனவொண்ணாது" என்பதாக பேதவாதி தூஷிக்கின்றான். "அப்படியாகில் ஸாக்ஷிப்ரத்யக்ஷமென்பது ப்ரத்யேகமானது அந்த: கரணத்தை உபாதியாகக் கொண்டசைதந்யத்தையே ஸாக்ஷிஎன்பது. அந்தஸாக்ஷிப்ரத்யக்ஷமானது ஸாவரூபமான அஞ்ஞானத்திற்கு உண்டு என்பதாக த்ருஷ்டாந்தத்தை விசேஷித்து அத்வைதி அந்த ஸாக்ஷி சைதன்யமே ஸாவரூபமான அஜ்ஞாந மொப்புக்கொள்ளுவதற்குப் பிரமாணம், என்றால் இங்கு த்ருஷ்டாந்த விசேஷணமென்ப. இவ்வாறாக அநுமாந விசேஷணம் முதலியவற்றிற்கும் மற்ற உதாஹரணங்களைக் கண்டு கொள்ளவும். அதாவது "ஜ்ஞாநமானது மற்றொரு ஜ்ஞானத்திற்கு விஷயமன்று" என்கிறான் அத்வைதி. எல்லாவஸ்துவும் ஜ்ஞானவிஷயமாகவே இருப்பதால்"ஜ்ஞானவிஷயமாகாமை"என்கிற ஸாத்தியமானது எங்கும் ப்ரஸித்தமன்றே, என்பதாக தூஷிக்கிறான் த்வைதி. பிறகு "அப்ரஸித்தமான ஸாத்யத்தோடு கூடிய அநுமாநமாகலாமே இது" என்பதாக அநுமாநத்தை விசேஷிப்பது அநுமான விசேஷணமாகும் என்ப.

"விசேஷணமொன்றுமிரா்மையால் தோஷம் ஏற்படுகிறது விசேஷணத்தைச் சேர்த்துக்கொண்டால் தோஷம் வருவதில்லை" என்கிறஎண்ணத்தினால் வாதிகள் தாம் சொல்லியதற்குப்புதியதொரு விசேஷணத்தைச் சேர்க்கக்கூடும் ஆகவே இந்த உக்த விசேஷணம் என்கிற நிக்ரஹஸ்தானத்திற்கு அவகாசம் ஏற்படுகிறது. தூஷணம் சொல்லியபிறகு புதியதொரு விசேஷணத்தைச் சேர்க்காமல் முன்னேயே பூர்ணமாகப்பிரயோகம் செய்ய வேண்டும் பூரணமாகச் சொல்லாதவற்றில் சொல்லியுள்ள அம்சத்தையே தமக்கு இன்னதாத்பர்யம் என்பதைக்காட்டி ஜல்

பம் விதண்டைகளில் நிர்வாஹம் செய்யவேண்டுமேயன்றி புதிய தொரு விசேஷணம் சேர்க்கக்கூடாது என்பதாக இந்த நிரூபணத்தின் ரஹஸ்யமாகும். ஏற்கெனவே ஸமீசீனமாகவே பக்ஷம் முதலியவற்றை வாதிபிரயோகம் செய்திருந்தும் பிரதிவாதியானவன் அதற்கு ஏதேனுமொரு தூஷணம் எறிட்டுக்காட்ட வாதியானவன் சொல்லிய விசேஷணத்தை விலக்கிவிடுவதோ சொல்லாத விசேஷணத்தைப் புதிதாகச் சேர்ப்பதோ செய்யினும் உக்தஹாநி உக்தவிசேஷணம் என்கிற இந்த இரண்டு நிக்ரஹஸ்தானத்தையும் பிரயோகம் செய்யவேண்டும். இங்கு "பர்யநுயோஜ்யோபேக்ஷணம்' என்கிற நிக்ரஹஸ்தானமும் அதிகமாகச் சேருகிறது. அதாவது "தோஷமில்லாதிருக்கச் செய்தே உன்பக்ஷத்தை நான் தூஷித்திருக்க அதை ஆக்ஷேபிக்க வேண்டியிருக்க, நீ உபேக்ஷித்தாயே" என்பதாகும் (பூ) இப்படியாகில் தன்னுடைய தோஷத்தையே தானே வெளிப்படுத்துவதாகவும் ஆகின்றமையால் இது தோஷமாகுமே. (ஸி) என்பதற்கில்லை. "ஏமாற்றுவதற்காக இல்லாததை நான் பிரயோகம் செய்தும் இவன் இதை அறியவில்லை" என்கிற அவலம்பநத்தினுல் தனக்கு விஜயமானது இதனுல் ஏற்படுகிறதன்றோ. ஆகிலும் "உக்த ஹாநி முதலியவற்றோடு பர்யநுயோஜ்யோபேக்ஷணத்தையும் உத்பாவநம் செய்வதினுல் "அதிகம்" என்கிற நிக்ரஹஸ்தானம் தனக்கு ஏற்படுமே" என்பதற்கில்லை. "ஒரே தூஷணம் பிரயோகிக்கப் படவேண்டும்" என்கிறநியமமிருந்தாலன்றி எப்பொழுதுமே அதிகம் தோஷமென்பதற்கில்லை என்ப.

## (3) உக்தாபலாப:

சபையோர் முதலியவர் அறிய, தான் சொல்லியதை பிரதிவாதி தூஷித்தபிறகு மறைப்பது உக்தாபலாபமாகும் அது பலவிதமானது— 'நான் இவ்வாறு சொல்லவில்லை' என்றோ, 'நான் சொல்லியதுவேறே' என்றோ, 'நீயே சொல்லிவிட்டு என்மேல் ஆரோபணம் செய்கிருய் என்றோ' 'நீ சொல்லியதையே அநுவாதம் செய்தேன்' பிறர் சொல்லியதை அநுவாதம் செய்தேன், என்றோ 'பக்கத்திலிருப்பவன் இவ்வாறு சொன்னன்' என்றோ 'சொல்லாததையும் சொல்ல ஆரம்பிக்காததையும் நீ ப்ரமத்தினுல் இவ்வாறு எண்ணினுய்' என்றோ 'இது அசரீரிவாக்யம் என்றோ'

இப்படிக்கு முன்சொல்லியதை மறுத்தல் உக்தாபலாபம் பிறர் பொருளை அவர்கள் பார்க்கச் செய்தே கொள்ளை கொள்ளுமவர்களிடம் இம்மாதிரி அபலாபங்களுக்குக் காரணம் இன்னது என்பதைத் தெளியலாம். முரட்டு தைர்யமே அதற்குக் காரணம் என்ப (1) தான் செய்த பிரதிக்ஞையை அபலாபம் செய்வது, (2) ஹேதுவை அபலாபம் செய்வது, (3) உதாஹரணத்தை அபலபிப்பது, (4 ப்ரத்யக்ஷ ப்ரமாணத்தை மாற்றுவது, (5) சப்தத்தை மறுப்பது, இம்மாதிரியாக அபலாபம் செய்யப்படுமது வித்யாஸப்படுவதால அவ்வபலாபமும் உக்தஹாநியைப் போலவும் உக்த விசேஷணத்தைப் போலவும் பல வகைப்பட்டது என்று கண்டுகொள்ளவும. வாதம ஆரம்பிக்கும் காலத்திலேயே 'கை சேஷ்டை முதலானதைத் தவிர்க்கவேண்டும் என்று நியமம் ஏற்பட்டிருந்தால் அந்த சேஷ்டை முதலானதையும் விலக்கவேண்டும. அந்த சேஷ்டையை செய்துவிட்டு அதை மறுப்பதும அபலாபத்திலேயே சேர்ந்தது. ஆனால் அது உக்தாபலாபமாகாது. கை சேஷ்டை முதலியது வாக்கு வ்யாபாரமன்றே. ஆகையால் க்ருதாபலாபம் என்பதாக லக்ஷயத்தை வகுக்கவேண்டும். தான் சொல்லியதை என்பதற்குப் பதிலாகத் '(உக்திரூபமாகவோ, செய்கை ரூபமாகவோ உள்ள) தன வ்யாபாரத்தை பிரதிவாதி தூஷித்த பிறகு மறைபபது என்பதாக லக்ஷணத்தையும அமைக்கவேண்டும். ஸபையோர் அறியத் தான் அநுஷ்டித்ததைத தானே மறுப்பதாகில தனக்கு சக்யமானதொன்றும் இராமையால ஸபையோரும் ஸபாநாயகருமே, விவாதத்தின் போக்கு இப்படிப்பட்டதென்று நிர்ணயம் செய்து காப்பாறறவேணடும். உலகத்தில் கண்காணிகளாக பதிநான்கு பெயர்களுணடு. அவர்களாகிறார்:—(1) தனது அந்தராத்மா (2) ஆகாசம் (3) பூமி (4) ஜலம் (5) மனது (6) சந்திரன் (7) ஸூர்யன் (8) அக்நி (9) யமன் (10) வாயு (11) ராத்திரி (12) பகல் (13,14) காலை மாலை சந்திகள் என்பவர்கள். இந்தப் பதிநான்கு பெயர்களும் உடனே வாதியின் அபலாபத்தை ஆக்ஷேபித்து நிர்ணயம் செய்யாமையால் ஸபையோரும் ஸபாநாயகருமே விவாதத்தை நிர்ணயிக்கக் கடமைப்பட்டிருக்கிறார்கள். இவ்வாறாக எல்லோருக்கும் தான் சொல்லியதைப்பற்றிய ஞானம் உண்டாயிருக்க அதை இல்லை செய்யிலும் ஸபையோர் முதலியவர்களே தீர்மானிக்கவேண்டும். நாராயணார்யர் என்ற அபியுக்தரும் பகவத்கீதாபாஷ்யத்தில் இவ்வாறு சொல்லியிருக்கிறார்.

அதாவது—(ச்லோ) வாதத்திலே ஸபையோர் முதலியவர்களுக்கு ஏற்பட்டுள்ள ஞானத்தை யாவனொருவன் மறுக்கிறானே அவனை ஸபையோர் அடக்க வேண்டும். இல்லாவிடில் வாதத்தின் தீர்மானம் ஏற்படமாட்டாதன்றோ என்பதாக.

இதனால் ஸபையோர் முதலியவர் அறியும்படி சொல்லியதையோ செய்ததையோ வாதியானவன் மறுக்கக்கூடாதென்று முக்யமான அர்த்தம் இந்த **க்ருதாபலாபம்** என்கிற நிக்ரஹஸ்தானத்தின் மூலம் ஏற்பட்டது.

அபலாபத்தையே **பிரதிஞ்ஞாஸந்யாஸம்** என்கிற பெயரால் கௌதமர் சொல்லுகிறார். இது முக்யார்த்தகமன்று. லக்ஷணையாகச் சொல்லுவதேயாகும். இப்படி அவர் சொல்லுவதை நாம் ஆதரிக்கவில்லை. ஏனெனில் **உக்தஹானி** என்பதாக முதல் நிக்ரஹஸ்தானமும் **க்ருதாபலாபம்** என்கிற மூன்றாவது நிக்ரஹஸ்தானமும் ஒன்றே என்கிற பிரமம உண்டாவதற்கு இந்த சப்தம காரணமாகின்றது. ஸந்யாஸம் என்றாலும், ஹானி என்றாலும் விடுதல் என்று அர்த்தமாகையால் இந்த பிரமம் உணடாகும் ஆகையால அது வாராமைக்காக **அபலாபம்** என்று பெயரிடுவதே அழகு என்கிறோம். வாதியின் வாக்யம் துஷடமல்லாததாக இருக்கச் செய்தே பிரதிவாதி தூஷித்ததைக் கொண்டு வாதியானவன் தனதை துஷடம் என்று எண்ணி அபலாபம் செய்யுமாகில் **உக்தவிசேஷணம்** என்கிற நிக்ரஹஸ்தானத்தில் காட்டிய ரீதியில் **பர்யநுயோஜ்யோபேக்ஷணம்** (தோஷமில்லாமலிருக்க உன் பக்ஷத்தை நான் தூஷித்ததை நீ ஆக்ஷேபிக்க வேண்டியிருக்க, உபேக்ஷித்தாய்) என்பதாக நிக்ரஹஸ்தானமும் சேரும். இரண்டு நிக்ரஹஸ்தானங்களையும் பிரதிவாதி காட்டவேண்டும் என்ப. இப்படி (1) உக்தஹானி (2) உகத விசேஷணம் (3) உக்தாபலாபம் என்கிற மூன்று நிக்ரஹஸ்தானங்களும் முதல் இரணடு கக்ஷியிலும் ஏற்படமாட்டா. வாதி ஒரு கக்ஷியையும் பிரதிவாதி மற்றொரு கக்ஷியையும் புதிதாகக் கொள்ளுவதால் அவற்றிற்கு முதலிரண்டு கக்ஷிகளிலும் அவகாசமில்லை. மூன்றாவது கக்ஷி முதலாக அவை ஏற்படலாம். நான்காவது முதலிய கக்ஷிகளில் அந்த நிக்ரஹஸ்தானங்களைக் காட்டவேண்டும்.

## (4) உக்தவிரோதம்.

தான் சொல்லியதற்கு விருத்தமாகத் தானே செய்வதை **உக்தவிரோதம்** என்கிறது அது இரண்டு விதம் தான் சொல்

விய பதத்திற்கு விருத்தமானதொரு பதத்தை ப்ரயோகிப்பது என்றும், வாக்யத்திற்கு விருத்தமான மற்றொரு வாக்யத்தை ப்ரயோகம் செய்வது என்றும். பதவிரோதமாவது—'ஈச்வரன், ஈச்வரனல்லன்' என்றுப் போலுள்ளது. வாக்யவிரோதமாவது——ஈச்வரன் எல்லாவற்றையும் அறிந்தவனே ஆகிலும் தனது அக்ஞான மொன்றையே அவன் அறிவதில்லை என்றுப போலுள்ளது.

இந்த உக்தவிரோதமானது உட்பிரிவை இட்டுப் பலவித மானது. (1) அவற்றில் ப்ரதிக்ஞா வாக்யத்திலுள்ள இரண்டு பதஙகளுக்கு விரோதமாவது—'ஈச்வரன் எல்லாவற்றையும அறிந்தவனன்று, என்றுப்போலுள்ளது இஙகு ஈச்வரன் என்றதனால் ஸர்வஞ்ஞத்வம் ஏற்படச்செய்தே அதை மற்றொரு பதத்தினால் மறுப்பதால் ப்ரதிஞ்ஞா பதங்களுக்கு விரோதம ஏற்படுகின்றது. (2) பக்ஷதிற்குமஹேதுவிற்கும் விரோதமாவது—'ஈச்வரன், ஜீவனாகையால். புண்யபாபகர்ம பரதந்தரன் என்றிவ்வாறுனது இங்கு பக்ஷமாகிய ஈச்வரனிடத்தில் ஹேதுவாகிய ஜீவத்தன்மை இல்லாமையால் பக்ஷ ஹேதுக்களுக்கு விரோதம் ஏற்படுகிறது. (3) ஸாத்யத்திற்கும் ஹேதுவிற்கும் விரோதமாவது—'பூமிமுதலியது. கர்த்தா ஒருவனால் ஏற்பட்டது. கர்த்தாவினால் உண்டாகாமையால். என்றிவ்வாறுனது இங்கு கர்த்தாவிடமிருந்து உத்பன்னமாகையாகிற ஸாத்யத்திற்கும் அப்படி யல்லாமையாகிற ஹேதுவிற்கும் விரோதம ஏற்படுகிறது. (4) தனது வாக்யத்திற்கு விரோதமாவது—ஜீவன் உள்ளவரையில நான் மௌனமுடையவன், அல்லது ஊமை, என்றுப் போலுள்ளது. இஙகு தனது பேசாமையைப பேச்சால் வெளியிடுவதால விரோதமுள்ளது (5) தனது வ்யாபாரத்திற்கு விரோதமாவது—'நான் எப்பொழுதும் யாதொரு வ்யாபாரமும் செய்வதில்லை, என்றுப் போலுள்ளது.' இந்த வார்த்தையும் ஒருவ்யாபாரமேயாகையால் 'எப்பொழுதும் வ்யாபாரமிலலாதவன நான்' என்பது விருத்தமானது. 'நான் 'யாதொன்றையும் யாசிப்பதில்லை, ஆகையால் எனக்கு தனங்களைக் கொடுக்கவேண்டும்' என்பதுவும் அம்ருதபானம் செய்தேன். ஆகிலும் கிழத்தனத்தினால் அம்ருதத்தின் வெண்மை நிறம் தலைமயிருக்கு ஏற்பட்டது, என்பதுவும் ஸ்வ க்ரியா விரோதமாகும். அம்ருதபானத்தினால் கிழத்தன்மை ஏற்படமாட்டாதாகையால் இது விருத்தமானது. 'எனக்கு யாதொரு ஸித்தாந்தமும் கிடையாது. ஆகிலும் சூன்யம் என்றே ஞான

ஸ்வரூபமாத்திரம் என்றே ஒரு பொருள் உண்டு என்று பௌத்தன் சொல்லுவதும் 'பிரஹ்மமானது ஞானத்திற்கு விஷய (இலக்கு) மாகாது. ஆகிலும் அந்த பிரஹ்மத்தை அறிவதினால் மோக்ஷம், என்று அத்வைதியின் பக்ஷமும்' காரணமென்றுவது காரியமென்றுவது ஒன்றும் கிடையாது. ஆகிலும் பிருதிவீ முதலிய பூதங்களின் பரிணாமத்தினாலே ஞானமானது உண்டாகின்றது என்று பௌத்தரில சிலர் சொல்லுவதும் இவ்வாறாக அவ்வோஸித்தாந்திகளின் விருதத வாக்யங்களை ஸ்வக்ரியா விரோதத்திற்கு உதாஹரணங்களாகக் கொள்க.

இவற்றுள 'ஈச்வரன, ஈச்வரனல்லன் என்றுப போலுள்ள முன் உதாஹரித்த சிலவற்றில சப்தத்தினாலேயே விரோதம் ஏற்படுகின்றது 'ஈச்வரன கர்மபரதந்திரன' என்றுப் போலுள்ளவற்றில ஆர்த்திகமாய் (அனுமானாதி மூலகமாய்) விரோதம் எனப.

வாதி பிரதிவாதிகள இசைந்துள்ள நியமத்திற்கு மாறுபட்டு நடப்பதும் இந்த ஸ்வக்ரியா விரோதத்திலே அடங்கியதாகும். அதாவது-ஸம்ஸ்கிருத பாஷையில் வ்யவஹாரம் செய்வதாக இசைந்து இலக்கணப்பிழையுள்ள பாஷையாலே வ்யவஹாரம் செய்தல், வாதி பக்ஷத்தைப் பூராகவும் அனுவாதம் செயவதாக இசைந்திருக்கில் தூஷிக்கப்படவேண்டிய அமசத்தை மாத்திரம அனுவாதம் செய்தல் முதலியது, கைசேஷ்டை முதலியது செயவதில்லை என்று இசைந்து அதைச செய்வது இது போன்றது.

பதம, அக்ஷரம் முதலியவற்றிற்கு ஸந்தி (சேர்க்கை) இலலாமை, யதி பங்கம், வ்ருத்தம் மாறுதல, ச்ரமப்பட்டு அர்த்தததை அறியவேண்டியிருக்கையாகிற நேயார்த்தத்வம், முதலிய தூஷணங்கள் அலங்கார சாஸ்திரங்களில் சொலலப்படுகின்றன. அவற்றிற்கு மாறுதலிலலாமல் வியவஹாரத்திற்கு நியமம் ஏற்பட்டிருந்தால் அதை மாற்றுவதும் இவ்வாறு ஸவக்ரியா விரோதத்திலேயே சேரும். ஜைனர் குமாரிலர் முதலியோர் ஒரு வஸ்துவிற்கு பேதமும் அபேதமும் உண்டு என்கிறார்கள். ஜாதிக்கு வ்யக்தியோடு பேதமும் அபேதமும் உண்டு என்கிறார் குமாரிலர், ஜைனரோவெனில், உளது இல்லாதது என்றுப்போல ஏழுவிதமான ஸ்வபாவம் உடையது; ஒவவொரு வஸ்துவும் என்கிறார்கள். உணமையில் அவற்றிற்கு விரோதம் இருப்பதை அவர்கள் அங்கிகாரம் செய்வதிலலை. அந்த ரீதியில் விரோதத்தை பரிஹாரம் செய்வதாக எண்ணுவதினா

லேயோ, அவதாரணப்பிசகினாலேயோ இந்த விரோதமானது வாதிகளுக்கு நேரக்கூடும். இதனால்தான் சொல்லியதற்கும் இசைந்ததற்கும் விரோதமிராமல் நடக்கவேண்டும் என்று ரஹஸ்யார்த்தம் ஏற்படுகிறது. இந்த விரோதமானது வாதிகளுக்கு முதல்கக்ஷிமுதற்கொண்டு நேரக்கூடும். அதற்கு அடுத்த கக்ஷியில் இந்த விரோத தூஷணத்தை பிரதிவாதி காட்டவேண்டும்.

## (5) அபஸித்தாந்தம்.

தனது ஸித்தாந்தத்திற்கு எதிரிடையான மற்றொரு பக்ஷத்தை இசைதலை **அபஸித்தாந்தம்** என்கிறது. உதாஹரணம்—ஆத்மா கர்த்தாவன்று என்று ஸாங்கிய மதம். அவன ஆத்மாவை கர்த்தாவென்று கொள்ளுவதானல் அபஸித்தாந்தமாகும. வைசேஷிகமதஸ்தன் ஆத்மஸ்வரூபம் ஜடம என்கிறன். அவன் ஆத்மா, ஜ்ஞானஸ்வரூபன என்பது அபஸித்தாந்தம. இவவாருகக காண்ப.

இவ்வாருகவே ஸித்தாந்திகள் ஒருவரும் இசையாததொரு பிரமாணத்தை வாதியோ பிரதிவாதியோ கைக்கொள்ளுவதாகிலும் அபஸித்தாந்தம் என்கிற நிக்ரஹஸ்தானத்தை பிரயோகிக்கவும் உணமையில் யாதொரு ஸித்தாந்திகளும் இசையாத அது பிரமாணமாகில் வேறு தூஷணம ஒன்றும் சொலலமுடியாதாகையால அபஸித்தாந்தத்தையே காட்டவேண்டும. அது பிரமாணமன்ருகிலும் பிரமாணமலலாமைக்குக் காரணத்தை உபபாதனம் செய்து ச்ரமப்படுவதைவிட சீக்ரம் உபஸ்திதமாயுள்ள அபஸித்தாந்தத்தையே காட்டுவது நலம். ஏனெனில் இது இருவரும் நியமேன இசைந்ததன்ருே.

யாவனொருவன் அநுமாநம் முதலிய பிரஸித்த பிரமாணத்தை **அர்த்தாபத்தி** முதலிய வேறு பெயரால் குறிப்பிடுகின்ருனே அவனிடம் அபஸித்தாந்ததூஷணம் கூடாது. அர்த்தாபத்தியும் அநுமானமும் ஒன்று என்ருப்போல் இசைந்தவன ஒரே அர்த்தத்தை போதிக்குமதாகிய வேறு பதத்தை பிரயோகிப்பதில் யாதொரு விரோதமும் இல்லாமையால் அவன் அப்படி உபயோகிப்பது குற்றமாகமாட்டாதே. வேறு சப்தத்தை பிரயோகம் செய்வதினலேயே அபஸித்தாந்தம் என்கிற நிக்ரஹஸ்தானம் கூடுமாகில் பிரத்யக்ஷம், சப்தம் இவற்றை அத்யக்ஷம், ஆகமம் என்ருப்போல் பர்யாயபதங்களாலே சொன்னலும் அபஸித்தாந்த தூஷணம் காட்டவேண்டுவருமே. ஆனல அநுமானத்தை அர்த்தாபத்தி சப்தத்தினலே வாதி

பிரயோகம் செய்தபிறகு பிரதிவாதியானவன் மாற்றுதலால் தனக்கு ஜயம் வரும் என்கிற எண்ணங்கொண்டு வாதியைப் பார்த்து 'அர்த்தாபத்தி தனிப் பிரமாணமன்றே என்று கேட்க வாதியானவன் 'தனிப்பட்டதே அது, என்று சொல்லுவானே யாகிலும் அபஸித்தாந்தம் அப்பொழுது கூடும். குமாரிலர் முதலியோர் அர்த்தாபத்தி என்பதுஅநுமானத்தைக்காட்டிலும் வேறுபட்ட பிரமாணம் என்கிறார்கள். அவர்கள் அர்த்தா பத்திக்கு அநுமானத்திலே அந்தர்பாவத்தை மறுபடி இசை வதாகிலும் அபஸித்தாநதமே பிரயோகிக்கப்படவேண்டும் ஏனெனில் அப்படி அவர்கள் இரண்டிற்கும் ஐக்யத்தை இசை வது பிரமாணமாகில அவர்களுக்கு வேறு தூஷணம்சொலல முடியாது. பிரமாணமன்றாகில் அதற்குக் காரணம் இன்னது என்று காட்டுவதற்கு ச்ரமப்படுவதைக் காட்டிலுமசீக்ரத்தில் உபஸ்திதமான அபஸித்தாந்த தூஷணமே ஸமீசீனமாகும் எனபதாக முன்காட்டிய ரீதியில் கொள்க.

அபஸித்தாந்த லக்ஷணத்தில் தான இசைந்துள்ள ஸித்தா ந்தத்திற்கு விருத்தமானதை இசைதல் என்று சொல்லியிருக் கிறோமன்றோ, இங்கு இசைதல் என்பதாக எதற்காகப் பிர யோகித்தது? ஸ்வஸித்தாந்த விருத்தமானதை அநுஷ்டித்தல் எனறலாமே எனில்? அப்படி விருத்தமாகச் செய்தல மற்ற நிக்ரஹஸ்தானத்திலும் உண்டு. யாதொரு தோஷமும் இலலா மல் வாதம் நடத்தவேண்டும் என்பது எல்லா மதஸ்தரும் இசைந்த விஷயமன்றோ? ஆகையால் அதற்கு விருத்தமாக வாதி செய்வதினல் மற்ற நிக்ரஹஸதானம் பிரயோகிக்கின் றோம். ஆனல் அந்தந்த நிக்ரஹஸதானம் எல்லாவற்றுமே அபஸித்தாந்தமன்று. அவற்றை விலக்குவதற்காகவே இசை தல் என்கிற விசேஷணம் பிரயோகம் செய்தது. மற்ற நிக்ரஹஸ்தானத்தில் தன் ஸித்தாந்த விருத்தத்தை இசைதல் என்பதுஇல்லை. அபஸித்தாந்தத்திலேயே அது உளது என்ப.

(பூ) ஆகிலும் அபஸித்தாந்தத்தை உக்தவிரோதம் என்று முன்கூறிய நிக்ரஹஸ்தானத்திலேயே சேர்த்துவிடலாமே இன்ன ஸித்தாந்தரீதியின்படி வியவஹாரம் செய்கிறேன் என் பதாக வாதாரம்பத்தில் பிரதிஜ்ஞை செய்துவிட்டு அந்த வாதம் முடிவதற்கு முன்பே அந்தப் பிரதிஜ்ஞைக்கு விருத்த மாக நடந்துகொண்டிருக்கிறானன்றோ வாதி? ஆகையால் அபஸித்தாந்தத்தை தனியாக நிக்ரஹஸ்தானம் என்றது எதற் காக? (ஸி) எனில, இந்த ஆக்ஷேபம் சற்று ஸரியானதே.

நீ உன்னுடைய ஸித்தாந்தத்திற்கு விருத்தமாயுள்ள இந்த அர்த்தத்தை இசைகின்றாய் ஆகையால்; நீ இசைவதாகச் சொல்லிய ஸித்தாந்த வாக்யத்திற்கு விருத்தமானது இந்த வாக்யம்! என்பதாகவன்றோ துரவனம காட்டவேண்டும் இதுவே உக்த விரோதமாதும. இந்த உக்த விரோதத்தில ஸித்தாந்த விரோதமானது முதன் முதலில் தோன்றுகிறது. சீக்ரம் உபஸ்திதமானது. அதை உபஜீவித்தே இங்கு உக்த விரோதம் ஏற்படுகிறது. ஆகையால ஸித்தாந்த விரோதத்தையே முதலில் காட்டுவது உசிதம என்கிற காரணத்திறைல் உக்தவிரோதத்தைக்காட்டில் தனிப்பட்டதாக அபஸித்தாந்தத்தைவியவஹரிப்பது. அவ்வோ ஸித்தாந்தங்களை ஏற்படுத்தியுள்ளவர்களோடு தன்னையும் ஸமமாக எண்ணிக்கொள்ளுவதின் மூலம் அபஸித்தாந்தத்திற்கு அவகாசம் ஏற்படுகின்றது. கவனபபிசகும் இதறகுக்காரணம். சாஸ்த்ரப்ரவர்த்தகரன்றிக்கே அதைப் பின்பற்றுமவர் தாம்தாமிசைந்துள்ள ஸித்தாந்தங்களுக்கு விருத்தமான தொன்றை இசையக்கூடாது என்று முக்யமான விஷயம் இதனுல் தேறியது.

(பூ) அப்படியாகில் ஒரே ஸித்தாநதத்தில பல மதப்பிறிவுகள் ஏற்படுவானேன் (ஸி) எனில ஸித்தாநதபரவர்த்தக்ர்களின் தாத்பர்ய மிலலாதவறறில தாத்பர்ய மிருப்பதாக அவர்கள வாக்யங்களைத்தாம ப்ரமிப்பதின் மூலம் மதபேதம் ஏற்படுகின்றது (பூ)அப்படியாகில் வார்த்திகம் முதலியக்ரந்தம் எப்படி ஏற்படக்கூடும்? முன் க்ரந்தத்தில் சொல்லியதை சிலவற்றை மாற்றியும் சில சொலலாததை இசைந்துமன்ருே வார்த்திகம் ஏற்படுகின்றது? (ஸி) எனில. மூலக்ரந்தத்திற்கு ஒரு அம்சத்தில் பரதந்த்ரனுயும் மற்ருெரு அம்சத்தில் ஸ்வதந்த்ரனுகவும் இருந்து ஏகதேசத்தை இசைந்து இசையாத அம்சத்திற்குத் தானே பிரவர்த்தகனுகின்றமையால் வார்த்திகம் ஏற்படுகின்றது.

(பூ) அப்படியே அபஸித்தாந்தஸ்தலத்திலும் ஏகதேசத்தில் வாதியானவன் ஸ்வதந்த்ரனுய் பக்ஷத்தை ஏற்படுத்தலாமே (ஸி) எனபது கூடாது. வார்த்திககாரர்கள்முன்பேயே அவ்வாறு ஏகதேசத்தைப் பின்பற்றுவதாகக் கொண்டாப்போல் வாதி அப்படி கொள்ளவிலலையே. அப்படி ஏகதேசத்தையே இசைவதாகில் அவன்பேரில் அபஸித்தாந்தம் என்கிற தோஷத்தை எவன் சொலலமுடியும்? இநத அபஸித்தாந்தமானது சற்று புத்தி

உடையவர்களுக்கு முதல் கக்ஷியிலேயே ஏற்பட்டுவிடாது அனேகமாய் இரண்டாவது முதலியகக்ஷியிலேயே நேரும். குழந்தைகள் வியவஹாரங்களாகில் முதற் கக்ஷியிலேயே நேரலாம். இரண்டாவது கக்ஷியிலோவெனில் தனது ஸித்தாந்தத்திற்கு விருத்தமாக ஸாதிக்குமிடத்தில் ஸித்தஸாதநம் (பிரதிவாதி இசைந்ததை ஸாதித்தல்) முதலிய தோஷத்தைக் காட்டும் போது அபஸித்தாந்தத்திற்கு அவகாசம் உண்டு.

## (6) ஸித்தாந்தம்.

(கேள்வி) ஸித்தாந்தம் என்பது என்ன? (ப) பிராமாணிகம் என்பதாக ஒப்புக்கொள்ளப்பட்ட பொருளுக்கு ஸித்தாந்தம் என்று பெயர்.

(ச்லோ 1) அவரவர் அபிமானத்தினாலேயே ஸித்தாந்தம் ஏற்படுவதாலும், ஒன்றுக்கொன்று முரண்படுவதாலும ஸித்தாந்தம என்று ஒன்று இருக்கமாட்டாதே? எனில் இந்த வாதம் கூடாது ஒரு ஸித்தாந்தமும இல்லை என்பது ஸித்தித்து விட்டால் 'ஸித்தாந்தம என்பது ஒன்றுணடு' எனறு தேறுகின்றது இந்த வாதமே ஸித்தியாவிடிலும 'ஸித்தாந்தமே இல்லை' எனகிற கக்ஷியே இல்லாமையால (பாதகம் இல்லாமையால்) ஸித்தாந்தம என்பது ஒன்று உண்டு எனறு தேறுகிறது.

(2) ஸித்தாந்தமில்லை என்பது பிராமாணிகமா? இல்லையா? பிராமாணிகமாகில இல்லை எனகிற ஸித்தாந்தம் நிலைத்தது. இபபொழுது ஸித்தாந்தமென்றொன்று உணடு என்றதாகிறது. பிராமாணிகமன்றாகில் இல்லை என்கிற பாதக வாக்யம அப்ரமாணமாகின்றமையால் ஸித்தாந்தமுணடு என்பது நிலைத்துவிடுகிறது

அந்த ஸித்தாந்தமானது, (1) ஸர்வதந்த்ர ஸித்தாந்தம என்றும் (2) பிரதிதந்த்ர ஸித்தாந்தம் என்றும (3) அப்யுபகம ஸித்தாந்தம எனறும் மூனறு விதமானது

1. எது இல்லாவிடில வாதவ்யவஹாரமே நடைபெறமாட்டாதோ எலலோரும் இசைந்துளள அந்த ஸித்தாந்தத்தை ஸர்வதந்த்ர ஸித்தாந்தம என்கிறது

உதாஹரணம்:—'ப்ரத்யக்ஷம் அநுமாநம் முதலிய பிரமாணத்தினாலேயே வஸ்துவானது ஸித்திக்கின்றது' என்றிவை போன்றது மாத்யமிக பௌத்தன அத்வைதி முதலியோர்களும் ஸர்

வமும் சூந்யமென்றும், ப்ரபஞ்சம் பொய் என்றும் சொல்லுகிருர்கள். இவர்களும் உலகத்தில் பதார்த்தங்களைப்பற்றிய வியவஹாரம் ஏற்படுவதை இசைந்து ஸம்வ்ருதியினால் தோன்றுகிறது ப்ரபஞ்சம என்று மாத்யமிகரும் அவித்யையினால் தோன்றுகிறதென்று அத்வைதியும் ஒப்புக்கொளளுகிருர்கள். ஆகவே ஏதேனும் ஒரு பிரமாணத்தினாலேயே பதார்த்தம் ஸித்திக்கின்றதென்று ஏற்படுகிறது. (2) தமது ஸித்தாந்தத்திலே மாத்திரம் ஏற்பட்டதாய் மற்ற ஸித்தாந்தங்களில் நிஷேதிக்கப்பட்டதுமானதை **ப்ரதிதந்த்ர** ஸித்தாந்தம் என்கிறது.

உதாஹரணம்: — வையாகரணன் அர்த்தங்களுக்கு வாசகமாக **ஸ்போடம்** எனபதாக ஒன்றை ஒப்புகிறுன. பௌத்தன் 'பதார்த்தமானது க்ஷணந்தோறும நாசமடைகிறது' என்கிறுன. ஜைனன் ஒவ்வொரு பதார்த்தமும் '**இருப்பது இல்லாதது** முதலிய ஏழு ஆகாரமுடையது' என்கிறுன். குமாரிலபட்டரைச சேர்ந்தவர் முதலியோர் **சப்தபாவனையை** 'லிங்' என்கிற ப்ரத்யயத்திற்கு அர்த்தமென்கிறுர். வேதாந்திகள் ஈசுவரனுக்கு எல்லாவற்றும் சரீரம் என்கிருர்கள இவை முதலியது உதாஹரணம். மற்ற ஸித்தாந்தங்களில் ஒப்புக்கொள்ளாதவரைக்கும் இவற்றை **ப்ரதிதந்த்ரம்** என்கிறது. அவற்றை மற்றொரு ஸித்தாந்த ப்ரவர்த்தகனும் ஒப்புக்கொள்ளுவதாகில அப்பொழுது அவற்றை **அப்யுபகம** ஸித்தாந்தம் (பிறர் இசைந்தது) என வேண்டும். புதிதாக ஸித்தாந்தப்ரவர்த்தகர் ஏற்படமாட்டார் எனவொண்ணுது. அப்படியாகில் முதல் ஸித்தாந்தமொன்றேயன்றோ மிச்சப்படவேண்டும். மற்ற ஸித்தாந்தம் இருக்கமாட்டாதே. 'பிற்பட்ட ஸித்தாந்த பிரவர்த்தகர்கள் முற்பட்டவர் ஸித்தாந்தங்களை ஒப்புக்கொள்ளக்கூடாது' என்பதுவும் ஸரியன்று. புதிதாக ஒரு அர்த்தத்தைச் சேர்த்தும ஏற்பட்டிருபபதை விலக்கியும் இப்படி வேறுமைகளை இப்பொழுதும் காண்கிறோமே. மேலும ஸித்தாந்த தத்வமானது அவரவர் அபிமானத்தின்பேரில் ஏற்படுகின்றது. ஆகவே பிறர் இசையாவிடில் ப்ரதிதந்த்ரமாகவும இசையும்கால அப்யுபகம ஸித்தாந்தமாகவும் ஒன்றே இருக்கக்கூடும.

(3) தமது ஸித்தாந்திகளிலே சிலர் இசையாததாயும் இதர ஸித்தாந்தத்திற்கும் பொதுவாகவும் உள்ளதை **அப்யுபகம** ஸித்தாந்தம் என்கிறது.

உதாஹரணம:— நையாயிகர் முதலியோர் ஸாமான்யம, விசே

க்ஷம், ஸமவாயம் முதலியவற்றை இசைகிறார்கள். இவை வைசேஷிகதந்த்ரத்தில் ப்ரஸித்தமானவை. இவற்றை நையாயிகர் சிலர் இசைந்திருக்கிறார்கள். ஜைனர் இசைந்தது 'பேதமும் அபேதமும்' ஒவ்வொரு வஸ்துவுக்கும் உண்டு என்பது. இதை ஸாங்க்ய மதஸ்தரும் பின்பற்றுகிறார்கள். பௌத்தர் உலகம் பொய் என்கிறார்கள். அத்வைதிகள் அதை அநுசரிக்கிறார்கள். இதர ஸித்தாந்தத்திலே நிராஸிதமாய்த் தமது ஸித்தாந்தத்திலும் ஸ்வீகரிக்கப்பட்டது என்றோ 'மதாந்தரத்தில் உள்ளவற்றைப் பற்றி விசேஷித்து நிரூபணம் செய்வது என்றோ' சிலர் சொல்லுகிறார்கள். இங்கு தமது ஸித்தாந்தத்திற்கும் பிற ஸித்தாந்தத்திற்கும் பொதுவாக உள்ளது என்பது தீர்மானிக்கப்பட்ட லக்ஷணமாகும் என்ப.

(௫) ஒரு வஸ்துவை ஸாதிக்கும்போது அதைத்தொடர்ந்து மற்றொரு வஸ்து ஸித்திப்பது; **ஆதார ஸித்தாந்தம்** என்பதாகக் கொண்டு, முன் கூறிய மூன்று ஸித்தாந்தங்களோடு இதையும் சேர்த்து "ஸித்தாந்தம் நான்கு" என்பதாக சிலர் விபாகம் சொல்கிறார்கள். "பூமி முதலியவற்றைப் படைத்தவன் ஒருவன் இருக்கவேண்டுமென்பதாக அநுமானம் செய்யுமிடத்தில் அந்த கர்த்தாவானவன் ஸர்வஜ்ஞனான ஈச்வரன் ஒருவன் ஸித்திப்பது முதலியது, இதற்கு உதாஹரணம் என்பதாக.

கௌதம முனியும் ஸித்தாந்தம் நான்கு விதம் என்பதாக உபக்ரமித்து 'எந்த வஸ்துவானது ஸித்திப்பதன் மூலம் மற்றொரு வஸ்துவானது ஸித்திக்கின்றதோ அது **அதிகரண ஸித்தாந்தம்**" என்பதாகச் சொல்லியிருக்கிறார் (ஸி) அது தவறு. அந்த வஸ்துவானது எல்லோரும் இசைந்ததாகில் இதுவும் முன் கூறிய **ஸர்வதந்த்ர** ஸித்தாந்தமேயாகிறது. தமது ஸித்தாந்தமொன்றிலேயே ஒப்புக்கொள்ளப்பட்டதாகில் **ப்ரதிதந்த்ர** ஸித்தாந்தமென்று தேறுகிறது. மற்ற ஸித்தாந்திகளிலும் சிலர் ஒப்புக்கொண்டதாகில் **அப்யுகம** ஸித்தாந்தமென்றதாகிறது. ஆகவே நான்காவதாக இதை இசைய வேண்டியதில்லை. ஆகிலும் ஒரு வஸ்து ஸித்திப்பதைப் பின்பற்றி மற்றொரு வஸ்து ஸித்திப்பதன் மூலம் "இது இன்னாருடைய ஸித்தாந்தம்" என்பதாகத் தீர்மானம் ஏற்படுகின்றது. இப்படி அந்த தீர்மானத்திற்கு இது ஹேதுவாகமாத்திரம் ஆகின்றது என்றிவ்வளவு ஏற்றத்தைக்கொண்டு இதைத் தனித்தொரு ஸித்தாந்தமாகக் கொள்வதாகில் அப்படியே கொள்க. இவ்வாறு அபஸித்தாந்தம் என்கிற நிக்ரஹஸ்தானம் நிரூபிதமாயிற்று.

(சுலோ) 1 'ஸம்ஸ்க்ருத பாஷையாலே வியவஹாரம் செய்யவேண்டும்' என்று வ்யவஸ்தை ஏற்பட்டிருந்தால் வியாகரணப் பிழையுள்ள சப்தங்களாலேயோ மற்ற தமிழ் பாஷை முதலியவற்றாலேயோ பேசுவதும் தூஷணமாகும்.,

2 அப்படி யாதொரு வ்யவஸ்தையும் செய்யப் பெறவிடில் எல்லா பாஷைகளாலும வியவஹாரம கூடும். தவறு ஏற்பட்டதாகில் மறுபடியும ஸமீசீன சப்தத்தைப் பிரயோகம் செய்யலாம என்பதாக.

(பூ) இப்படியாகில் ஸம்ஸ்க்ருத பாஷையாலேயே வியவஹார நியமத்தைத் தானே ஏற்படுத்தி, அதை மாற்றுவதால் **அவாசகம்** என்பது தனித்தொரு நிக்ரஹஸ்தானமாக வேண்டுமோ? **உக்தவிரோதம்** என்பதாக முன் கூறிய நிக்ரஹஸ்தானத்திலேயே இதுவும் அந்தர்பூதமாகலாமே எனில்-(ஸி) இந்த ஆக்ஷேபம் ஸரியானதே; ஆகிலும் 'பிராகிருதம் முதலிய அபசப்தத்தை பிரயோகம் செய்வதானது' காரணாந்தரமன்றிக்கே தானே தூஷணமாகிறது மேலும் அபசப்தத்தை பிரயோகிப்பதன் மூலம் உக்தவிரோதம என்கிற நிக்ரஹஸ்தானம் ஏற்படுவதால் உக்தவிரோதத்திற்கு இதுவே காரணமுமாகின்றது. ஆகவே அவாசகத்தைத்தனித்ததொரு நிக்ரஹ ஸ்தானமாகக் கொணடது.

வாதத்தில் வியவஸ்தை ஏற்பட்டிராவிடில் எல்லா பாஷைகளாலும் வியவஹாரம் செய்யலாம் என்பதாக ப்ரஜ்ஞாபரித்ராணத்தில் சொல்லியிருக்கிறதே; இங்கு 'எல்லா பாஷைகளாலும் என்றது வாதிகள் இருவரும் இசைந்துள்ள அபபாஷை யொன்றைக் குறிக்கின்றதேயன்றி வாதிகள் அவ்வப்பொழுது இஷ்டம்போல் ஏதேனும் பாஷைகளை ப்பிரயோகம் செய்யலாமென்பதற்காகவன்று. அப்படியாகில் பிரதிவாதிக்குப் பரிசயமில்லாத பாஷையாலும் வியவஹாரம் கூடுமாகையால் ஒருவர் சொல்லிய வார்த்தையை மற்றொருவர் அறியாமையால் வாதிகளின் வாதபரிச்ரமமானது வீணாகுமே,

ஆகவே வாதிகள் இருவரும் பரிசயம் செய்ததாகவும் 'இன்ன பாஷை' என்று வ்யவஸ்தை ஏற்படுத்தி அங்கீகாரம செய்துள்ளதுமான பாஷையினாலேயே வியவஹாரம் செய்ய வேண்டுமென்புதாக **அவாசகம்** என்கிற நிக்ரஹஸ்தானத்தை நிரூபணம் செய்ததற்குப் பிரயோஜனம். இந்த நிக்ரஹஸ்தானமானது முதல் கக்ஷிமுதல் எல்லா கக்ஷிகளிலும் நேரக்கூடும

அப்பொழுதே இதை வாதியானவன் எடுத்துக் காட்டவேண்டும்.

### 7 அநந்விதம்.

ஒன்றுக்கொன்று தகுந்த ஸம்பந்தம் பெறாத சப்தத்தைப் பிரயோகிப்பது **அநந்விதம்** என்கிற நிக்ரஹஸ்தானமாகும். பதங்களுக்குப் பரஸ்பரமும் வாக்யங்களுக்குப் பரஸ்பரமும ஸம்பந்த மில்லாமையையிட்டு, அது இரண்டு விதமாகின்றது. கம்பம், குடம், சுவர் இது முதலான சப்தம் பதங்களுக்கு பரஸ்பரம ஸம்பந்தமில்லாதது. முதல் அநந்விதத்திற்கு இது உதாஹரணம். 'பர்வதம் அக்நியை உடையது' 'ஜலத்தில நாரை என்கிற பக்ஷி இருக்கிறது' என்றுப் போலுள்ள வாக்யங்களுக்கு பரஸ்பரம் ஸம்பந்தம் கிடையாது. இது இரண்டாவது அநந்விதத்திற்கு உதாஹரணம். 'பர்வதம அக்நியை உடையது' தேவதத்தனுல் சாப்பிடப்பட்டது என்கிற அர்த்தத்தில 'கிரிர்புக்தம், அக்நிமான், தேவதத்தேந' என்று பிரயோகிப்பதும அநந்விதமே யாகும். இங்கு முதல் பதத்திற்கு மூன்றுவது பதத்தோடும் இரண்டாவது பதத்திற்கு நான்காவது பதத்தோடும் விலகிய ஸம்பந்தமுள்ளது. இதனுல் முன கூறிய அர்த்தத்தின் ஜ்ஞானம ஏற்படுவதில்லை. பதாநந்வயம, வாக்யாநந்வயம் என்கிற இரண்டும ஸரியான அர்த்தத்தைப்பற்றிய ஜ்ஞானத்தை யுண்டுபண்ணுமையாலேயே நிக்ரஹஸ்தானத்தில் சேர்ந்தது. அந்த ந்யாயம பதங்களுக்கு விலகிய ஸம்பந்தமுள்ள இங்கும் துல்யம. ஆகவே இதுவும அநந்விதமேயாகும்.

(பூ) **அப்ராப்தகாலம்** என்பதாக மேலே சொல்லப் போகிற நிக்ரஹஸ்தானத்திற்கும பதங்களுக்கு விலகிய ஸம்பந்தமாகிய இந்த நிக்ரஹஸ்தானத்துக்கும வேற்றுமையில்லையே; **அப்ராப்தகாலமாவது**- வாதம் முதலியவற்றிற்கு ஏற்படுத்தியுள்ள க்ரமத்தை மாற்றுவதேயன்ரே ? இந்த அநந்விதத்திற்கும இந்த மாற்றுதலுண்டேயெனில்- (ஸி) அப்படிக்கு அன்று; 'ச்லோகரூபமாகவே வாதம நடைபெற வேண்டும், என்கிற நியமம் ஏற்பட்டிருந்தால் அந்த வாதத்தில் ச்லோகங்களுக்கு முன்பின் பதங்கள் மாறுதலால் தோஷமென்பதில்லை. இந்த மாறுதலை வாதிகள் பொறுத்துக் கொள்ளவே வேண்டும். ஆகிலும் நீண்ட தூரத்திலுள்ள பதத்தோடு மற்ருெரு பதத்திற்கு ஸம்பந்தமானது தூஷணமே யாகும்.

இந்த தூஷணம் மேற்சொல்லப்போகும் அப்ராப்தகாலம் என்கிற நிக்ரஹஸ்தானத்தில கிடையாது. அதில் பதங்களுக்கு தூராந்வயம் என்பதில்லையே. ஆகவே இந்த அநந்விதமும் அப்ராப்தகாலமும் தனித் தனியே நிக்ரஹஸ்தானங்களாகக் குறையில்லை,

**'விகல்பவிசேஷாநந்வயம்** என்பதாக அநந்விதத்தில் மூன்ருவது பிரிவு ஒன்றுண்டு' என்கிருர்கள் நையாயிகர். அதாவது- பதங்களுக்கு பரஸ்பரம் ஸம்பந்தமானது எதோடு நேரக்கூடியதோ, அந்த ஸம்பந்தம் யாவற்றையும் 'இப்படியா அல்லது 'இந்த விதமா' என்று வாதியானவன் விகல்பஞ செய்கிருன். அந்த விகல்பததைப் பிரதிவாதி இசையாவிடில இதற்கு விகல்பவிசேஷாநந்வயமென்று பெயர். இது அந்த மூன்ருவது பிறிவு. என்பதாக

(பூ) நநு ஆகாங்க்ஷை, ஆஸத்தி, யோக்யதை ஆகிய இம்மூன்ருலும் பதங்களுக்குப். பரஸ்பரம் ஸம்பந்தம் ஸித்திக்கிறது. ப்ரக்ருதி ப்ரத்யயங்களு (பகுதி விகுதி) க்கு முன்னும பின்னுமாக நியதஸம்பந்தத்தை ஆகாங்க்ஷை என்கிறது. எந்த அர்த்தங்களுக்கு பரஸ்பரம் ஸம்பந்தம் ஏற்படவேண்டுமோ ; அந்த அர்த்தங்களை போதிக்கும் பதங்கள் வ்யவஹிதங்களாகாமல் ஸந்நிஹிதங்களாகைக்கு ஆஸத்தி என்று பெயர். யோக்யதையாவது- அந்வயம் பெறவேண்டிய பதார்த்தஙகளுக்கு அந்வயவிரோதமில்லாமை. அம்மூன்றில ஒவ்வொன்றிராவிடினும் அந்வயமென்பது கிடையாதென்று ஸித்திக்கிறது. ஆகவே எந்த வாக்யங்களில் முன் கூறிய ஆகாஙகைக்ஷ, ஆஸத்தி இவை இல்லையோ ; அங்கு அநந்வயம என்கிற நிக்ரஹஸ்தானத்திற்கு இடமுண்டு. எந்த இடத்தில் முன் கூறிய யோக்யதையானது இல்லாமையால அந்வயமில்லையோ, அங்கே முன் கூறிய உக்தவிரோதம் என்கிற நிக்ரஹஸ்தானத்தையே இசையலாமே பரஸ்பரம் விரோதமிருந்தாலன்றி யோக்யதை இல்லாமையைக் காட்டமுடியாதே. (ஸி) எனில்–இவ்வாறே ஆகுக. ஆனுலும ஆகாஙகைக்ஷயும் ஆஸத்தியும் இல்லாமையால ஏற்படும் அநந்வய ஸ்தலத்தில் விரோதத்திற்கு அவகாசமில்லை. இபபடி இந்த விஷயம் வேறுபட்டிருப்பதை யிட்டு அநந்வயமும் உக்தவிரோதமும் பரஸ்பரம் வேறுபட்ட நிக்ரஹஸ்தானஙகளாகின்றன.

(பூ) நநு ஆகாங்க்ஷையும் ஆஸத்தியுமில்லாமையால் ஏற்பட்ட அநந்வயமானது உக்தவிரோதத்தில் வேறுபட்டதே ; ஆகிலும் விரோதமுள்ள இடமெங்கும் முன் கூறிய யோக்யதையில்லாமையானது நியதமாய் உண்டு. ஆகவே யோக்யதையில்லாமையால் ஏற்பட்ட அநந்வயத்தில் உக்தவிரோதமானது அந்தர்பூதமாகிறதே. வேறுபட்டதன்றோ; (ஸி)எனில் இது உண்மை தான்'; ஆகிலும் அர்த்தங்கள் பரஸ்பரம் அந்வயிக்க யோக்யதையில்லாமைக்கும் காரணம், அவைகளுக்குள்ள பரஸ்பரவிரோதமே. ஆகவே அயோக்யதைக்கும் விரோதமே காரணமானது என்கிற விசேஷத்தையிட்டு **விரோதத்தையே** காட்டவேண்டும். அதனால விரோதமானது தனித்தவொரு நிக்ரஹஸ்தானமாயிற்று.

(பூ) விரோதமானது பதார்த்தங்களுக்கு அந்யோந்யம் ஸம்பந்தமில்லாமையாகிற **அநந்விதத்திற்கும்** காரணமாவதைப் பற்றி **விரோதத்தைத்** தனிதது நிக்ரஹ ஸதானமாகக் கொணடதாகில் அப்படியே ஆகாங்க்ஷையில்லாமையும் ஆஸத்தியில்லாமையும் அநந்வயத்திற்குத் தனித்தனியே காரணமாவதைப்பற்றி **விரோதத்தைப்** போலவே அவற்றையும் தனித்தனியே நிரூபிக்க வேணடாவோ ? (ஸி) எனில் அப்படியன்று. ஆகாஙகைஷயும் ஆஸத்தியுமில்லாவிடில் பதார்த்தஙகளுக்குப் பரஸபரம அந்வயத்தைப் பற்றிய போதமே ஒருவனுக்கும் ஏற்படுவதிலலே. ஆகையால **அந்வயபோதத்தையுண்டுபண்ணுமை** என்ற ஆகாரம் அவவிரணடிற்கும பொதுவானது. பொதுவான அவவாகாரத்தை யிட்டு ஆகாஙகைஷயினமையையும் ஆஸத்தியின்மையையும் ஒன்ருகக்கொண்டது. யோக்யதையிலலாத விடத்திலப்படியன்று. அந்வயபோதமானது சப்தங்களுக்குள்ள ஆகாஙகைஷ ஆஸத்தி இவ்விரண்டாலும் உணடாகிவிடுகிறது. ஆகவே **அந்வயபோதத்தையுண்டுபண்ணுமை** என்கிற ஆகாரமானது **அயோக்யதாமாத்ரத்திற்குக்** கிடையாது. சப்தத்திஞல் ஸ்வரஸமாக அந்வயபோதமுண்டான பிறகு அதை பாதிக்குமதாகிய **விரோதத்தையே** காட்டவேணடும்.

(பூ) இப்படியாகில் **உக்தவிரோதம்** என்கிற நிக்ரஹஸ்தானத்திற்கும் பாதம (வ்யாய:) என்கிற ஹேது தோஷத்திற்கும் வாசியில்லையே; இரண்டிடங்களிலும் பதார்த்தங்களுக்கு அந்வயவிரோதமேயன்ருே ஏற்படுகிறது.

(ம்) என்பதாக நினைக்கக்கூடாது. ஏனெனில் வஞ்சகர் முதலியோர் வார்த்தையிலும் பிரதிவாதி வாக்யத்திலும் இரண்டு பதார்த்தங்களுக்கும் இயற்கையாக விரோதமில்லாமையால் பொதுவாக முதலில் எங்கு போதம் உண்டாகியிருக்கின்றதோ; பிறகு மற்றொரு பிரமாணத்தை நிரூபணம் செய்வதன் மூலம் அந்த போதத்திற்கு பாதம் (வாய) ஏற்படுகின்றதோ: அங்கு அவ்வப் பிரமாணங்களால் ஏற்படும் பாத (வாய)மென்கிற தோஷத்தையே காட்டவேண்டும். உண்மையில் அவ்வப் பிரமாணங்களால் ஏற்படும் விரோதமானது இரண்டு பதார்த்தங்களுக்கும் விசேஷித்து ஏறகனவே இருக்கின்றதேயாகிலும் அந்த விரோதத்தை பிரமாண பாத (வாய)த்தைக்கொண்டே நாம் அறிகின்றோம். ஆகவே இவ்வறிவுக்குக் காரணமாகின்றமையால் பாத தோஷத்தையே காட்டவேண்டும். எங்கு இயற்கையாக பதார்த்தங்களுக்குள்ள பரஸ்பர விரோதமானது, மற்றொரு பிரமாணத்தை நிரூபணம் செய்யாதிருக்கச் செய்தே சப்தத்தைக் கேட்கும்போதே ஸ்பஷ்டமாய் தோன்றுகிறதோ அங்கு **உக்த விரோதம்** என்கிற நிக்ரஹஸ்தானத்தை உபயோகம் செய்யவேண்டும். இப்படி உக்த விரோதத்திற்கும் பாதத்திற்கும் உள்ள வாசியைக் கண்டுகொள்ளவும்.

## (8) அப்ராப்தகாலம்.

வாதத்திற்கு ஏற்படுத்தியுள்ள க்ரமத்தை மாற்றுவதை **அப்ராப்தகாலம்** என்கிறது.

உதாஹரணம்:— (1) ஸபையோரையும் யஜமானனையும் ஏற்பாடு செய்வது முதலியதைத் தவிர்த்து வாதம் ஆரம்பித்தால் அது **வாதாரம்பவிபர்யாஸம்** (2) பிரதிஜ்ஞை, ஹேது, உதாஹரணம் முதலியவற்றை க்ரமமன்றிக்கே மாற்றி பிரயோகிப்பது **அவயவவிபர்யாசம்** (3) சப்தம் அநித்யம் என்று சொல்ல வேண்டியிருக்க அநித்யம் சப்தம் என்று மாற்றிச் சொல்வது **அவயவாம்ச விபர்யாசம்** (4) "பிரமாணத்தைக் காட்டியபிறகு அதற்கு உதவியாக தர்க்கத்தைப் பிரயோகம் செய்யவேண்டும்" என்கிற நியதியிருக்க அதை மாற்றி முதலில் தர்க்கத்தைச் சொல்லி பிரயோகிப்பதாகில் அது **அங்காங்கிவிபர்யாஸம்** (5) வாதி சொல்லியது எல்லாவற்றையும் தூஷிக்காமலே பிரதிவாதியானவன் தனது பக்ஷத்தை அது ஸாதிக்குமாகில் **வாதவிபர்யாஸம்** (6) வாதிசொல்லியக்ரமத்தை மாற்றி அனுவாதம்செய்வது முதலியதும் இவ்வாறாக **அப்ராப்தகாலமே**யாகும் "பிறருக்கு

ஜ்ஞானம் உண்டாவதற்காகவேயன்றோ நாம் வாக்யத்தைப் ப்ரயோகம் செய்கிறோம்; வாக்யத்தைமாற்றிச் சொன்னாலும் ஜ்ஞானம் உண்டாய்விடுகின்றதே'' என்கிற எண்ணத்தினால் இவ்விபர்யாஸமானது வாதிகளுக்கு நேரக்கூடும். ''இன்ன ரீதியில வாதம் செயவது'' என்று பரஸ்பரம நியமம்செய்து கொண்டு வாதம செய்யுமிடத்தில் தாம் இசைந்துள்ள ரீதியை மாற்றுவது கூடாது என்று இந்த நிக்ரஹஸ்தாநத்தினால் ஏற்பட்டுள்ள ரஹஸ்யமாகும். நியமம் செய்துகொள்ளாமல் வாதி ப்ரதிவாதிகள் செய்யும் வாதத்திலும் ஜயாபேக்ஷையின்றிக்கே தத்வ நிர்ணயத்திற்காகச செய்யும் வாதத்திலும் ''அநித்யம் சப்தம்'' என்றாற்போல் மாற்றிச்சொல்லுவது பாதகமில்லை. அப்படிமாற்றுவதிலும் எளிதில் அர்த்தஜ்ஞானம் உண்டாய் விடுகிறதன்றோ. ஆகையால் மாற்றுதலை ஸஹித்துக்கொள்ளவும் இவ்வாறாக வாதிவாக்யத்தை ப்ரதிவாதியானவன் மாற்றி அநுவாதம் செய்தலும் நியமம் செய்துகொள்ளாவிடில் கூடும் என்றாற்போல் கண்டுகொள்ளவும்

## (9) அவிஜ்ஞாதார்த்தம்

மூன்று முறை வெவ்வேறு ரீதியில் சொல்லியும் ஸபையோர் ப்ரதிவாதி இவர்களுக்குள் ஒருவருக்கும் புலப்படாத அர்த்தத்தையுடைய வாக்யத்தை **அவிஜ்ஞாதார்த்தம்** என்கிறது. (1) அப்ரஸித்தப்ரயோகமென்றும் (2) ஸ்வஸித்தாந்த மாத்ரஸித்தப்ரயோகமென்றும் (3) அர்த்தாந்தர ஸாதாரண ப்ரயோகமென்றும் இவ்வாறாக இது பலவிதம். அவற்றில் (1) அப்ரஸித்தப்ரயோகமாவது;— அஹார்யமானது வீதிஹோத்ரமுடையது என்றாற்போலுள்ள ப்ரயோகம். பர்வதமானது அக்நியோடு கூடியது என்பதாக இதன்பொருள். ஆனால் அஹார்யசப்தமும வீதிஹோத்ர சப்தமும் உலகத்தில ப்ரஸித்தமாக ப்ரயோகிக்கப்படுவதில்லை ; ஆகவே இதை அப்ரஸித்த ப்ரயோகம் என்கிறது. இவ்வாறாக உதாஹரணம் கண்டு கொள்ளவும் (2) மற்றொரு ஸித்தாந்தத்தில் ப்ரயோகிக்கப பெறாததாய் தமது ஸித்தாந்தத்தில் மாத்திரம் ப்ரயோகிக்கப் படுமதை ஸ்வஸித்தாந்த மாத்ரஸித்த ப்ரயோகமென்கிறது. அதாவது:— ரூபம், வேதனை, விஜ்ஞானம், ஸம்ஜ்ஞை, ஸம்ஸ்காரம், என்பதாக **பஞ்சஸ்கந்தம்** (ஐந்து பிறிவு) பௌத்தமதத்தில் இசையப்படுகிறது. அவ்வாறே ஐந்து இந்திரியங்கள் சப்தம் முதலிய ஐந்து விஷயங்கள், மனசு, தர்மம், ஆகிய **த்வாதசாய**

தநம் (பன்னிரண்டு ஆயதநம்) என்றும் ஒப்புக்கொள்ளப்படுகிறது. ஜைந மதஸ்தரோவெனில் அனேக தேசங்களிலிருக்குமதாகிய த்ரவ்யத்தை **அஸ்திகாயம்** என்கிறார்கள். ரூபம், ரஸம் முதலியவற்றோடு, கூடிய த்ரவ்யத்தை **புத்கலம்** என்ற பெயரால் வழங்குகிறார்கள். இவ்வாறாக **அஸ்திகாயம்** என்கிறபொதுப் பெயராலும் **புத்கலம்** முதலிய விசேஷ நாமங்களாலும் வழங்குவது ஜைந மதத்திற்கே உரியது. பாதஞ்ஜலமதமெனப்படும் யோகதர்சநத்தில் யதமாநஸம்ஜ்ஞை முதலிய பிரயோகம் காண்கிறது. (1) ஆசை முதலியவற்றை அடக்குவதற்காக பிரயத்நம் செய்யும் நிலையை **யதமாநஸம்ஜ்ஞை** என்கிறது. (2) ராகம் முதலியவை அடங்கியபிறகு அவற்றுக்குள்ள வேற்றுமையை அறிவது **வ்யதிரேகஸம்ஜ்ஞை** (3) அவை மநஸ்ஸிலே மாத்திரம் ஓர் ஆகாரத்தால் இருந்து மற்ற இந்திரியங்களை விஷயங்களில தூண்டக்கூடிய சக்தியற்று கிடக்கும நிலை **ஏகேந்திரியஸம்ஜ்ஞை** (4) இஹலோகத்திலும ஸ்வர்காதி லோகங்களிலும் உள்ள போகங்கள் அல்பமும அஸ்திரமும துக்கமயமாகவும் இருக்கும் நிலையை அநுஸந்தித்து அவற்றில ஈஷத்தேனும் ஆசையற்று உபேக்ஷிக்கும் நிலையை **வசீகாரஸம்ஜ்ஞை** என்கிறது. இவ்வாறாக யோகதர்சநஸ்தர் பிரயோகிக்கிறார்கள். மீமாம்ஸகரோவெனில் கத்தியைப்போன்ற உருவுடையதாய் முப்பத்தியாறு அங்குலம் நீண்டதும் மரத்தினால் செய்யப்பெற்றதுமான ஒருவஸ்துவை **ஸ்ப்யம்** என்கிறார்கள். புரோடாசத்தை சமைப்பதற்கு ஆதாரமாயிருப்பதொரு மண் பாத்திரத்துண்டை **கபாலம்** என்று வழங்குகிறார்கள். இவ்வாறாக உள்ளது மீமாம்ஸக மதத்தில் பிரயோகம். வேதாந்திகளோவெனில (1) அக்நி, (2) ஸூரியன், (3) வாயு, (4) ஆகாசம், (5) ஜலம், (6) பூமி, இவற்றை முறையே (1) ஸுதேஜஸ்ஸு )2) விச்வரூபம் (3) ப்ருதக்வர்த்மா (4) பஹுல; (5) ரயி; (6) ப்ரதிஷ்டா என்கிற பதங்களாலே வழங்குகிறார்கள். இவ்வாறாக அவரவர் தம ஸித்தாந்தமொன்றிலேயே வழங்குமதை விவாதகாலத்தில் பிரயோகம் செய்வதால் **ஸ்வஸித்தாந்தமாத்ரஸித்தப்ரயோகம்** என்கிற நிக்ரகஸ்தாநம் ஏற்படுகிறது (3) ஸாதாரண ப்ரயோகமாவது ஶ்வேதோ தாவதி' லோஹிதாச்வவாநு 'மஹீப்ருத்லோஹிதாச்வவான்' என்றாப்போலுள்ளது. பர்வதமானது அக்நியோடு கூடிய என்கிற அர்த்தத்திற்கும, அரசன் சிவந்தஅசுவமுள்ளவனென்பதற்கும் பொதுவானது இந்தவாக்யம். இதைக்கேட்டமாத்ரத்தில் இவ்விரண்டில் இன்னதுதான்

அர்த்தம் என்பதை தெளிவதற்கில்லை. ஆகவே இது அவிஜ்ஞாதார்த்தத்தின் பிரிவைச்சேர்ந்ததாகும். (4) ஓர் அர்த்தத்தை ஸாக்ஷாத்தாக ஸமுதாய சக்தி என்கிற ரூடியினால் காண்பிக்க வேண்டுமிடத்தில அவயவசக்தி எனப்படும் யோகசக்தியை மாத்திரம் கொண்ட சப்தத்தை பிரயோகம்செய்வதைக் கேவலயோகமூலப்ரயோகம் என்கிறது. உதாஹரணம்— குடத்தைப் போலவே சப்தமும, உண்டாகின்றமையால, நாசமுடையது. என்பதற்குப் பதிலாக இவவாறு ஒருவன் பிரயோகிக்கிறான. அதாவது பாற்கடலில் பிறந்தவளுடைய பர்த்தாவின் ஸதானத்திலுள்ள விசேஷ குணமானது, பின்னிட்ட எல்லையோடு கூடிய வஸ்துவில் உள்ள தர்மத்தோடு கூடியது, முன்னிட்ட எல்லையோடுகூடிய வஸ்துவிற்குள்ள தர்மமிருப்பதால் தண்டம் முதலியவற்றின் வியாபாரத்தினால ஏற்படும் இரண்டு அவயவ ஸம்யோகத்தை அஸமவாயி என்கிற காரணமாகக் கொண்ட த்ரவ்யம்போலே; என்பதாக அந்த ப்ரயோகம பாற்கடலில் பிறந்தவள—லக்ஷ்மி, அவளுடைய காந்தனுடைய ஸ்தானம—ஆகாசம, அதன் விசேஷ குணம்—**சப்தம்** என்று கருத்து—இப்படி பக்ஷமாகிய சப்தத்தை நிர்தேசித்தது "நாசமுடையது" என்கிற ஸாத்யத்தை மேலே நிர்தேசிக்கிறது. அநித்ய வஸ்துவிற்கு ப்ரகபாவம் என்றும த்வம்ஸம் என்றும் இரண்டு எல்லைகள உண்டு. பின்னிட்ட எல்லையோடுகூடிய வஸ்துவில் தர்மமாவது--த்வம்ஸம், அதோடுகூடியது என்பதாக ஸாத்யநிர்தேசம்செய்தது. முன்னிட்ட எல்லையோடுகூடிய வஸ்துவிற்குள்ள தர்மமிருப்பதால" என்பதால் "ப்ராகபாவமுடையதாகையால்" என்று ஹேதுவை நிர்தேசித்தது. அதற்குமேலே உதாஹரண நிர்தேசம், குடத்திற்கு இரண்டு கபாலங்களின் சேர்க்கையை நையாயிகர் **அஸமவாயிகாரணம்** என்பார்கள். அந்த சேர்க்கைக்குக் காரணம தண்டத்திலுள்ள க்ரியையேயாகும். ஆகவே தண்டத்தின் க்ரியையினால் ஏற்பட்டுள்ள கபால ஸம்யோகத்தைக் காரணமாகக்கொண்ட **த்ரவ்யம்** என்பது குடம் என்று தேறியது. இவ்வாறாக பிரயோகிப்பதனால் அர்த்தம் எளிதாக புலப்படுவதில்லையாகையால் கேவலயோகமூல **ப்ரயோகத்தை** அவிஜ்ஞாதார்த்தம் என்கிற நிக்ரஹஸ்தானத்தில் சேர்த்தது. இவ்வாறாக மற்றும் உதாஹரணம் காண்க.

"ஸ்பஷ்டமாகச் சொன்னால் தமது வாக்யங்களின்பேரில் ஏதேனும் தோஷங்களை பிரதிவாதியானவன் காட்டிவிடுவான்" அப்படி தோஷத்தை அவன் "காட்டாதொழியவேண்டும் என்கிற எண்ணத்தினாலோ "பிரதிவாதியைப் ப்ரமிக்கச் செய்ய

வேண்டும் இத்யாதி எண்ணத்தினலோ அவிக்ஞாதார்த்தம் என்கிற நிக்ரஹஸ்தாநத்திற்கு அவகாசம் ஏற்படுகிறது. வாதியானவன் ப்ரயோகிக்குமதானது ஸபையோருக்கு பிரஸித்தமானதாயிருக்கவேண்டும். அநேக அர்த்தங்களுக்குப் பொதுவானதாக இராமல் குறிப்பிட்ட அர்த்தத்திற்கு அஸாதாரணமாக வேண்டும்; கேவலம் யோகசக்தியையே உடையதாகக்கூடாது; எழுத்து, பதம் இவை லுப்தங்களாக பிரயோகம்கூடாது. எழுத்துக்களை ஸ்பஷ்டமாக அறியாவண்ணம் மிகவும் வேகமாய உச்சரிக்கக்கூடாது. இவ்வாறன தோஷங்கள் கலசாத பதங்களை வாதிகள் பிரயோகிக்கவேண்டும் என்பதாக அவிஜ்ஞாதார்த்தம் என்கிற நிக்ரஹஸ்தாநத்தை நிரூபணம் செய்ததற்கு உபயோகம்.

ப்ரஹேளிகை என்பதாக க்ரந்தமொன்றுண்டு (1) ஸமாகதா (2) வஞ்சிதா (3) வ்யுத்க்ராந்தா என்றிவ்வாறக அது பதினறு விதம். (1) பதங்களுடைய ஸந்திவிசேஷத்தினல் அர்த்தம் இன்னது என்று அறியமுடியாதிருக்கும் க்ரந்தத்தை ஸமாகதா என்கிறது. (2) கேவலம் ஸமுதாய சக்தி (ரூடி) யுள்ள பதங்களால் பிறரை வஞ்சிக்கக்கூடிய க்ரந்தத்தை வஞ்சிதா என்கிறது. (3) தூராந்வயத்தால் மோஹிக்கச் செய்யுமதை வ்யுத்க்ராந்தா என்கிறது. இவ்வாறக ப்ரஹேளிகையின் ஸ்வரூபத்தை காவ்யாதர்சம் முதலிய க்ரந்தங்களில் பறக்க நிரூபணம் செய்திருக்கின்றர்கள். பிரதிவாதியை ப்ரமிக்கச் செய்வதற்கு இது உபயுக்தமானது. பிரதிவாதி இசையும்பக்ஷத்தில் இப்படி ப்ரஹேளிகையைச் சேர்ந்துள்ள பிரயோகங்களும் கூடும் அநுமாநாத்யாயம் முதல் ஆஹ்நிகத்தில் மஹாவித்யாநுமானம் காண்பிக்கப்பெற்றுள்ளது. அந்த ரீதியானது பிறரை மயங்கச்செய்வதற்கேயாகிறது. அதையும் வாதிகள் நாம் க்ஞானிகள் என்கிற கொழுப்பினல் கையாளலாம். வாதிகள் இசைவதனலேயேயன்றோ இந்த ரீதியைப் பின்பற்ற முடிந்தது. அப்படியே பிரதிவாதி இசையும் பக்ஷத்தில் ப்ரஹேளிகைபோன்றவற்றைப் பிரயோகிப்பதும் கூடும் என்ப.

## (10) அர்த்தாந்தரம்

விவாதத்திற்கு உபயோகமில்லாததைச் சொல்வது அர்த்தாந்தரம் எனும் நிக்ரஹஸ்தானமாகும். பூமி முதலியதற்கு கர்த்தா ஒருவன் உண்டு. ஏனெனில் அது ப்ரமை (நல்லறிவுக்கு விஷயமானதாகையால், என்று வாதியானவன் 'பிரயோகித்தவுடன் ஏதேனும் தனக்குள் தூஷணம் தோன்றவே உபயோகமில்லாத ஏதேனுமொன்றைச்சொல்ல ஆரம்பிக்கக்

கூடும். அதாவது ப்ரமைக்கு விஷயமானதை **ப்ரமேயம்** என்கிறது. **ப்ரமேயம்** என்கிற பதத்திற்கு மேல் **த்வ** என்கிற ப்ரத்யயத்தைச் (விகுதியை) சேர்த்தால் **ப்ரமேயத்வம்** என்கிற பதம் ஸித்திக்கிறது என்றுப்போலுள்ளது அந்த ப்ரயோகம். இவ்வாறகவே; ஆற்றில வெள்ளத்திலகப்பட்டவன் உபயோகமில்லாததான கரையிலுள்ள நாணல, தர்ப்பம் இவற்றைத் தனக்கு அவலம்பனமாகக் கொள்ளும் கணக்கிலே தனக்குள் தூஷணத்திற்குப் பரிஹாரமாக எண்ணி உபயுக்தமல்லாததான ஏதேனுமொரு ராஜாவைபபற்றிய கதையை ஆரம்பிப்பதும அர்த்தாந்தரமே யாகும். தனது அஜ்ஞானத்தை மறைபபதற்காகவும் பிறரை மோஹிக்கச் செயவதறகாகவும் இந்த அநுபயுக்தவாதமானது வாதிகளுக்கு நேரக்கூடும். ஒன்றுக்கொன்று பொருந்திய அரததமுடையதும் உபயுக்தமுமானதையே வாதியானவன் பிரயோகிக்கவேண்டுமென்று இதனுல் சொல்லப்பட்டது.

## (11) ந்யூநம்

தமது ஸித்தாந்தத்தில் நிர்ணயம செய்துள்ள ப்ரகாரம் சொலலவேணடியவற்றில் ஏகதேசத்தை மாத்திரம் ப்ரயோகம் செய்வதை ந்யூநம் என்கிறது. உதாஹரணம்- 1.'ப்ரதிஜ்ஞை 2. ஹேது. 3. உதாஹரணம் 4. உபநயம் 5. நிகமனம ஆகிய ஐந்து அவயவஙகளை வாதத்தில் ப்ரயோகம் செய்யவேண்டும்' என்பதாக நையாயிகருடைய ஸித்தாந்தம். இவர் மூன்று அவயவஙகளை ப்ரயோகிப்பது ந்யூநம் என்கிற நிக்ரஹஸ்தானமாகும. குமாரிலர் முதலியோர் இரண்டு அவயவங்களைப் பிரயோகிப்பதும ந்யூநம இவ்வாறுகக் கண்டுகொள்வது. இதை 1. அவயவ ந்யூநம் என்பார்கள். 2. தனது பக்ஷத்திற்கு ஸாதகமானதை அலக்ஷயம் செய்துவிட்டு பிறர் பக்ஷத்தை தூஷிக்க விரும்பும் வாதிக்கு வாதந்யூநம என்கிற நிக்ரஹஸ்தானமுணடு. 3. ஸபையோரை ஏற்பாடு செய்தல் முதலியதைச் செய்யாமல் தன் பக்ஷத்தை ஸாதிக்குமவனுக்கு கதாரம்பந்யூநம் என்கிற தோஷமுண்டு

(பூ) இப்படியாகில ந்யூநம் என்கிற நிக்ரஹஸ்தானத்திற்கும் முன் கூறிய அபராப்தகாலம் என்கிற நிக்ரஹஸ்தானத்துக்கும் பேதம் ஒன்றுமில்லையே; அங்கும் கதாரம்பவிபர்யாஸம், அவயவவிபர்யாஸம என்றுப்போல் நிரூபணம் செய்திருக்குமதையேயன்றே அவயவ ந்யூநம், வாதந்யூநம் என்றுப்போலுள்ள பெயர்களாலே இங்கும் சொல்லுகிறோம். (ஸி) என்று சொல்லக்கூடாது; ஏனெனில்- அங்கு க்ரமத்தை மாற்றி ஆச்ரயத்தை மாத்திரம் இசைந்தது; இங்கு, க்ரமம் ஆச்ரயம் இரண்

டையும் விட்டது ; அதாவது-ஸபையோர் முதலியவர்களை ஏற்பாடுசெய்து, பிறகு வாதம்செய்வது என்பது முறை. அதை மாற்றி முதலில் வாதம் ஆரம்பித்து பிறகு ஸபையோர் முத லியவர்களை ஏற்பாடு செய்தல் எனபது வாதாரம்ப விபர்யாஸ மாகும். ந்யூகம் எனும் நிக்ரஹஸ்தானத்திலோவெனில் வாதம ஆரம்பித்தபிறகும்கூட ஸபையோர் முதலியவர்களை ஏற்பாடு செய்தல் கிடையாது. ஆகவே அங்கு 'க்ரமத்தை விட்டது இங்கு ஆச்ரயத்தையே விட்டது' என்கிற வேற்றுமை இவ் வாறாகவே க்ரமத்தை மாற்றி ப்ரதிஜ்ஞை முதலிய ஐந்து அவ யவங்களையும் நையாயிகர் பிரயோகம் செய்வதால் அவயவ விபர்யாஸம் என்று முன்கூறிய நிக்ரஹஸ்தானம் ஏற்பட்டது. இங்கு மூன்று அவயவங்களை பிரயோகம் செய்தலின் மூலம் க்ர மத்தோடு ஆச்ரயங்களையும் கைவிட்டதாகிறது இவ்வாறாக இரண்டுக்கும் உள்ள வேற்றுமையைக் கண்டுகொள்க. ஆனால் இவ்வாறாக ந்யூநம் என்கிற தோஷத்தை வாதியானவன் காட் டிய பிறகு பிரதிவாதியானவன் "பிறகு செய்வதாகச்" சொல் லும்பக்ஷத்தில் அப்பொழுது அது முன்கூறிய விபர்யாஸம் என் கிற நிக்ரஹஸ்தானமேயாகும். 4. இந்த ரீதியிலே விகல்பந்யூ நம் என்றும் ஒரு பிரிவு உண்டு என்கிறார்கள். அதாவது 'ஒரு விஷயத்தைப்பற்றி அப்படியா? இப்படியா ? என்பதாக பல விதமாகவும் விகல்பம் செய்தும் முக்யமாய் ஸம்பாவிதமாயுள்ள மற்றொரு கோடியை விகல்பம் செய்யாமல் கைவிடுதலே' அது மேலே ஒன்றும் தோன்றாமையாலோ அல்லது 'இதுவே போது மானது' என்கிற எண்ணத்தினாலோ ந்யூநம் என்கிற நிக்ரஹ ஸ்தாநம் ஏற்படுகிறது. இதனால் தனது ஸித்தாந்தத்தில் ஏற்பட் டதும் அதுவும் குறைவின்றி பூர்ணமானதும் வாதத்தில் சொல் லப்படவேண்டும் என்று நியமம் செய்தபடி

## (12) அதிகம்.

பொருத்தமுடையதும், உபயோகமுள்ளதும், புநருக்தம (திரும்பச்சொல்வது) ல்லாததுமாயிருக்கச் செய்தேயும் தமது ஸித்தாந்தத்தின்படி ப்ருக்ருதத்திற்குப் போதுமானதாய் தீர்மா னம் செய்யப்பெற்றதொன்றை பிரயோகம் செய்து, அதோடு நிற்காமல் மறுபடி மற்றொன்றையும் அதே ப்ருக்ருதத்திற்காக வே ப்ரயோகிப்பதை அதிகம் என்கிறது.

அவற்றில் (1) ஹேத்வதிகமாவது—பர்வதமானது அக்நி யோடு கூடியது- புகையிருப்பதால், வெளிச்சம் இருப்பதால் என்று இவ்வாறாகக் கண்டுகொள்வது. புகையினாலே பர்வதத் திலே அக்நியானது தீர்மானிக்கப்பெறுகிறது. வெளிச்சமிருப்

பதாலே என்று மற்ருெரு ஹேதுவை பிரயோகம் செய்வதை ஹேத்வதிகம் என்ப.

(2) த்ருஷ்டாந்தாதிகமாவது—மடம்போலே மஹாநஸம் (மடப்பள்ளி) போலே என்றிவ்வாருக இரண்டு மூன்று உதாஹரணங்களை ஒரே ஸ்தலத்தில் காட்டுவது.

(3) வ்யாப்த்யதிகமாவது— ஹேதுவிற்கு ஸாத்யத்தோடுள்ள நியத ஸம்பந்தமாகிய அந்வயவ்யாப்தியையும், ஸாத்யத்தின் அபாவத்திற்கு ஹேதுவின் அபாவத்தோடுள்ள நியதஸம்பந்தமாகிய வ்யதிரேகவ்யாப்தியையும், ஒரே ஸ்தலத்தில் காண்பிப்பது.

(4) தர்காதிகமாவது—ஒரு விஷயத்திலே அநேக அநிஷ்டங்களை ஆபாதநம் செய்தல். அதாவது—அக்நியில்லாவிடில் தூமமும் கூடாது என்று தர்க்கத்தைக் காட்டியபிறகு தூமத்திற்கும் அக்நிக்கும் ஏற்பட்டுள்ள கார்ய காரணத்தன்மை போய்விடும் என்ருப்போலே மற்ருெரு தர்க்கத்தை பிரயோகம் செய்தல் என்ப. (5) தூஷணுதிகமாவது இந்த ஹேதுவானது அஸித்தி என்கிற தோஷமுடையது என்று தூஷணம் சொல்லியபிறகு விரோதம் என்கிற தூஷணமும் உண்டு என்பதாக அதிக தூஷணத்தைக் காட்டுதல் முதலியதாகும். (6) விசேஷித்து ஹேதுதிருஷ்டாந்தம் முதலியதை காட்டாமல் பொதுவாகக் காட்டினுலும் முன்கூறிய ஹேத்வதிகம் முதலிய தோஷம் உண்டு. அதாவது - புகை முதலியது இருப்பதால் என்ருல் இங்கு ஹேத்வதிகம் மஹாநஸம் முதலியது போலே என்ருல் த்ருஷ்டாந்தாதிகம் என்று கண்டுகொள்வது, பொதுவாக முதலியது என்கிற பதத்தினுலே அதிக ஹேது முதலியதைக் காட்டியதால் இந்த தோஷம் ஏற்படுகிறது என்ப. (7) தமது ஸித்தாந்தத்தின்படி அதிகமாயுள்ள அவயவங்களை பிரயோகம் செய்தலும் இவ்வாருக அதிகம் என்கிற நிக்ரஹஸ்தானமாகும் என்றும் இதனுல் சொல்லியதாயிற்று. பௌத்தர் முதலியோர் மூன்று அவயவங்களை பிரயோகம் செய்தல் முதலியது இதற்கு உதாஹரணமென்ப. அப்படி பிரயோகிக்குமிடத்தில் புநருக்தி என்கிற நிக்ரஹஸ்தாநம் என்ருலும் கூடலாம். பௌத்தர் முதலியோருடைய மதமும் அப்படியே. தத்வ நிர்ணயத்தை உத்தேசித்து சிஷ்யாசார்யர் செய்யும் வாதத்தில் முன்கூறிய ஹேத்வதிகம் த்ருஷ்டாந்தாதிகம் வ்யாப்த்யதிகம் தர்காதிகம் முதலியது உண்மையில் தூஷணமாகாது. அதிகமாகவேனு குறைத்தோ ஹேது முதலியதை பிரயோகம் செய்தலின்மூலும் தத்வ நிர்ணயம் ஏற்படுவதிலேயே இருவருக்கும் நோக்கு. ஆகையால் அதிகம் என்கிற தோஷமில்லை.

ஜயத்தை உத்தேசித்துச் செய்யும் ஜல்பம் முதலிய வாதத் திலோவெனில் 'ஹேது முதலியவை எவ்வளவு நேரக்கூடுமோ அவற்றை எல்லாம் சொல்லுவது' என்று வாதிகள் ஒருவருக் கொருவர் நியமம் செய்துகொண்டிருந்தால் அதிகம் என்கிற தோஷம் கிடையாது. அன்றிக்கே அதிகம் பிரயோகிப்பது பூஷணமுமாகும். எவ்வளவு ஹேது முதலியவை நேரக்கூடு மோ அவையெல்லாம் சொல்லுவதென்பது ஸர்வஜ்ஞனை எம்பெருமானைத் தவிர்த்து மற்றவருக்கு சக்யமன்று; ஆகை யால் பெரும்பாலும் அப்படி நியமம் ஏற்படாது. இந்த ந்யூநம் அதிகம் என்கிற நிக்ரஹஸ்தானங்கள் இரண்டையும் வாதி காட் டியபிறகு பிரதிவாதி அவை இசையும்பக்ஷத்தில் அபஸித்தாந் தம் என்கிற நிக்ரஹஸ்தானத்தை அவன்மேல் வாதி சொல்ல வேண்டும். அதாவது ஜல்பம், விதண்டை இவைகளில் ந்யூநம் அதிகம் இவை கூடா என்கிற ஸித்தாந்தத்திற்கு விரோதம் ஏற்படுகிறது என்று காட்டவேணுமென்ப.

(பூ) அதிகாவயவங்களை பிரயோகம் செய்வது முதலியது அதிகம் என்பதான நிக்ரஹஸ்தானமாகும் என்று முன்பு நிரூப ணம் செய்யப்பெற்றிருக்கிறது. அது தனித்தவொரு நிக்ரஹ ஸ்தானமன்று; அபஸித்தாந்தம் என்கிற நிக்ரஹஸ்தானமே அது என்று நையாயிகரில் சிலர் சொல்லுகிறார்கள் (ஸி) அது ஸரியன்று. அப்படியாகில் அவயவ ந்யூநம் முதலியதாக முன் கூறிய நிக்ரஹஸ்தானமும் அபஸித்தாந்தத்திலேயே சேர்ந் துள்ளது; தனிப்பட்டதன்று; என்று கொள்ளலாமன்றோ (பூ) தமது ஸித்தாந்தத்திற்கு விருத்தமானதை இசைவதே அப ஸித்தாந்தமாகும்; ந்யூநம் என்கிற நிக்ரஹஸ்தான ஸ்தலத்தில் தம் ஸித்தாந்தத்திற் சிலதை கைவிட்டதேயன்றி விருத்தமான தைச் சொல்லவில்லையே; ஆகையாலே ந்யூநமானது அபஸித் தாந்தத்திற் சேராது எனில் (ஸி) இதுவும் ஸரியன்று, ந்யூநஸ் தலத்திலும் தம் ஸித்தாந்தத்திற்கு விருத்தமாக வியபிசாரம் முதலிய தோஷத்தைப்பிரயோகம் செய்யுமிடத்தில் அது அப ஸித்தாந்தமேயாகலாமன்றோ (பூ) ஸித்தாந்த விருத்தமாக விய பிசாரம் முதலியதைச் சொல்லியபோதிலும் அதை இசைய வில்லையே; விருத்தத்தை இசைவதேயன்றோ அபஸித்தாந்த மாகும்; அறியாமையாலேயன்றோ வியபிசாரத்தை வாதி காட் டியது; எனில் (ஸி) அதிகமாக அவயவங்களை பிரயோகம் செய்யுமிடத்திலும் 'விருத்தமானதை இசைவது' என்பது கிடையாது. ஆகையால் ந்யூநத்தைப்போலவே அதிகமும் அபஸித்தாந்தத்தில் சேராது.

(பூ) 'வாதிக்கு இசைவு இராவிடில் வியபிசாரத்தை அவன் சொல்லுவானேன்' இத்யாதியாக உள்ள யுக்திகளினுலும் வாதிக்கு அவன் சொல்லியதில் இசைவு இருப்பதாகக் கல்பநம் செய்யமுடியாது (ஸி) இசையாவிடிலும் நிரூபணமில்லாமை முதலியகாரணத்தினுலும் அவன் அதை பிரயோகம் செய்திருக்கலாமன்றோ. மேலும் அவனுடைய வியவஹாரமாத்திரத்தைக் கொண்டு அவன் அதை இசைந்திருப்பதாகக் கல்பநம் செய்வதானுல் ந்யூநஸ்தலத்திலும் அப்படி கல்பனம் செய்யலாமாகையால் அதுவும் அபஸித்தாந்தமேயாகப் பிரஸங்கிக்குமே. ஆகையாலே நையாயிகர் சிலர், அதிகத்தை அபஸித்தாந்தத்தில் அந்தர்ப்பாவம் செய்வது ஸரியன்று.

தத்வ நிர்ணயத்திற்காக வாதம் செய்யுமிடத்தில் 'அநேக ஹேது தர்க்கம் முதலியவற்றைக் காட்டி ஸாத்தியத்தை ஸ்தாபிக்கவேண்டும்' என்கிற அபிஸந்தியினுல் அதிகமான ஹேது முதலியவற்றை பிரயோகம்செய்து அதனுல் ஏற்பட்டுள்ள ஸம்ஸ்காரத்தினுல், ஜயார்த்தமான ஜல்பம் முதலிய ஸ்தலத்திலும் வாதிகள் அதிகம் பிரயோகிக்கக்கூடும். மேலும் மறுதி முதலிய காரணத்தினுலும் கூடும். ஸாத்யம் ஸித்திப்பதற்கு உபயுக்தமான ஹேது முதலியவற்றையே பிரயோகம் செய்ய வேணடும்; அதிகமாகக் கூடாது என்று நிர்ணயம் செய்தபடி.

## (13) புநருக்தம்

வாதி சொல்லிய அர்த்தத்தை பிரதிவாதியானவன் சப்தத்தைக்கொண்டும் ஆக்ஷேபமூலகமாயும் அறிந்திருந்தும் பிரயோஜனமின்றிக்கே மறுபடி சொல்வதை புநருக்தம் என்கிறது அர்த்த புநருக்தம் என்றும் ஆக்ஷேப புநருக்தம் என்றும் அது இரண்டுவிதம். அவற்றில் முதலாவதான அர்த்த புநருக்தமாவது: சப்தமானது அநித்யம்; த்வநியானது நாசமுடையது; என்றிவைபோன்றது. இரண்டிலும் சப்தமே வேறுபட்டிருக்கிறது. அர்த்தம் ஒன்றே. இரண்டாவது ஆக்ஷேப புநருக்தமாவது— விவாத விஷயமான பூமி முதலியது, கர்த்தாவோடு கூடியது, என்றிவ்வாறுனது. இங்கு 'விவாத விஷயமானது' என்றிவ்வளவாலேயே ஆச்ரயத்தைக் காட்டுமதுபோதுமானது. விவாதமானது பல ப்ரகாரங்கொண்டதேயாகிலும் இங்கு 'கர்த்தாவோடு கூடியது' என்பதாக ஸாத்யத்தைக் காட்டியதின்மூலம் பூமிமுதலியதே இந்த ஸாத்தியத்திற்கு ஆச்ரயம்; (பக்ஷம்) என்று விசேஷித்து ஏற்பட்டுவிடுகின்றது: இப்படி அர்த்தாத்

தாகவே ஸித்திக்குமதை மறுபடி 'பூமி முதலியது என்கிற சப்தத்தினால் விசேஷித்துச் சொல்லுவதால் இங்கு அர்த்தபுநருக்தம் என்கிற தோஷமுண்டு. இவ்வாறாகவே 'தேவதத்தன் வீட்டில் இருக்கிறான். வெளியில் இல்லை என்பதும் முதல்வாக்யத்தினாலேயே வெளியில் இல்லை என்று அர்த்தஸித்தமாகின்றது. மறுபடி அதைச்சொல்லியது புநருக்தமே. இவ்வாறு உதாஹரணம் காண்க. ஆக்ஷேபஸித்தமானதை மறுபடி சொல்லுவதில்லை' என்று வாதிகளுக்கு வ்யவஸ்தை ஏற்பட்டிருக்குமாகில் இந்த ஆக்ஷேப புனருக்தம் தோஷமாகும். இல்லாவிடில் தெளிவு பிறப்பதற்கு உபயோகப்படுதலால் இது தோஷமன்று.

(பூ) சிலர் சொல்லுவதாவது—'சப்த புநருக்தம் என்று, புநருக்தத்தில் மற்றொரு பிரிவும் உண்டு; 'சப்தம் நித்யமானது, சப்தம் நித்யமானது என்று இரண்டுமுறை ஒரே சப்தத்தைப் பிரயோகம் செய்தல் அதற்கு உதாஹரணம்; என்பதாக அவர் சொல்லுவது (ஸி)அது ஸரியன்று. ஏனெனில் இரண்டு வாக்யங்களும் ஒரே அர்த்தத்தை போதிக்கின்றனவாகில் முதலில் காட்டிய அர்த்த புநருக்தத்தில் சேருகின்றன; வெவ்வேறு அர்த்தமுடையவைகளாகில் புநருக்தி தோஷமேயில்லையே. (பூ) 'வேறு அர்த்தமுடையதேயாகிலும் ஒரேமாதிரியான சப்தத்தை பிரயோகம் செய்யக்கூடாது' என்பதாக வ்யவஸ்தையுடன் வாதம் செய்யுமிடத்தில் இந்த சப்த புநருக்தி தோஷத்திற்கு அவகாசமுண்டே (ஸி) எனில் அப்படியாகில் ஹல்லு, அச்சு (மெய்யெழுத்து. உயிரெழுத்து) முதலியதை முன் சொல்லியதை மறுபடி சொல்லுவதாலும் 'புநருக்தம், என்பதாகக் கொண்டு இதையும் பிரித்துச்சொல்ல பிரஸங்கிக்குமே. இப்படியும் சில தீரர்கள் நியமம் செய்யக்கூடுமன்றோ. ஆகையால் சப்த புநருக்தம் என்கிற மூன்றாவது பிரிவு கூடாதென்ப. தான் ஒருதடவை சொல்லியதை எங்கு பிரதிவாதியாவது, ஸபையோர்களாவது அறியவில்லையோ; அங்கு அவர்களுக்காக மறுபடியும் சொல்லுவது கூடும். அங்கும் 'மூன்று முறைகளே சொல்லவேண்டும், என்று நியதியுண்டு; ஏனெனில் ஸபையோர்கள்,—தாங்கள் கவனிக்கவில்லையோ அல்லது புத்திக்குறைவோ என்று இவ்வாறான ஸந்தேஹத்தினால் மூன்று முறையே சொல்லுதலை அபேக்ஷிக்கக்கூடும்; பிறகு வாதியின் வாக்ய தோஷம் முதலியவற்றையே அவர்கள் நிர்ணயம் செய்வதால் மறுபடி சொல்லுதலை அவர் அபேக்ஷிப்பதில்லை. அர்த்தம் எளிதில் புலப்படாவண்ணம் நீண்ட பதங்களை பிரயோகம்செய்வது

முதலியதை வக்ராநுமாநம் என்கிறது, முன்கூறிய மஹாவித்யாநுமாநம், ப்ரஹேளிகைபோன்றதே அது. இவ்வாறு வக்ராநுமானத்தையும் பிரதிவாதி ஸம்மதமிருந்தால் பிரயோகம் செய்யலாம் என்று முன்பே சொல்லியிருக்கிறது. அப்படி வக்ராநுமாநம் எங்கு பிரயோகிக்கப்பெறுகின்றதோ அங்கு வாக்யம் நீண்டிருப்பதாலும் அர்த்தம் குடிலமாயிருப்பதாலும் இவ்வாறான காரணங்களால் 'இன்னது அர்த்தம்' என்பதாக சடக்கென நிர்மாணிக்க முடியாது. ஆகையால் மறுபடியும் மறுபடியும் அந்த வாக்யத்தைச் சொல்லும்படி சபையோர் அபேக்ஷிக்கக்கூடும்; அப்படி அவர்களுக்கு ஜிஜ்ஞாஸை ஏற்படுமாகில் அந்த ஜிஜ்ஞாஸை சாந்தியடையுமளவில் மேன்மேலும் அதையே வாதி சொல்வது கூடும். அது புநருக்தமாகாது. 'இங்கு மூன்றிற்குமேலும் சொல்லவேண்டியது அநுமதமேயாகையால் மூன்று தடவைகளுக்குமேல் சொன்னதையே சொல்லலாகாது, என்று முன்கூறிய நியமமானது இல்லை; சபையோர் அநுமதி செய்யவேண்டுமளவும் சொல்லவேண்டுமென்பதிலேயே, மூன்றுதடவைகள் சொல்வது என்கிற அந்த நியமத்திற்கு நோக்கு என்கிறார்கள் சில ஆசார்யர்கள். புநருக்தமென்கிற நிக்ரஹஸ்தானம் ஏற்படுவதற்குக் காரணம்-- வாதிகளின் அஸாமர்த்தியம், தெளிவித்தல் என்கிற எண்ணம் முதலியவைகளே. பயனற்ற வார்த்தையை விவாதகாலத்தில் சொல்லக்கூடாது என்பதாக இதனால் ஏற்பட்டது.

## (14) அநநுபாஷணம்

மூன்றுமுறை தெளியும் ரீதியில் வாதிசொல்லிய சப்தத்திற்கு சபையோர் அர்த்தமறிந்திருக்கச்செய்தே பிரதிவாதியானவன் தனது அறியாமையை வெளிக்குக் காட்டாமல் முறைப்படி அதை அநுவாதம் செய்யாமையை அநநுபாஷணம் என்கிறது. அது ஐந்துவிதமானது. அதாவது:- (1) தூஷிக்கப்படவேண்டிய ஏகதேசத்தை மாத்திரம் அநுவாதம் செய்தல். (2) வாதி சொல்லியதற்கு அதிகமான அம்சத்தை அநுவதித்தல். (3) மாற்றிச்சொல்லல் (4) அநுவாதம் செய்யாமலே பதிலுரைத்தல் (5) ஒன்றும் சொல்லாமல் மௌநம் ஸாதித்தல் என்பதாக. வாதி சொல்லியதைப்பார்க்கில் அதிகமாக அநுவாதம் செய்தலை அதிகம் என்கிற நிக்ரஹஸ்தாநமாகச் சிலர் கொள்கிறார்கள். இந்த அநநுபாஷணத்திற்குக் காரணமாவது:- "வாதியை வெல்லுவதற்கு அவனுடைய வாக்யத்தை தூஷிப்பது

மாத்திரம் போதுமானது; அநுவாதம் எதற்காக? என்கிற எண்ணம்; அல்லது அநுவாதம் செய்தற்குரிய ஞாநமில்லாமை, இவ்விரண்டிலொன்று அநநுபாஷணத்திற்குக் காரணம் தூஷிக்கவேண்டிய அம்சத்தை, வியவஸ்தை ஏற்பட்டிருந்தால் வாதி சொல்லிய அதே சப்தத்தினாலோ வ்யவஸ்தை ஏற்பட்டிராவிடில் வேறு சப்தத்தினாலோ அநுவாதம் செய்யவேண்டியது. வாதத்திற்கு ஏற்பட்ட நியமத்தை அநுஸரித்து அநுவாதம்செய்தல்வேண்டும் என்று இதனால் சுருங்கச்சொல்லியதாயிற்று.

## (15) அஜ்ஞானம்

தெளிவு பிறப்பிப்பதற்காக வாதியானவன் ஒரே விஷயத்தை வெவ்வேறு ரீதியில் மூன்றுமுறை சொல்லி அதன் கருத்தை சபையோரில் யாரேனும் ஒருவர் அறிந்திருக்கச் செய்தும், பிரதிவாதியானவன் "அது எனக்குத் தெரியவில்லை" என்று சொல்லுவது அவனுக்கு அஜ்ஞாநம் என்கிற தோஷமாகும். "ஒரே அர்த்தத்தைத் தெளிவிக்கச்செய்வதற்காக வெவ்வேறு ரீதியில் வார்த்தையினால் காண்பிப்பது கூடும்" என்று தெரிவிப்பதற்காகவே 'வெவ்வேறு ரீதியில்' என்பதாகச்சொல்லாது. தத்வநிர்ணயித்திற்காகச் செய்யும் வாதத்திலோவெனில் தனது அஜ்ஞாநத்தை பிரதிவாதி காட்டுவது குற்றமன்று. அது தோஷமல்லாமையினாலேயே பிரதிவாதி தெளியுமளவும் அந்த வாதத்தில் சொல்லவேண்டும். இந்த அஜ்ஞாநம் என்கிற நிக்ரஹஸ்தாநம் ஏற்படுவதற்குக் காரணமாவது— தனக்குத் தெரியவில்லையென்பதனால் அவிஜ்ஞாதார்த்தம் (பிரதிவாதி சபையோர்களில் ஒருவரும் புலப்படாத சப்தத்தை பிரயோகம் செய்தல்) என்கிற நிக்ரஹஸ்தாநத்தை வாதியிடம் ஆரோபணம் செய்துவிடலாம் என்கிற எண்ணம்; அல்லது பிரதிவாதியானவன் உண்மையுரைப்போனாய் ருஜுஸ்வபாவம் பெற்றிருக்கை. இவ்வாறான காரணத்தினால் தன் அஜ்ஞாநத்தை பிரதிவாதி காட்டுவது கூடும். ஜல்பம விதண்டை என்கிற வாதங்களில் தன்னுடைய அஜ்ஞாநத்தை பிரதிவாதியானவன் வெளியிடக்கூடாது என்று இதனால் சுருங்கச் சொல்லியதாயிற்று.

## (16) அப்ரதிபா

வாதத்திற்கு உட்கார்ந்தபிறகு ஒன்றைச் சாதிப்பது தூஷிப்பது முதலியது ஒன்றும் தோன்றாமையை அப்ரதிபா என்கிறது.

"உத்தரஸ்யாப்ரதிபத்திரப்ரதிபா" என்பதாக முன்னோராகிய கௌதமருடைய ஸூத்ரம். பிற்பட்டது (தூஷணம்)

தோன்றாமையை அப்ரதிபை என்கிறது என்பதாக இதன் கருத்து. இங்கு பிறபட்டது என்கிற அர்த்தமுள்ள 'உத்தரஸ்ய' என்கிற சப்தத்தினால் கூறப்பட்டதாகிய ஸாதநத்தையும் விவக்ஷிக்கவேண்டும். தூஷணம் தோன்றாமையைப்போலவே ஸாதநம் தோன்றாமையும் தோஷமே யாகையால் இவற்றுக்கு யாதொரு வித்யாஸமும் இல்லையே. ஆகிலும் முதல்கக்ஷிக்குப் பிறகு இரண்டாவது கக்ஷியில் ஏற்படக்கூடிய ஸாதநமும் 'உத்தரஸ்ய' என்கிற சப்தத்தின் முக்கியப் பொருளாகலாமே என்பது ஸரியன்று. ஸபாகம்பம் முதலிய காரணத்தினால் முதல் முதலிலேயே ஒன்றும் தோன்றாமையாகிய அப்ரதிபை நேரக்கூடுமன்றோ! அநநுபாஷணம் என்று முன்கூறிய நிக்ரஹஸ்தானத்திற்கும் அப்ரதிபை என்கிற இதற்கும் வேற்றுமை என்னவெனில்- அங்கு ஸரியான அநுவாதமே கிடையாது. இங்கு அநுவாதம் செய்தும் பிழையுள்ளதாகவும் ஸாதனமோ தூஷணமோ ஒன்றும் தோன்றாமை என்பதாக இரண்டிற்குமுள்ள வித்தியாஸம்; இப்படியே மற்றுக்கும் இதற்கும் வேற்றுமையைக் கண்டுகொள்க.

ஆகாசத்தை நோக்குவது, பூமியில் எழுதுவது கேசத்தை ஸமீகரணம்செய்தல் பயம், கஷ்டம் என்றிவை முதலியவைகளும் அப்ரதிபையின் பிரிவுகளே என்கிறார்கள் சிலர். அது ஸரியன்று. ஸமீசீநமாயுள்ள வார்த்தையைச் சொல்லும்போது அவை இருந்தாலும் பாதகமில்லை. அஸமீசீநமாய்ச் சொல்லுகையிலோ அல்லது ஒன்றும் சொல்லாதிருக்கச் செய்தேயோ அவை (அஸமீசீநபாஷணமும் அவசநமும்) யே தூஷணங்களாகின்றன. அப்பொழுதும் ஆகாசத்தை நோக்குவது முதலியவை நிக்ரஹஸ்தாநங்களாகமாட்டா. ஆகாசம் நோக்குவது முதலியவற்றை விலக்கி வாதம் செய்யவேண்டும்'' என்று நியமம் செய்துகொண்டு நடத்தும் வாதத்திலோ அவைகள் நிக்ரஹஸ்தாநங்களேயாகும். அப்பொழுதும் அவை உக்தவிரோதம் (சொல்லியதற்கு விருத்தமாகச்செய்கை) என்று முன்கூறிய மற்றொரு நிக்ரஹஸ்தாநத்திலே அந்தர்பூதங்களாகின்றன. தனித்தொரு நிக்ரஹஸ்தாநங்களாகமாட்டாவே! அன்றிக்கே யாதொரு வார்த்தையும் சொல்லத்தோன்றாமல் மௌநியாக இருக்கச்செய்தே ஆகாசத்தைப்பார்ப்பது முதலிய அந்த சேஷ்டைகள் ஏற்படுமாகில் யாதொன்றும் தோன்றாமையால் மனதில் ஏற்பட்டுள்ள கஷ்டத்தை அவையே ஸூசநம் செய்கின்றன. க்ரூரபுத்தியில்லாத ஸாதுக்கள் அந்நிலையில் அப்ரதிபை என்கிற நிக்ரஹஸ்தாநத்தையும் காட்டுவது கூடாது. அந்த சேஷ்டைகளினாலேயே ''அவர்கள் தோற்றார்கள்'

என்பது வெளிப்படையாயிற்றே. அவர்கள் முதலில் தாமே காட்டிய அந்த சேஷ்டைகளாலேயே அவர்கள் அஹங்காரமும் போய்விட்டதன்றோ. வாதியோ பிரதிவாதியோ தான் சொல்ல வேண்டிய ஸந்தர்ப்பத்தில் மௌநம்ஸாதிக்கக்கூடாது. என்கிற வ்யவஸ்தை இதனால் ஏற்பட்டது. ஒன்றும் தோன்றாமைக்குக் காரணம் — ஸபாகம்பம், புத்தியில்லாமை, அதிகச்சிரமம், முதலிய அநேகம் உண்டு என்பதாகக் கண்டுகொள்க.

## (17) விக்ஷேபம்

வாதத்தில் இறங்கியபிறகு இதற்கு ஏதேனுமொரு வழியால் விச்சேதத்தை விரும்பி வெளியில் செல்வதற்காக ஆவச்யகமல்லாத ஓர் வ்யாஜத்தைச் சொல்வது **விக்ஷேபம்** எனப் பெறும். "இப்பொழுது எனக்குப் பெரியதான காரியமகடந்து விடுகிறது" என்றுப்போல் உதாஹரணம் காண்க. ஆவச்யகங்களான தேஹோபாதி முதலிய லௌகிகவ்யாபாரங்களும் ஸந்த்யோபாஸநம் முதலிய வைதிக கர்மங்களும் உண்மையாகில் அவை நிக்ரஹஸ்தாநங்களாகமாட்டா. வாதத்திற்கு தடைசெய்யவேணுமென்கிற எண்ணமிருப்பதற்கு இவை ஸூசகங்களாக மாட்டாவன்றோ. உதாஹரணம்—யுத்தத்தில் இறங்கியபிறகு மேலும் யுத்தம் செய்ய விருப்பமிருக்கச் செய்தேயும களைப் பாறுவதற்காக மத்தியில் ஓய்வுபெறுவது நிக்ரஹமாகமாட்டா. ஏதேனுமொரு வியாஜத்தைச் சொல்லியபிறகும் வெளிச்செல்லாமல் மேலும் வாதத்தை நடத்துவதாகில் அது **விக்ஷேபம்** என்கிற இந்த நிக்ரஹஸ்தானமாகாது. அந்த வியாஜத்தை வாதி காட்டியது வாதத்தை முடிப்பதற்காகவன்றே ப்ரக்ருதம் உபயோகமில்லாமையால் அப்பொழுது அந்த வார்த்தையானது அர்த்தாந்தரம் (ப்ரக்ருதோபயோகமற்ற வாக்கியம்) என்கிற நிக்ரஹஸ்தாநமாகும். தனக்கு தோல்வி ஏற்படும் என்ற பயம் முதலிய காரணத்தினால் வாதிகள் வெளியிற் செல்லக்கூடும். வாதப்போர் நடக்கும்போது வெளியேறுவதென்பது வாக்கு வல்லமையுடையவர்களால் இகழப்பெற்றது. அதை வாதிகள் செய்யக்கூடாதென்று தீர்மானம்.

## (18) மதாநுஜ்ஞை

தன்மேல் பிரதிவாதி சொல்லிய குற்றத்தை இசைந்து பிரதிவாதிக்கும் தோஷமுண்டு என்று ஆபாதநம்செய்தலே **மதாநுஜ்ஞை** என்கிறது. உதாஹரணம்—"உன்வார்த்தையானது தோஷமுடையது" என்று பிரதிவாதி சொல்ல அதை

இசைந்து 'உன்னுடைய வாதத்தையும தோஷமுடையதே என்றுபபோல் சொலவது. "நீ திருடன்" என்றால் "நீயும திருடன" எனகிறுப்போலேயுள்ளது இவவார்தலதை. இந்த மதாநுஜ்ஞையின ஸ்வரூபததில இரணடு அமசஙகள சேர்நதிருக்கின்றன; தன தோஷத்தை இசைவது என்பது ஒன்று. பிறர்தோஷததைச் சொலவது என்பது மற்ரென்று. இவற்றில பிறருககு தோஷமிருககச் செய்தேயும தன்னுடைய தோஷததை இசைவது உசிதமேயனறு; ஆகவே தன தோஷததை இசைவது' எனகிற அமசததிலை நிகரஹஸ்திறகுக காரணமாகிறது இநத **விக்ஷேபம்**."பிறர் தோஷத்தைச சொலவது" எனகிற அமசததினுல இது நிகரஸ்தானமனறு. (பூ) அபபடியாகில "பிறர தோஷததைச சொலவது" எனகிற அமசத்தை விக்ஷேபததின லக்ஷணததில ஏனசேரக்கவேணடும? (ஸி) எனில இந்த ஆக்ஷேபமஸரியனறு, ஏனெனில-தன தோஷத்தை இசைநது மௌனமாயிருநது,விடுமவனுககு **அப்ரதிபை** (ஒன்றும தோன்றாமை) எனகிற நிக்ரஹஸ்தானமேயுளது' **மதாநுஜ்ஞை** எனகிற மற்ரெரு நிகரஹஸ்தானததிறகு அவனிடம உபயோகமிலலை. பிறரிடம தோஷததைப்பறறிய பரதிபை (அறிவு) யோடுகூடியவனும மௌனியாகாமல பிறர தோஷத்தைக் காட்டுமவனுமான வாதியை **மதாநுஜ்ஞை** என்கிற இநத நிகரஹஸ்தானத்தைககொணடே வாததிலிருநது விலககவேணடும எனபதற்காக "பிறர தோஷத்தைச சொலவது" எனகிற அமசத்தையும இந்த லக்ஷணததில சேர்ததது; என்றறியவும. பிறனுககும தோஷமுணடு எனபதாக பரதிபநதியாகச சொலவதன்மூலம தனபக்ஷத்தை ஸமாததனம செயதுவிடலாம் எனகிறஎணணததினுல் இநத **மதாநுக்ஞை** எனகிற நிக்ரஹஸதானம் உணடாகிறது. பிரதிவாதி காட்டிய தோஷத்தை இசையாமலோ அலலது அந்த தோஷத்திற்குத் தனனிடம பரிஹாரத்தைக்காட்டியபிறகோதான் பிறர் பக்ஷததில தோஷததைச சொலலவேணடுமெனகிற ஸாராமசம் இநத நிகரஹஸ்தான நிருபணதினுல ஏற்பட்டது.

## (19) பர்யநுயோஜ்யோபேக்ஷணம்

அவச்யம காட்டவேணடிய நிகரஹஸதானத்தை தகுந்த ஸமயததிலும காடடாமலிருபபதை **பர்யநுயோஜ்யோபேக்ஷணம்** எனகிறது (1) பாயநுயோஜ்யோபேக்ஷணம எனகிற இநத நிகரஹஸதானத்தை ஸபையோர் காட்டவேணடும எனகிறார்கள; சிலர். (2) 'பிரதிவாதியாகிய இவனைப் பரீக்ஷிப்பதற்காக

இல்லாததொன்றையே நான் சொன்னேன் ; மந்த புத்தியுள்ள இவன் அதையும் அறிந்துகொள்ளவில்லை ; என்பதாக கர்வங் கொண்டு தானும் காட்டலாம் என்கிருர் மற்றவர். (3) இது நிக்ரஹஸ்தாநமேயன்று என்கிருர்கள் மற்றும் சிலர். ஏனெனில் :- இதை வாதிகளின் பேரில் ஸபையோர் காட்டவேணுமென்பதற்கில்லை ; அப்படிக்காட்டாவிடில் ஸபையோருக்கு அபஜயம் என்பதற்கில்லையே ; அவர்களுக்கு ஜயத்தில் விருப்பமில்லையன்றே, ஒரு வாதியானவன் மற்ருெரு வாதியின் பேரில் இதை காட்டவேணுமென்பதற்குமில்லை. எனக்கு ஏற்பட்டுள்ள நிக்ரஹஸ்தாநத்தை ஸமயத்திலும் நீ உத்பாவநம் செய்யவில்லையே, என்பதின் மூலம் தன்தோஷத்தை இசைந்ததாகின்றமையால் தனக்கே ஒருஸமயம் அபஜயம் ஏற்பட்டுவிடுவதற்குக் காரணமாயுள்ள இந்த வாக்கியத்தை புத்தி பூர்வகமாய்ச் சொல்வது கூடுமோ ? மேலும் தன்னுடைய தோஷத்தைத் தானே வெளிப்படுத்திக்கொண்டு பிறரை தூஷிப்பது என்பது பரிஹாஸத்திற்கு இடமானது ; 'ஜாதிப்ரஷ்டனேடு இன்று நீ ஸஹவாஸம் செய்தாயே' என்றவனைக் குறித்து நான் இயற்கையாகவே ஜாதிப்ரஷ்டன் என்பதை இவனறிந்துகொள்ளவில்லை என்ருல் குறிப்பிட்ட தினத்திலே பதிதன் என்று சொன்ன பிறரை திரஸநம் செய்வதேயானுலும் இயற்கையாகவுள்ள தன் தோஷத்தைத்தானே வெளியிடுவதை உலகம் பரிஹாஸம் செய்யும் அப்படியே இங்கும் தனக்கும் பரிஹாஸம் மற்றவரால் ஏற்படுமாகையால் இப்படி ஒருவனும் சொல்லக்கூடாது. என்பதாக இது நிக்ரஹஸ்தானமேயன்று ; என்கிறவர்களின் நோக்கம்.

இவற்றில் மேல் சொல்லப்போகிற இதுவே ப்ராமாணிகமானது. அதாவது—ஜல்பம், விதண்டை ஆகிய வாதங்களில் இந்த பர்யநுயோஜ்யோபேக்ஷணமானது எப்பொழுதும் நிக்ரஹஸ்தானமாகமாட்டாது. சபையோரும் எஜமானனும் வாதிகளுடைய புத்திக்குறைவைக் காட்டுவதற்கு மாத்திரம் இது உபயோகமுடையது. (பூ) வாதிகள் பரஸ்பரம் ஜயாபஜயங்களோ தத்வநிச்சயமோ ஏற்படாவண்ணம் மேன்மேல் அஸமீசீன வாதம் செய்வதை அஸத்கதை என்பதாக மூன்ருவது ஆஹ்நிக முடிவில் சொல்லப்போகிறது. அந்த வாதமானது வாதி ப்ரதிவாதிகளுக்கு ஆறு கக்ஷி வரையில் நடைபெறக் கூடியது. அதற்குமேல் சபையோர்களே நிர்ணயம் செய்ய

வேண்டியவர்கள். ஆகவே இந்த பர்யநுயோஜ்யோபேக்ஷண மென்கிற நிக்ரஹஸ்தானத்தை ஆறு கக்ஷிகளுக்குப் பிறகு சபையோர்கள் வாதிகளிடம் இருப்பதாகக் காட்டலாமே; ஜல்பம் விதண்டை இவைகளிலும் இந்த நிக்ரஹஸ்தானத் துக்கு அவகாசமுண்டன்றோ? (ஸி) ஆறு கக்ஷிகளுக்குப்பிறகு எடுத்துக்காட்டுவது மற்றுமுள்ள நிக்ரஹஸ்தானத்திற்கும் பொதுவானது. வேறொரு நிக்ரஹஸ்தானத்தோடு சேராமல் பர்யநுயோஜ்யோபேக்ஷணமென்கிற இந்த நிக்ரஹஸ்தான மொன்றே தூஷணமாகும் ஸ்தலமென்பது கிடையாது. ஆனால் ஜல்பம் விதண்டை இவைகளில் இது தூஷணமாகா விடினும் தத்வ நிர்ணயித்திற்காக ஏற்படும் வாதத்திலோ சபையோரும் தானும் தாங்கள் அறிந்தவகையில் இந்த நிக்ரஹ ஸ்தானத்தை எடுத்துக்காட்டவேண்டும். இந்த நிக்ரஹ ஸ்தானத்தை வாதி நிருபித்துக்காட்டினாலும் சபையோர் நிரு பித்தாலும் இரண்டு விதத்திலும் உண்மையான அம்சத்தைத் தெளிவது கூடுமன்றோ தன்னுடைய தோஷத்தைத் தானே எடுத்துக்காட்டுவதும் தத்வ நிர்ணயத்திற்காகவே. ஆகையால் அது தோஷமாகாது. பர்யநுயோஜ்யோபேக்ஷண மாத்திரம் நிக்ரஹஸ்தானமாகுமிடத்தில் இதை ஜல்ப விதண்டைகளில் தூஷணமாகக் காட்டக் கூடாது என்று தேறினாலும் பல நிக்ரஹஸ்தானங்கள் சேருமிடத்தில் ஏதேனுமொன்றை நிருபித்துக்காட்டி பர்யநுயோஜ்யோபேக்ஷணத்தை விட்டு விடுவது தோஷமாகாதோவெனில் அது தோஷமன்று மற் றொரு நிக்ரஹ ஸ்தானத்தை நிருபித்ததினாலேயே பிரதிவாதிக்கு அபஜயம் ஏற்பட்டுவிட்டதால் இதை நிருபணம் செய்யாமை யால் பாதகமொன்றுமில்லை. ஆகிலும் 'எல்லா தூஷணங் களையும் எடுத்துக்காட்டவேண்டும்' என்பதாக ஏற்கனவே வாதிகளுக்கு வாதாரம்ப காலத்தில் வ்யவஸ்தை ஏற்பட்டிருக்கு மிடத்தில் ஏதேனுமொன்றையே நிருபித்துக்காட்டுவதாகிலும் பர்யநுயோஜ்யோபேக்ஷணமென்கிற நிக்ரஹஸ்தானமில்லை. 'நியமத்தைத் தவிர்தல்' என்கிற தூஷணமே உளது.

அப்படி எல்லா தூஷணங்களையும் காட்டவேண்டுமென்று நியமம் ஏற்பட்டிருந்தால் அதற்கு பாதகம் வாராமைக்காக ஜல்ப விதண்டைகளிலும் பர்யநுயோஜ்யோபேக்ஷணத்தைத் தானே எடுத்துக்காட்டவேண்டும். தன்னுடைய தோஷத் தைத் தானே ஆவிஷ்காரம் செய்வது என்கிற ஒரே தோஷம்

தனக்கு இப்பொழுது உள்ளது. பிரதிவாதிக்கு இரண்டு தோஷங்கள் ஏற்படுகின்றன. 'எல்லா தோஷங்களையும் காட்டவேண்டும்' என்கிற நியமத்தை கைவிட்டது ஒன்று பர்யநுயோஜ்யோபேக்ஷணம் என்பது மற்றொன்று. இப்படி இரண்டு தோஷங்கள் பிரதிவாதிக்கு உண்டு. தனக்கோ தன் தோஷத்தைத்தானே வெளியிட்டதின் மூலம் அபகர்ஷ மென்பது ஒன்றே, மேலும் பர்யநுயோஜ்யோபேக்ஷணத்தைத் தான் நிருபித்துக்காட்டாவிடில் 'எல்லா தூஷணங்களையும் நிருபித்துக்காட்டவேண்டும்' என்கிற நியமத்திற்கு விரோதம் ஏற்பட்டுவிட்டது என்பதாக பிரதிவாதியானவன் வாதியின் பேரில் தூஷணம் சொல்லக்கூடும். அதற்கு பர்யநுயோஜ்யோ பேக்ஷணத்தை எடுத்துக்காட்டினாலன்றி பரிஹாரம் ஏற்பட மாட்டாது.

'எல்லா தூஷணங்களையும் எடுத்துக்காட்டவேண்டும்' என்கிற நியமம் செய்துகொள்ளாமல் செய்யும் ஜல்ப விதண்டாவாதங்களிலும் பிரதிவாதிக்கு இரண்டு நிக்ரஹ ஸ்தானங்கள் ஏற்படுமிடத்தில் இந்த நிக்ரஹஸ்தானத்தைக் காட்டுவதின் மூலம் தனக்கு ஒரு தூஷணமே ஏற்படுவதால் இவ்வகையில் தனக்கு ஜயம் உண்டு. ஆகவே பிரதிவாதி யிடம் மற்றொரு நிக்ரஹஸ்தானம் ஏற்படும்போது அதற்குத் துணையாக இந்த பர்யநுயோஜ்யோபேக்ஷணம் என்கிற தூஷணத்தையும் நிருபித்துக்காட்டவேண்டும். இந்த நிக்ரஹஸ்தான நிருபணத்தால் ஏற்பட்டது என்னவெனில், தன்னுடைய தோஷத்தை மறைத்தும் பிரதிவாதி தோஷத்தை உபேக்ஷிக்கக்கூடாது. வாதத்தில் அதை அவசியம் வெளிப் படுத்தவேண்டும் என்கிற நியாயமே ஸித்தித்தது. 'சிறிய தவறுதல்தானே' என்கிற எண்ணத்தினால் பிரதிவாதியின் தோஷத்தை உபேக்ஷிக்கக்கூடும். அதன்மூலம் பர்யநுயோஜ் யோபேக்ஷணம் என்கிற இந்த நிக்ரஹஸ்தானத்திற்கு அவகாசம் ஏற்படுகின்றது.

ஸ்ரீ நியாயபரிசுத்தியின் அநுமாநாத்யாயத்தில்
இரண்டாவது ஆஹ்நிகத்தின் விவரணம்
ஸம்பூர்ணம்.

ஸ்ரீமதே நிகமாந்த மஹாதேசிகாய நம: